உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருவுசாத்தானமாகிய

# சூதவனபுராணம்.

## ஷை வசனம்.

இவை

ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணாக்கருள் ஒருவரும

காரைக்குடி

ராம. கு. ராமநாதச் செட்டியாரவர்கள்

குமாரருமாகிய

சொக்கலிங்கச்செட்டியாரவர்கள்

இயற்றியன.

ஷை திருவுசாத்தானமாகிய கோயிலூர்

ஸ்ரீமந்திரபுரீஸ்வரசுவாமிகோவில் தர்மகர்த்தராகிய

காரைக்குடி

தி. அரு. அ. வெ. அண்ணாமலைச்செட்டியாரவர்கள்

விருப்பத்தின்படி

ஷை கோயிலூரைச்சார்ந்த ஆலங்காடு

ராம. சித. சிதம்பரச்செட்டியாரால்

மதுரை:

தமிழ்ச்சங்கம் பவர்ப்பிரஸில்

அச்சிடப்பெற்றன.

1905.

# சருக்க அட்டவணை.



ஆகூ திருவிருத்தம் ௯௫௨௦

சிவமயம்.

# முகவுரை

சீர்திகழ்வளத்தி னேர்கெழுசோழ
நாட்டினிலிந்திரன் வேட்டிடவந்த
பூவிரிபொழில்சூழ் காவிரியாற்றி
னன்குரையளவுறுத் தென்கரைத்தலங்களு
ளவந்தனையகற்றுஞ் சிவஞ்சுயம்பிலிங்கத்
திருவுருக்கொண்டு மருவிவீற்றிருந்தருள்
சூதவனமென மாதவர்போற்றுங்
காழிவாழ்சேயி னேழிசைத்துதிபெறுந்
தன்னையடைந்தோர் மன்னுபிறப்பொடு
மருவுசாவகற்றுங் *திருவுசாத்தானம்

என்னுந் திவ்விய க்ஷேத்திரத்திற்கு நூற்றறுபத்தொன்பது பாடலுள்ள தமிழ்ப்புராணமொன்று சாம்புவனுடை ஸ்ரீஅம்பலவாண சுவாமிகள் சேர்த்துவைத்திருந்த அநேக நூல்களோடிருந்தது. ஆலங்காட்டுச் சிவபுண்ணியச் செட்டியார் அதைப்பார்த்தெழுதிய பிரதியொன்று எனக்குக் கிடைத்தது. இப்புராணம் இயற்றினாரின்னாரென்று தெரியவில்லை. பின்பு ஸ்ரீஅம்பலவாணசுவாமிகள் மரபில்வந்த வேலாயுத பண்டாரமவர்களிடமிருந்த மேற்படி மூலப்பிரதியும் சித்தமல்லி ப்ரஹ்மஸ்ரீ அப்பாசாமி சாஸ்திரியாரவர்களிடமிருந்த வடமொழிப்புராணமொன்றும் பின்னத்தூர் ப்ரஹ்மஸ்ரீ அ நாராயண

* இந்தத் திருவுசாத்தானமானது தஞ்சாவூர் ஜில்லா திருத்துறைப்பூண்டித்தாலூகா முத்துப்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு அடுத்த வடதிசையில் ஒரு மைல்தூரத்திலுள்ளது. இது கோயிலூரென்னு நாமம் வழங்கப்பெற்றுவருகிறது. இத்தலத்திலுள்ள ஸ்ரீமந்திரபுரீசுர சுவாமி திருக்கோயிலில் ராசகோபுரமும் ஸ்ரீசோமாஸ்கந்தசுவாமி முன்மண்டபமுதலான பலவிடங்களு மிகவுஞ் சீரணப்பட்டு அதிசீக்கிரத்தில் சீரணோத்தாரணஞ் செய்யவேண்டிய நிலைமையிலிருக்கின்றது. இது ஸ்தலம் தீர்த்தம் மூர்த்தி மூன்றாலும் அளவில்லாத அத்தியற்புத அதிமகத்துவமுள்ளதென்பது ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத்தாலும் இப்புராணத்தாலும் இனிது விளங்கும். தனவந்தர்களாயுஞ் சிவபுண்ணிய சீலர்களாயுமுள்ள சிவநேசச்செல்வர்கள் இதனைச் சீரணோத்தாரணஞ்செய்து கும்பாபிஷேகஞ்செய்வது அத்தியாவசிய மகாசிவபுண்ணியமாகும்.

சாமி அய்யாவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தன. வடமொழிப்புராணம் ஈற்றில் ஜீரணமாயிருந்தது. திருவுசாத்தானத்தில் முன் தலபுராணபடனஞ் செய்துவந்த பெருகவாழ்ந்தான் பிரம்மஸ்ரீ வனமாலி அய்யங்காரவர்கள் வீட்டிலிருந்த ஜீரணமில்லாத வடமொழிப் பிரதியொன்று கிடைத்தது. தஞ்சாவூர்ச் சரஸ்வதிமால் முதலிய பலவிடங்களில் தேடியும் தமிழிலாவது சமஸ்கிருதத்திலாவது வேறு பிரதிகள் கிடைக்கவில்லை. திருவுசாத்தானத்தில் பிரம்மஸ்ரீ வயித்தியநாதக்குருக்களவர்களிடத்தில் ஒரு வடமொழிப்பிரதியிருந்து முற்றும் ஜீரணமாய்ப்போய்விட்டதாகத் தெரிந்தது. இத்தலபுராணம் இங்ஙனம் அருபதிசையடைந்துவருவதை நோக்கி இதை அச்சிட்டு வெளிப்படுத்தாதவரையில் இந்த உத்தமோத்தம சிவசரித்திரம் உலகோபகாரமாகாமல் மறைந்துவிடுமேயென்ற கவற்சியால் இதனையச்சிட்டு வெளிப்படுத்தவேண்டுமென்னும் பேராசை யென்னுள்ளங்கவர்ந்தெழுந்தது. அதன் வழிப்பட்டேனாதலால் இதுவும் எம்பிரான்றிருவருளேயாமெனக்கருதிப் பெருகவாழ்ந்தான் பிரம்மஸ்ரீ நாராயண சாஸ்திரியாரவர்களைக்கொண்டு வடமொழிப்பிரதியைக் கிடைத்த (கசுக) செய்யுளுள்ள தமிழ்ப் புராணத்தோடு ஒத்துப்பார்த்ததில் தமிழில் மிகவுஞ் சுருக்கமாகவும் சில சரித்திரங்கள் விடுபட்டு மிருந்தமையால் வடமொழியிலுள்ள விரிவின்படியே சரித்திரங்களும் விடுபடாது தமிழில் ஒருபுராணஞ்செய்வித்து அச்சிடவேண்டுமென்று யோசித்துப், புறச்சமயக்களைகணீங்கிச், சுத்தாத்துவித சைவசித்தாந்த மென்னுந் தெய்வப் பயிர் தழைத்தோங்க, மதுரை ஜில்லா காரைக்குடியில் ஒன்பதுகோயில் வகுப்பினராகிய நகரத்தார்களுள்ளே, கல்வாசநாட்டில் இளையாற்றக்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்கூரான ராஜநாராயணபுரத்தில் பிள்ளைபட்டி திருவேட்பூருடையான் என்னுங்குடிப்பெயர் பெற்ற, ரா. ம. கு. ராமநாதச்செட்டியாரவர்கள் செய்த அருந்தவப்பயனாற் புதல்வராக அவதரித்தவர்களும், யாழ்ப்பாணம் நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் திருவடிக்கன்பராய் அவர்கள் திருச்சந்நிதானத்தில் நீடித்தகாலந் தொண்டுபூண்டொழுகினவர்களும், தேவிகோட்டை ஸ்ரீ வன்றொண்டரவர்கள், அனவரதமதுராபுர நிவாஸஸ்ரீ மெய்யப்பசுவாமிகள், மேற்கண்டநாவலர்பெருமான் மருகரும் முதன்மாணாக்கரும் வித்துவசிரோன்மணியுமாகிய ச. பொன்னம்பலபிள்ளையவர்கள், சாலிவாடி புரநிவாஸ யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டை ஸ்ரீ அம்பலவாண நாவலரவர்கள் முதலிய ஆன்றோர்களிடத்து இலக்கண இலக்கிய சாஸ்திராதிகளை நன்கு கற்றுணர்ந்தவர்களும், மதுரைச்சித்திவிநாயகர் திருவிரட்டைமணிமாலை, மயின்மலைச்சந்தவிருத்தம், குன்றைச்சிலேடைவெண்பா, காழிச்சிலேடைவெண்பா, தில்லைச்சிலேடை வெண்பா

திருவாரூர்த் திரிபந்தாதி, திருவாலவாயமகவந்தாதி, திருப்புத்தூர்த் தலபுராணம்,வீரசேகரமாமணிமாலை, சௌந்தரேசதயாநிதிமாலை, பசுவந்தனை வெண்பாவந்தாதி, ஷை திருவூசல் காரைக்குடி மீனுட்சிசுந்தரேசர் திருவூசல், திருக்கழுக்குன்ற மகிமாசங்கிரகஸ்தவம், மெய்யப்பசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி, கற்பகவிநாயகர் பதிற்றுப்பத்தாதி சித்தவடமான்மிய முதலிய பலநூல்களை யியற்றியவர்களும், தம்மிடத்திற் கற்குமாணுக்கர்கள் மிகவிரும்பிக்கேட்ப மிகவிருப்பத்தோடு சிரமநோக்காது அரியபொருள்களு மெளிதில் விளங்க உதாரணாதிகளோடு நன்குபோதிப்பவர்களும் பெரியபுராணாதி சைவசாஸ்திரங்களைக் கேட்போர் ஆனந்தபரவசர்களாகும்படி விரித்துப் பிரசங்கிப்பவர்களும் தங்கள் குலவிருத்தியாகிய வியாபாராதிகளிற் சிறிதும் காலஞ்செலுத்தாது உள்ளபடியே மெய்யன்போடு சிவபூசாதி சிவபுண்ணியங்களையே தமக்கு முயற்றொழிலாகக்கொண்டு ஒழுகுபவர்களுமான மகா-ள-ள-ஸ்ரீ சொக்கலிங்கச் செட்டியாரவர்களிடத்தில் அடியேன் கருத்தை வெளியிட்டேன். அவ்வேண்டுகோளுக்கிசைந்து வடமொழியிலுள்ளபடி சரித்திரங்களை மொழிபெயர்த்துச் சிவாலயத்திருப்பணி மகாகும்பாபிஷேகம் சிவபூஜாவிதி முதலியவைகளை பத்ததி முதலிய நூல்களைகொண்டும் விரிவாகச்சேர்த்து (௯௱௨௰) திருவிருத்தங்களாற் செய்துதந்தார்கள். "செய்யாமற் செய்தவுதவிக்கு வையகமும் வானகமுமாற்றலரிது" "பயன்றூக்கார் செய்தவுதவி நயன்றூக்கி னன்மை கடலிற்பெரிது" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் அருளியபடி அவர்கள் செய்தபேருதவிக்கு அவர்கள் பெரும்புகழை யெடுத்துப்பேசுதலன்றி வேறியாது கைம்மாறுடையேன். இப்பெருஞ் சிறப்பினதாகிய சூதவனபுராணம் அத்தலத்தில் ஸ்ரீபிரகந்நாயகி சமேத ஸ்ரீமந்திரபுரீசுவரசுவாமி சந்நிதியில் சாலியவாகனசகாப்தம் ௲௮௱௨௰௬ சோபகிருது ஆனிமீ ௫௨ சுக்கிரவாரம் உத்திரநக்ஷத்திரம் கடகலக்கினங்கூடிய சுபமுகூர்த்தத்தில் தொடங்கிச் சிங்கவனம் ப்ரம்மஸ்ரீ சுந்தரேசபாரதிகள் முதலியோர் கூடிய வித்துவசங்கத்தில் அரங்கேற்றப்பெற்றது. இப்புராணம் கற்றோர்க்குமாத்திரமன்றி மற்றோர்க்கும் பயனுகும்வண்ணம் என்வேண்டுகோளின்படி இந்நூலாசிரியராலேயே சரித்திரமாத்திரம் விளங்கச் சுருக்கமாய்க் கத்தியரூபமாகவுஞ் செய்யப்பெற்றுப் பின் சேர்க்கப்பெற்றது.

இங்ஙனம்,

ராம. சித. சிதம்பரச்செட்டியார்,

ஆலங்காடு.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் மகாவித்வான்
ப்ரஹ்மஸ்ரீ உ, வே. சாமிநாதையரவர்கள்
இயற்றியது.

பூமேவுக்கொக்கைமுடிப்பரன்றிருவுசாத்தானபுராணந்தன்னைத்
தேமேவுதமிழ்மொழியிற்காரைநகர்ச்சொக்கலிங்கச்செல்வன்றன்னா
னாமேவுபத்தியமாநடையாகவியற்றுவித்துநல்கினனாற்
பாமேவுபழம்பதியாமாலங்காட்டிலங்குசிதம்பரவேண்மன்னே. (க)

அப்பணியுஞ்செவ்வேணிக்கருமிடற்றுமாதேவர்க்கன்பினோடெந்
துப்பணியுந்திருப்பணியாங்கற்பணியும்பொற்பணியுந்தொண்டர்க்காய
வெப்பணியுநிதம்புரியுஞ்சிதம்பரவேள்சொற்பணியென்றெவரும்போற்று
மிப்பணியின்றியற்றுவித்ததியல்பன்றேவிறும்பூதென்றிசைப்பார்யாரே. ( )

---

சிங்கவனம் வித்துவான் ப்ரஹ்மஸ்ரீ சுப்பபாரதியவர்கள்
குமாரரும் திருவாரூர் போர்ட்டு ஸ்கூல் உபாத்தியாயருமாகிய
சுந்தரேசபாரதிகள்
இயற்றியது.

திருமருவும்பெருமருமத்தொருவனொருவன்றியுருச்செறிந்துமுன்னா
னாருமருவும்பூதலத்தையூடுருவவிடந்துபன்னாளுழன்றுங்காணா
மருமருவுதிருவடிகளைவிருகாணடியோமத்தோர்மாதின்
றருமருவுமாளிகைக்குச்சந்துநடந்தருள்புகழ்வாய்தலமுன்னாக. (க)

மாணாட்டுமூவர்திருப்பாடல்பெறுவனதலங்கள்வரம்பிலாத
நாணாட்டுய்த்திடவடைந்தோர்தயக்கிருமைநலமளிக்கநாகத்தோங்குங் [ஞ்
கோணாட்டுப்பினமணியின்குவால்கொழிக்கும்பொன்னிநதிகுறையின்றாட்
சோணாட்டுப்பலதலத்துளொருதலமீதென்றறிஞர்சொல்லப்பெற்று. (உ)

சீதவனக்குளிர்காவில்வடாதுதிசைபோய்வெம்மைசெறிந்துநைந்த
வாதவனபரியேழுமவனுமவன்றேர்ப்பாகாமருணன்றானு
மாதவனமாற்றுபின்றெருதுதிசைக்கேகுபெருவளப்பம்வாய்ந்த
ஆதவனமான்மியத்தைத்தென்மொழியிற்புகல்கவெனத்தூயசிலன்.

ஈகையன்புபொறையுடைமைதன்மனையையேவிழைதலேற்றகல்வி
யோகையுடன்விருந்தோம்பன்முகமலர்ச்சியெதுவரினுமுண்மைபேச
லாகவுளவுடன்பாட்டுக்குணங்களும்வெஃகாமைவெகுளாமையாதி [ன்.
வாகவெதிர்மறைக்குணனுநிறைந்தோருங்குதன்னிடத்துவளரப்பெற்றோ

ஆலங்காட்டினில்வாழ்வோனிராமசாமிக்குரிசிலருளுமைந்தன்
பாலங்காட்டியவிழியார்பூதிசாதனவழியேபடர்வோன்கங்கைக்
கூலங்காட்டியகாசிமுற்றலங்கடரிசித்தகுணவான்வேணி
வாலங்காட்டியவரவாபரணரடிமறவாதவணிகர்கோமான். (ரு)

பூபாலர்தமைப்போற்றுமுழவுதொழிலுடன்முன்னம்பூமன்றந்த
காபாலியிருதலத்துளெழுந்தருளுமீழத்துக்கலன்களுய்த்தே
தாபாலுள்ளனபொருளொன்றீட்டுதிருவான்கல்வித்தகைமைசான்ற
கோபாலனிடத்துமுனந்தமிழ்நிரம்பப்பயின்றுகடல்குடித்தோனன்னான் (சு)

நிதம்பரவுமறைகாணாதனுக்குக்கோயிலொன்றுநிருமித்துப்பல்
லிதம்பரவத்தாபித்துக்கும்பாபிடேகமுதலியற்றிவெள்ளை
விதம்பரவமணிசடையார் தமக்குவிளை நிலம்பல்ல விடுத்த சீர்த்திச்
சிதம்பரமெய்த்திருநாமமுலகுய்யப்புனைகுணவான்செப்பவன்னோன். (எ)

தன்னையே நிகர்குணத்தோன்வணிககுலதிலகனருடழைத்தகண்ண
னன்னையேயிடங்கலந்தவப்பனையே பூசைபுரிந்தளவில்கால
மின்னையே யுடலைமதியாத பெருவாழ்க்கை யன்வன்றொண்டமேலோன்
றன்னையே யாசானாக்கொண்டு தமிழ்நூல் பயின்றதவத்தின்மிக்கான். (அ)

இலக்கணமே யிலக்கியமே முதலாயவாழி கடந்திவற்றினான்மா
வலக்கணடைவதுதீராதென்னவருஞ்சித்தாந்தவம்புராசி
மலக்கணகன்றிடவுண்டுபிரபந்தம்புராணமெனுமழைபெய்மேகஞ்
சொலக்கணமும்வீணாக்காக் காரைநகர்ச் சொக்கலிங்ககுணசீலன்.

சொன்னயமும் பொருணயமு மெடுத்தவிட மெலாந்துதையத்துரிசொன்
மன்னுவமவுருவகமேமுதலாயவணியியலின்வகையுஞ்செய்ய [றின்றி
பன்னரியமடக்கியமகந்திரிபுபாடலொருறும்பரவப்பத்தி
யின்னறியதேன்றுளிக்கக்கல்வி நிறைபுலவர்தலையெடுத்துமெச்ச. (கo)

நாடுநகரத்தினணிபெருகவிரும்பாயிரத்தினலமுன்றோன்றப்
பீடுபெறு பரமனுக்குக் கோவிலமைத்திடு முறைமை பெருமான்றன்னை
வீடுபெறவவ்விடத்துத்தாபிக்கும்விதியவற்கு விழாநற்பூசை
யோடுபுரிந்திடன்முதலவிரித்துலகோர் பேறெய்தவுணாத்திட்டானே. (கக)

## கும்பகோணம்டவுண் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

பின்னத்தூர்ப்ரமஸ்ரீ அ. நாராயணசாமியையரவர்கள்
இயற்றியது.

பொன்பூத்தபுவிவரைப்பிற்புகழ்பூத்தபுனனாட்டிற் பொலிவுமிக்கோன்
மன்பூத்தவுசாத்தானமாத்தளியிலேத்தெடுத்துவானோர்போற்ற
மின்பூத்தமெல்லிடைபால்விளங்கவுறைவிடைப்பாகவிமலமூர்த்தி
தென்பூத்த சேவடிக்கேசெழுந்தொண்டு செறிந்திலங்கு சிங்கைதமேயான்.

வேறு

மதியகரிஞ்சுமாட மல்கியவாலங்கானப்
பதிவயிற்போந்தோறும்பாவலர் பயிலுஞ்செந்நாத்
துதியமையிராமசாமித்தூயவன்றவத்தின்றோன்ற
னிதியமை வணிகர்கோமானிறைகலைபலவும்வல்லோன். (௨)

தானுறைபதியாவீசன்றளியதொன்றாக்கியன்பின்
வானுறுவாரணசிவரந்திமண்ணியாண்டேய்
மானுறுசெங்கையீசன்வடிவமொன்றேந்திப்போதந்
* தீனுறுகோயிலேற்றியியைபுறபபதிட்டித்திட்டோன். (௩)

போதமேபொலியும்புந்திப்புண்ணியப்புனிதன்பூந்தார்ச்
சீதமேய்குவளைமார்பன்சிதம்பரவள்ளல்கற்றோர்
யோதமேபெருகநல்குமுதலவணமுக்கண்முன்னோன்
சூதமாவனபுராணந்தமிழினிற்றொகுத்தியென்ன. (௪)

கருத்தகத்திருத்திச்செல்வங்கவினியகாவைமூதூர்த்
திருத்தகுபதியின்வைகுஞ்சிவயலிபதிநூறேற்று
மருத்தியன்சொக்கலிங்கப்பெயர்பெறுமண்ணலென்பான்
விருத்தநல்யாப்பினைக்கவிரித்தனனொருநகுமன்றே. (௫)

* ஈண் - இவ்விடம்.

---

முத்துப்பேட்டை ப்ரஹ்மஸ்ரீ செகநாதையரவர்கள் குமாரர்

## சுப்பிரமணிய அய்யரவர்கள்

இயற்றியது.

திருவாழும் வலக்கணுமை திருமுலைப்பான் மணங்கமழ்தே வாரமேய்ந்த
பொருவாத சூதவன புராணமதைத் தமிழ்க்கவியாற் புனைதல்செய்தான்
தெருள்காவைக குடிராம நாதனருள் சொக்கலிங்கச் செம்மலன்பே
தருமாலங் காட்டினில்வாழ் சிதம்பரவேண் மனுவின்வணர்ந்தரணிபோற்ற.

## செம்படவன்காடு ப்ரஹ்மஸ்ரீ
## ரா. இராமானுசையங்காரவர்கள்
இயற்றியது.

பூமேவுசோலைதிகழ்பொன்னூர்காரைக்குடியிற்
றேமேவுராமநாதன்சேயா—மாமேவு
நாமணக்குஞ்சொக்கலிங்கநாவலன்செய்சூதவனப்
பாமணக்கும்பார்விசும்பப்பால்.*

---

சேற்றூர் சமஸ்தான வித்துவான்
மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள் இயற்றியது.

ஓர்ந்தறிஞர்தலமுதன்மூன்றினுஞ்சிறந்ததானமெனவுசாவலாலே
நேர்ந்தவுசாத்தானமெனும்பெயர்படைத்ததலப்பெருமைநிகழ்பேரன்பு
கூர்ந்தறிவாற்கண்டுமகிழ்ந்தாலங்காட்டினில்வைசியகுலதீபம்போ
லார்ந்தபுகழுறுராமசாமியருள்சிதம்பரவேளவனிதன்னில். (க)

இனையதலமான்மியங்கண்முழுதுமோர்ந்தெதிரிறைஞ்சியாருமுய்ய
நினைவுகொடுசெந்தமிழாற்புராணமொன்றுபாடுகென்றுநிகழ்த்தக்கேட்டுத்
தனைநிகர்காரைக்குடிவாழ்சொக்கலிங்கக்கலைவல்லான்றானேசொற்றான்
அனையவனுக்கிதுவழக்கந்திருப்புத்தூர்ப்புராணமுதலறைந்தான்மன்னோ. ()

---

மதுரை விவேகபாநு பத்திராதிபர்
## எம். ஆர். கந்தசாமிக்கவிராயரவர்கள்
இயற்றியது.

கங்கையினுமிகச்சிறந்தகாவிரித்தண்புனனாட்டிற்கனகநாட்டிற்
றங்குமவர்முனிவர்பிறர்சார்ந்திறைஞ்சிப்போற்றுபெருந்தலமாமேன்மை
பொங்குதிருவுசாத்தானமெனுஞ்சூதவனமகிமைபூவில்யாருஞ்
சங்கையிலாதறியவொருபுராணமுயர்தண்டமிழிற்றருவாயென்ன. (க)

பாலங்காட்டியநீறுங்கண்மணியுநால்வரருட்பாடல்பாடுந்
தாலங்காட்டியவொலியுங்கொடுவெருவார்ச்சிவமெனவேதனதுட்கொண்டு
சீலங்காட்டியசுகுணன்சிவபூசாதுரந்தரபூசிதனீர்சூழு
மாலங்காட்டினில்வாசன்பலகலைதேர்சிதம்பரமாலன்பாற்கூற. (உ)

தருவாய்வந்திவ்வுலகிலிரப்பவர்க்குநிதிவாரித்தருவானுமட்
பெருவாய்மைச்சிதம்பரமால்வேண்டியாங்குளுற்றல்பெரும்பேறுமென்று
வொருவாதமனத்துவகையுவட்டெடுப்பவுடன்பாடியுதவினன்செந்
திருவாரும்வளக்காரைக்குடிநகர்வாழ்வணிகர்குலதிலகமானோன். (௩)

பலகலையுஞ்செவிமடுத்துமனத்தகத்துச்செறித்துவைத்தபண்பன்முன்ன
மிலகலையுண்டவன்பொதிகையெய்தவெகுநூலிசைத்தோ னெனதுநெஞ்சம்
விலகலையுறுதுதன்பாலுறப்பிணித்தோன்சிவநேசமெய்ம்மையாள
னுலகலையும்படியடையும்பவப்பிணிக்குமருந்தெனவேயுரைக்கும்வாக்கான்.()

இன்னபெருந்தகையாகுஞ்சொக்கலிங்கவள்ளலிவணிந்தசொன்றே
யன்னதனையெழுதாதவெழுத்திலிட்டுப்பலவாக்கியளித்தான்முன்னஞ்
சொன்னபுகழ்ச்சிதம்பரமாலிவ்விருவர்பெருமைமுற்றுஞ்சொல்வார்யாரே
பன்னுதமிழ்வரைப்பினுக்கிப்புராணமரும்பேறுதவும்பண்பிற்றுமே (௫)

---

ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணாக்கருளொருவராகிய
காரைக்குடி.
## ராம. கு. மெ. மெய்யப்பசெட்டியாரவர்கள்
இயற்றியது.

பொன்னிருக்கும்பூவிருக்கும்பொழிலிருக்கும்புகழிருக்கும்பொன்னிசூழ்ந்து
தென்னிருக்கும்பஃறலங்கள்செறிந்திருக்குஞ்செம்பியர்கோன்றெய்வநாட்டி
ற், கொன்னிருக்கும்வலனிருக்குங்கோதண்டச்சிலையிருக்குங்கொற்றத்திண்
டோண், மின்னிருக்குஞ்செங்கண்ணவெண்ணகையகருநிறத்தவீராமன்.

காப்பூத்தகரதலத்தானருள்பூத்ததிருவுளத்தான்கவினுர்தெய்வப்
பூப்பூத்தபொலன்கொடியைப்புலைபூத்தபேராக்கன்புரிந்துவவ்வி
நாப்பூத்தவிலங்கைபுகநலம்பூத்தவிளவலொடுநண்ணாஞ்சுநீ
கோப்பூத்தசுக்ரீவன்குணம்பூத்தகவிவீரக்குழுக்களோடும். (உ)

பொன்னிலங்கைபுகுமாறும்புண்ணியிடத்தனையாறுபுரியுமாறு
மன்னிலங்கவுசாவியரனருள்பெறலினுசாத்தானமாண்பேர்பூண்டு
மின்னிலங்குசிறைக்கலுழனமிர்தகடங்கவர்ந்தேகும்விசையிற்சிந்து
தென்னிலங்குதிவலைமூளைத்தெழுசூதமாவிருக்கச்செறிவிற்றுகி. (௩)

மாலருளாற்பன்னூற்றுப்பஃறலையபணிக்காசுமருவியாங்கட்
கோலமலிதிருக்கோயினிருமித்துப்பெருஞ்சாந்திகுலாவச்செய்தாங்
கேலவருச்சனைபுரிந்துபரமனருட்பேறடையுமியல்பிற்றுகி
ஞாலமெலாமுய்யவருள்பொழிபெரியநாயகியாநங்கையோடு. (௪)

மாமந்திரேசனருளமுதேசனுயர்சூதவனேசனன்பர்க்
கேமஞ்செய்வானென்றமினிதுவீற்றிருந்தருளுமியல்பிற்றாகித்
தூமஞ்சார்குழற்றிருவுஞ்சொற்கொடியும்விற்கொடியுந்துதைவதாகி
நாமஞ்சால்சூதவனசரிதவாரியந்தமிழினல்காவென்று. (௫)

அச்சூதவனக்குயர்பூருவதிசையிற்குரோசமொன்றிலளப்பில்சீர்த்தி
வைச்சூதையிளந்தென்றலாய்ப்பரவிநறுஞ்சோலைமலர்த்தேன்வாரி
யுச்சூதக்காரளியும்பொன்னளியுமிசைபாடவுலவும்பொற்குன்
றைச்சூதைப்பொருமுலையாரம்மனையாடரியத்தினழகுவாய்ந்தே. (௬)

வெருவாலங்காட்டிப்பின்விழையமுதுங்காட்டாழிவிழியார்விஞ்சுந்
திருவாலங்காட்டியலும்பாட்டியலுநிகழங்கின்சிறப்பாற்சோதி
யுருவாலங்காட்டியெழுபணிமணியின்பேரொளியாலுயர்வானேய்க்கு
மருவாலங்காட்டிலுறைபூவசியர்குலசிகாமணியாய்வந்தோன். (௭)

வரராமசாமிபுரிபெருந்தவங்களுருத்திரண்டுவந்தாலொத்தோன்
கரவாதபெருங்கொடையாற்கன்னன்முகில்கற்பகப்பூங்காவைவென்றோ
னுரவாரும்பெருங்குணத்தாலொழுக்கத்தாலுதிட்டிரனையொப்பான்மூலக்
குரவாருஞ்சேவடிக்கேமுக்கரணமொன்றியன்புகுயிற்றுநீரான். (௮)

இதம்பரவுதிரிசங்குதனிக்குமரனிவனேயாமென்னவாயற்
புதம்பரவப்புரந்துசிவபூசனையாதியநியதிபுரிந்துதொண்டர்
பதம்பரவிப்பகட்டெருமைப்பாகனுளம்பேரச்சம்பதித்தோன்சீர்த்திச்
சிதம்பரவேள்சைவசிகாமணியுளத்திற்பேரன்புசெறிந்துவேண்ட. (௯)

சொன்னலனும்பொருணலனுஞ்சுவைநலனுமிசைநலனுந்தொன்னூலோது
மென்னலனுமியாண்டுமுறுமிதனலனேர்ந்தினிதருந்தியின்பமீக்கூர்
பொன்னுமுயர்வெள்ளியுஞ்செம்புங்கவரும்வானமுதிற்புந்திவேறாய்
முன்னரலைகடைந்துகிடைத்ததுவேம்பின்காவென்றேமொழியாநிற்ப. (௧௦)

சித்தாந்தக்கோளுமுயர்சைவபரிபாடைகளுந்திகழுமுண்மைச்
சித்தாந்தற்பரனடியார்பெருமிதமுமன்னரடிசிரங்கொண்டாங்கர்ச்
சித்தாந்தரங்கபத்திசெய்திறனுஞ்சிவபூசைச்சிறப்புந்தெய்வச்
சித்தாந்தமிதுபூர்வபக்கமெனநனிவிளக்குந்தெளிவுமல்க. (௧௧)

வன்னனையுங்கற்பனையுமடக்கும்யமகமுந்திரிபுமருவத்தேருஞ்
சொன்னயஞ்சேர்புலவரெலாந்தஞ்சேமநிதியெனச்சொல்லயாண்டு
மன்னுநவாதமுமொருபான்வனப்புந்தோமொழிந்தவயங்கமுந்நூல்
பன்னுசிவார்ச்சனைகும்பாபிடேகவிதிமுதல்வரய்மைபாவித்தோன்ற. (௧௨)

சருக்கமிரண்டேழாகத்தொகுத்துவகுத்தருளருமைவிரித்துச்சாற்றும்
பெருக்கமுறுவிருத்தயாப்பாயிரத்தைந்நூற்றிருபான்பிறங்கச்செய்து
மருக்கமழ்பூங்கலைமகளுமலைமகளாயாராய்ந்துமதிக்கநாமந்
திருக்கிளருஞ்சூதவனபுராணமெனப்புனைந்தொருநூல்செய்தான்மன்னோ.

இத்தகுநூலினிதியற்றியிசைபடைத்தான்யாவனெனினியம்புஞற்பாம்
பைத்தகடற்பாருலகிற்பன்னூட்டுந்தமிழ்ச்சங்கம்பல்குநாடாய்ச்
சத்தொடுசித்தானந்தவுருவினர்மூவரும்புரக்குந்தகைமைத்தாகி
முத்தமிழுநான்மறையுமங்கெழுத்துமறுதொழிலோர்முறையுமோங்கி. ()

கண்டிகழுமலங்கவினுர்காரிகழும்பூங்குழலார்கவினுர்நீலக்
கண்டிகழுமலர்முகத்தார்கனியிகழுஞ்செவ்வாயார்காமர்பூஞ்சி
கண்டிகழுமலங்கடையுஞ்சாயலினுர்நெடுமாறர்காதற்றேவி
கண்டிகழுமலமுனிவன்சொற்பெறுநீற்றொளிபரப்புகவின்சேர்நாட்டில். ()

பன்னகர்க்குந்தலைநகராய்ப்பணிநகர்க்குமணிகுலவுபாகசாதன்
பொன்னகர்க்கும்புடைநகர்க்குங்களிபயக்கும்பொற்பினதாய்ப்பொலிந்தெதஞ்
ஞான்று, மன்னுமறமுதனுன்குபேறுமலிமாண்பினதாய்வளத்தான்மிக்க
துன்னுபுகழ்க்காரைநகர்டன்னெடுநாளியற்றுதவத்தோற்றம்போல்வான். ()

வேறு.

மதியோங்குமகுடதனவசியர்சிகாமணிசமையத்
ததியோங்குசித்தாந்தசைவசிகாமணிசெஞ்சொற்
பொதியோங்குசீர்படைத்தபுலவர்சிகாமணிதொழும்பின்
றுதியோங்குசிவபெருமான்றொண்டர்சிகாமணியென்பான். (கஎ)

தவத்தையொருவாதியற்றித்தனதுளத்தினமர்பரம
னவத்தையகற்றிடுமலர்த்தாளருச்சிக்குநெறிமறவான்
பவத்தையொழிப்பதுநீறும்பரித்திடுகண்மணித்தொடையுஞ்
சிவத்தையருளெழுத்தஞ்சுமெனத்துணிந்தசெம்மையினுன். (கஅ)

அவமலியும்புன்சமயநெறிபழுதென்றறவிடுத்தோன்
றவமலியும்புகழ்ராமநாதனருந்தவப்புதல்வன்
சிவமலியுந்திருவேட்பூருடையான்சென்னெறிப்படர்வான்
பவமலியுமெனக்குமுசாத்துணையாயபண்புடையான். (க௯)

பாவலர்நாயகன்மேலைப்பண்ணவர்நாயகன்மதிக்குங்
காவலர்நாயகன்றமியேன்கருத்தமர்நாயகன்சைவத்
தாவலர்நாயகனல்லையமர்ந்தருணுயகனகில
நாவலநாய்கன்கருணைநாட்டநிறைநலம்படைத்தோன். (உ0)

மருணிலையிற்றலையனெனமதித்திரங்கியெனையாண்ட
தெருணிலைதேர்வன்றொண்டதேசிகன்பாற்றென்கூடற்
பொருணிலைதேர்மெய்யப்பபுனிதமுனிவரன்றிருமுன்
னருணிலைதேர்நல்லையிற்பொன்னம்பலப்பேராண்டகைபால். (உக)

ஒழிவில்பதிசிவமெனக்கொண்டுலகுய்யப்பிரசங்கம்
பொழிதருமம்பலவாணநாவலனும்புங்கவன்பாற்
பழிதபுநல்லிலக்கியமுமிலக்கணமும்பரிந்தாய்ந்து
மொழிதருவள்ளுவர்கற்ககசடறவென்மொழிக்கிசைந்தோன். (உஉ)

காரொருமைநெய்யரிசாகம்பொள்ளற்கும்பமன
சோருமிளமதியரையும்போதிக்குந்தொல்வலத்தாற்
பேரறிவினன்னமாவேனவாக்கும்பெற்றியினான்
வீரமலிதவவலியான்மிருகண்டுசுதன்போல்வான். (உங)

பூமனுக்குமிளவலுக்கும்போரொருமைப்பாகனுக்கு
மாமனுக்குந்தன்னளவிலயர்வுயிர்க்குமாண்பளித்தோன்
றேமனுக்குநவபுரியான்மியமுதனூல்பலதொடுத்தோன்
சோமனுக்குமிகுதண்மைச்சொக்கலிங்கதேசிகனே. (உச)

---

திருப்புத்தூர்க்கு அடுத்தமகிபாலன்பட்டி

கும. மு. கதிரேசச்செட்டியார்

இயற்றியது.

பொன்னிவளம்பொலிசோழநன்னாட்டின்றிலகமெனப்புகலுஞ்சீர்த்தித்
தொன்னியமம்வழாதொளிருஞ்சூதவனபுராணமுறைசொல்லுந்தூய
முன்னைவடமொழியோர்ந்துசெந்தமிழ்தேர் புலவரெலாமுகந்துகொள்வான்
உன்னுமணிபொதியவிழ்த்தீந்தெனவுரைத்தான்றமிழ்க்கவியாலுவன் யாரோ
ரென்னின். (க)

பல்கலையம்பரவறிஞருளங்கொளுத்திமகிழ்விப்போன்பனிமென்முது
பல்கலையம்பரடனனிபாற்றினேன்காரைவளப்பதியோனற்பா
னல்கலையம்பரநிகருநயனவுமைபாகனையேநயந்துமுத்த
நல்கலையம்பரமகியிலிசைநிறுவுசொக்கலிங்கநாவலோனே. (உ)

---

# சிறப்புப்பாயிரம்.

தில்லைவளாகம்
ஸ்ரீ சண்முகசரணாலயசுவாமிகள்
இயற்றியது.

திருவளர்கமலச்செம்மறுண்முகத்
தொருவனளித்தவுலகிற்சிறந்த
வாலவாய்ச்சங்கத்தமர்சொக்கலிங்கக்
கோலமேகாரைக்குடியுளோர்பன்னா
ளாற்றியதவத்தாலப்பெயரேகொண்
டேற்றமேதரவந்தெனவாங்குதித்தோன்
பொய்ச்சமயங்களைப்போக்கியாகம
மெய்ச்சைவசமயவிளக்கைக்கொண்டே
பிறைக்கொழுந்தணிசடைப்பிஞ்ஞகன்றனி
னறைக்கொழுங்கூவிளநன்னீராதிய
தேடியருச்சனைசெய்தருளிநந்து
பாடிப்பணியும்புத்திமாபாற்கரன்
பதிபசுபாசவிதிமுறைதெரிந்த
சதுருடைச்சைவசித்தாந்தசாகரம்
விதிவழியொழுகும்வித்தகர்தமக்குக
கதிவழியிதுவெனக்காட்டுமாமேரு
வெனப்புவியுள்ளோரிசைத்திடவடங்கா
மனப்புலனடக்குமாதவப்புனான்
சூதவனத்தின்கோதின்மாண்பியத்தைப்
பேதமிறமிழிற்பிறங்கிடச்செய்து
கோலங்காட்டியகொண்டற்சூழ்தண்டலை
யாலங்காட்டில்வாழருமருந்தன்ன
சீலச்சிதம்பரச்செயமல்வேண்டுகோள்
சாலமுற்றுவித்துத்தந்தமாகீர்த்தியைச
சொற்றிடச்சேடனுந்துளங்குவானுளமெனின
மற்றொருநாவால்வழங்குவதெளிதோ.

## சிறப்புப்பாயிரம்.

இராமநாதபுரம்

சமஸ்தானவித்துவான்

சர்க்கரைப்புலவர்வம்ஸ்தராகிய

கோட்டகுடி மு. சேதுப்புலவர்குமாரரும்

ஆலங்காடு மகா-ள-ள-ஸ்ரீ ரா. ம. சி. த. சிதம்பரச்செட்டியார்

மாணாக்கருளொருவரும்

மன்னார்குடி பிண்டலேகாலேஜ் தமிழ்ப் பண்டிதருமாகிய

சர்க்கரை இராமசாமிப்புலவர்

இயற்றியது.

சீர்பூத்ததிரையுடுத்தநிலமகளுக்கணிமுகமாஞ்சென்னிநாட்டி
லேர்பூத்ததிலகமெனவிலகாலங்காட்டில்வருமெவர்க்குமென்றும்
பேர்பூத்தபலனுதவுந்தருவானனையவிசழிபிறைநீர்ச்சென்னிக்
கார்பூத்தகண்டன்மலர்க்கழல்போற்றுந்தவஞானங்கதிக்குமேலோன். (க)

தெருண்மணக்குந்தமிழ்மகளுக்கணியரங்காய்ப்பரசமயச்சிங்கமாகி
யருண்மணக்குஞ்சைவமெனுமரும்பயிர்க்கோர்முகிலாகியடியேன்போலு
மிருண்மணக்குமுளத்தவருக்கிருஞ்சுடராய்த்தவாரிகுமிராமசாமிப்
பொருண்மணக்கும்வணிகபதிபத்திராத்தினமீகிப்பொருந்துஞ்செல்வன் ( )

அற்றார்க்குஞ்சிவபெருமானடியார்க்குநால்வேதமறிந்துளார்க்கு
மற்றார்க்குமங்கமெல்லாம்வந்தார்க்குநிசைநால்வாணருக்குமெய்ந்நூல்
கற்றார்க்குங்கவிராசகணத்தார்க்குந்தமிழ்வேதங்கரைகண்டார்க்கும்
வற்றாமலெப்பொருளும்வழங்குதலானவநிதியேயானும்வள்ளல். (௩)

மனக்கவலையுடையார்க்குமகிழ்வாய்வீட்டற்றவர்க்குவாழும்வீடா
யுணற்கரியவறியவருக்குணவமுதாயுறவிலர்க்கவ்வுறவாயதந்தை
யனைக்கரியார்க்கவராகியரும்பிணியாளருக்குமருந்தாகிச்செம்பொ
னினக்குவியலில்லோர்க்கவ்வினக்குவியலாய்வாழுமிசையார்பூபன். (௪)

தாதாடுமிதழிமதிச்சடையாடக்குழையாடத்தாளிற்சேர்த்த
வாதாடுமரிகடலையலைந்தாடக்கலைந்துகீங்கைமங்கையாடப்
போதாடும்பொன்னரங்கம்பொலிதாடுமீசனடம்புரியச்சீர்சான்
மாதாடுஞ்சிவஞானமடாலயமுநிணிதியற்றிவைத்ததோன்றல். (௫)

மன்னியசீகாழியர்கோவாக்கரசுதொண்டர்தொகைவழங்கும்வள்ள
லுன்னியமாதவவாதவூரடிகண் முதலாய தூய்மையோர்கண்
முன்னியருண்மழைபொழியமுறைபிறழாதடியர்கரமுகிழ்த்தன்னோர்கள்
பன்னியசீர்த்தமிழ்வேதம்பகரவருட்குருபூசைபண்ணுமண்ணல். (௬)

தலத்திலுயர்காசிநகர்தனக்கேகித்திரிபதகைதன்னிற்றோய்ந்து
பலத்திலுயர்பலன்றருமோர்பரணலிங்கங்கொணர்ந்துபரிவாரமோடு
வலத்திலுயரங்கயற்கண்மாதயன்பேயுறக்கோவில்வகுத்துச்சைவர்
குலத்திலுயரந்தணராற்குறைவில்பிரதிட்டைசெய்துகுலவுமன்பன். (௭)

இன்றுவென்றெனையறியாதிருந்துமினியவைகூறியிருக்கவீடு
மன்றுதிபலபொருளுமருந்தமிழ்விற்பனமுமுயரறிஞர்நட்புஞ்
சொன்றுதியெப்பொருளுநதொல்லுலகும்புகழுமகிழ்துளும்பநல்கி
யென்றுமெமையெப்புரக்கவெனாதுபெருந்தவப்பேறுயிருக்குஞ்சீமான். (அ)

தொன்றுதிகழ்வடவனமுநதொல்லுலகுஞ்செயததவத்தொகுதியாவு
நன்றுருக்கொண்டுற்றதெனநாவலருங்காவலருநவின்றின்றேன் [ன
றுன்றுபுகழ்கொடைவாய்மைபொறையடக்கந்தூய்மையெனுஞ்சுடர் வாய்ஞா
வென்றுதனைமைபொழியுமெழிலிசிதம்பரநாயமியைநதவேந்தல். (௯)

எந்நாட்டுமுயர்வளவனன்றேட்டுண்முன்றேட்டுமற்றமேய
தென்றேட்டுமிசைச்சூதச்செழுங்காட்டுமான்மியத்தைச்செவிக்கின்பாக்குஞ்
சொன்றேட்டுநதென்றேட்டுத்தூமொழியாற்றருகெனவுஞ்சுகுணம்வாய்ந்த
பன்றேட்டுப்பாவலருமுண்டுறேட்டும்படிபுனைந்துபகர்ந்தான்மன்னே. (௧௦)

அன்னைவனியாமொளிற்றிருவுமருநதமிழும்பெரும்புகழுமமைந்தநல்லோன்
பன்னுமறைத்தெளிவெனவிற்பனர்புகல்சித்தாந்த மெய்ந்நூற் பரவையுண்
டோன், மன்னமெல்லாத்த ரிபுகைக்குங்கவியிறுச்கும்புவியினுக்குங் கண்ணுயு
ள்ளோன், சொன்னயமுமபொருணயமுநதுலங்கு பல்நூலியற்றுந் தூய்மை
யாளன். (௧௧)

கடியிருக்குந்தளவமணிசரினிருக்கும்புயமுடையான்கலையார்காளைக்
குடியிருக்குந்தனவணிகர்குலத்திருக்குப் புகழ்சொடையான்குறித்து நாளும்
வடியிருக்குந்திரிசூலிமகிழ்ந்திருக்குமனமுதவியலர்கொண்டந்தத்
துடியிருக்குங்கரத்தமலன்சுடரிருக்கும்பதம்பணிபுந்தூய்மையாளன். (௧௨)

குணத்தானுந்தனதுருவின் வணத்தானுந்துறைகடொறுங்குறையாதீட்டும்
பணத்தானுந்திருவருளின் மணத்தானும்பலகலையும்பயின்மாணுக்கர்
கணத்தானுந்திருப்பணிசெய்யினத்தார்க்குப்பொருளுதவிக்களிக்கச்செயயு
மெணத்தானுந்திரையுலவுவணத்தார்க்குங்கடலூலகிலிணைவேறில்லான். ( )

கண்டெனப்பாலெனப்பிரசங்கம்மழைபெய்துளமுருகிக்கனியக்காள
கண்டனையேதினம்பரவம்பலவாணநாவலர்கோன்கண்ணேயன்னோன் [ன்
றொண்டர்தமைச்சிவமெனவேதொழும்பியற்றிச்சிவபூசைதுலங்கச் செய்வ
றொண்டரிடந்தண்டமிழ்தேர்சொக்கலிங்கனெனும்வாய்மைத் தூய்மையோ
னே. (௧௪)

---

இந்நூலாசிரியர்மாணாக்கருளொருவரும் திருப்புத்தூரைச்
சார்ந்த தம்பிபட்டி சொர்னச்சாமிக்கவிராயர்
குமாரருமாகிய

## வேலுச்சாமிக்கவிராயர்

இயற்றியது

பொன்னாலுமணியாலும்புவியாலுங்கவியாலும்போதத்தாலு
மின்னாலும்ரதமுதனால்விதத்தாலு நிதத்தாலும்வேதத்தாலுஞ்
சொன்னாலுமமைமுந்நூற்றொடையாலுங்கொடையாலுந்தோற்றத்தாலு
மென்னாலுநிறைசெழியர்நிறைமாண்பின்முறைவாய்மையியலுநாட்டில். (௧)

விற்றிகழுநுதன்மடவார்மிளிருமரகதமாடமிசைவாழ்தோற்றங்
கற்றிகழுங்குடைமாலைகலமாக்கள்பலரோவென்காட்சித்தாய்ப்பொய்ப்
பற்றிகழுமரனடியார்குழாம்பெருகுசீர்க்காரைப்பதியில்வாழு
மெற்றிகழுநவநிதிக்கோனெனப்பொலியும்வசியர்குலத்திலங்குந்தூயோன் ()

இராமனாதக்குரிசிலியற்றுதவமேயுருவாயியைந்தநல்லோ
னிராமனாதன்புநிறைமனத்தன்பரினத்தன்பேயியற்றுவான்
விராமனாதம்புரிந்துமிளிர்கங்கைகுளிர்திங்கள்வேணியாண்டும்
விராமனாதன்பகர்ந்தசிவாகமசன்மார்க்கவிதிவித்தாயுள்ளோன். (௩)

எவ்வுழியுமேகனேயெனநின்றமநேகனாயிலங்குமீசன்
செவ்வுருவமுளக்கமலத்தினிலொளிரநினைதொறுமெய்சிலிர்ப்பக்கண்ணீ
ரவ்வகலவசலமிசையருவியெனப்பெருகியெழவமையாவன்பிற்
றிவ்வியநீறக்கமணிபுனைந்தெழுத்தைந்துறுமரபிற்செபிக்குஞ்சீலன். (௪)

பலத்தானைத்தோலுரித்தவலத்தானையருளொழுகுபாதத்தானைச்
சலத்தானைச்சூர்ப்பகையைத்தந்தானைவான்சுரரிற்றக்கமுன்னாங்
குலத்தானைக்கூறுவார்க்கூறதனைநீப்பானைக்கோலநீற்றி
னலத்தானைச்சனகர்முன்னோர்க்கருண்ஞானபோதகரநளினத்தானை. (௫)

ஒருபோதுமறவாமலிருபோதுமுப்போதுமோங்குநான்காய்
வருபோதுமுதலியசொண்டைம்போதுமதற்கடந்தமாசில்பூசை
கருபோதநிட்காமத்தியற்றவோன்சித்தாந்தக்கலைமுன்னூலிற்
றருபோதவந்தரங்கப்பொருள்விளங்கவிரித்துரைக்குந்தகுதியாளன். (௬)

நண்ணியபொச்சாப்பொடுவஞ்சனைநோயமுதலாயநவைகட்கெல்லாம்
பண்ணியகொள்கலனையதமியேனுக்கொருவருநூல்பகராவென்னத்
தண்ணியபேரருள்கூர்ந்துதகுதியுறநூல்கள்பலதெள்ளாதீந்தோ
னெண்ணியதொல்புகழமைந்தசொக்கலிங்கதேசிகனென்றியம்புவள்ளல்.

இத்தகையதோன்றறனையெந்நாளும்பெருஞ்செல்வவியப்பிற்றாகிக்
கத்துதிரைக்கடலுடுத்தபுடவியெலாம்புகழாலங்காட்டில்வாழ்வோ
னுத்தமமெய்யன்பறிவுகொடைவாய்மைபொறைநீதியோங்குசீர்த்தி
வித்தகமேம்பாடுதவமுதற்சிறந்தசிதம்பரப்பேர்மேதக்கோன்றான். (௮)

தலமுதலமூவகையமேன்மையமைசூதவனசரிதமான
பலமுதவுவடமொழியைத்தென்மொழியிற்பகருமாப்பாயசெய்வ
நலமுதவுதமிழ்வளர்க்குநாட்டகத்தாராயினுறாலங்களெல்லாம்
புலமுதவப்பொலியுமெனப்புந்திகொளீஇக்கருத்துரைத்துப்புரிந்துவேண்ட.

இப்பிறவியினுக்குறுதியீதன்றேவெனத்துணிந்தாங்கின்பமிக்கூர்ந்
தொப்புறலிலாவிருத்தயாப்பதனிற்பொருண்மாண்புமோசைமாண்பும்
வைப்புறுசொன்மாண்புமணிமாண்புமெழுவகைமதமும்வனப்பமைந்துஞ்
செப்புறுமுப்பானிரண்டுத்தியுநான்குபயனுடனேதிகழச்செய்தான். (௧௦)

முத்தமிழாசிரியனெனவுலகுபுகழகத்தியமாமுனிவனிந்நா
லுய்த்துணர்ந்திட்டினையவன்றனுயர்கல்விவலிமையினையுன்னிநோற்குஞ்
சித்தமுடன்மலையுற்றான்சேடனெனும்பெயர்திகழ்விசேடன்றானிவ் [தோ
வித்தகன்வாழ்தலைமதித்தேமேதினியைத்தலைக்கொண்டான் விழைந்துமா

---

ஆலங்காடு ராம. சித. சிதம்பரச்செட்டியார்

மாணாக்கருளொருவராகிய

## தி. குப்புச்சாமி ஐயர் இயற்றியது.

மாமேவுமியற்றமிழாங்கடல்பருகுமஞ்செனுமோர்மாண்புவாய்ந்தோன்
றாமேவுமதியரவம்விளையாடும்வேணியான்றுகளிலாத
தேமேவுநளினமலர்த்திருவடியேதுதித்தேத்துஞ்சீர்த்தியாளன்
கூமேவுமிந்திரனென்றுரைசெல்வன்கன்னனைவெல்கொடைமையாளன். ()

நாவலூரிறைதொண்டத்தொகையடியார்குருபூசைநயந்துநாளு
மாவலாயுளுற்றன்பனலவனநகர்க்கிறைவனறிவான்மிக்கோன்
சேவலூர்கொடியானைத்தந்தான்றன்பதியனந்தந்தெரிசித்தேத்திக்
காவலார்காசிமணிகனணிகைதோய்ந்தருளிலிங்கங்கையிற்கொண்டு. (௨)

வந்துதனதெழினகரிலாலயங்கண்டுரியபரிவாரத்தோடு
செந்துவர்வாய்மீனாட்சிசுந்தரேசுரர்பதிட்டைசெயுஞ்சீராளன்
முந்துமியனூல்களையென்மடமைகெடவுணர்த்திட்டோன்மோதுநீரார்
சிந்துநிகர்கருணையினான்சிதம்பரப்பேரெண்டிசையுந்திகழுஞ்செல்வன். (௩)

விண்டுமுதற்றேவர்களுமுனிவர்முதலியாவர்களும்விரும்பிப்போற்றக்
கண்டுமொழியுமைபாகனிலிங்கவடிவாயமர்ந்தகவின்மிக்கோங்கும்
வண்டுமலிகூதவனமான்மியத்தைப்புலவரெலாமகிழ்ந்துகொள்ளத்
தண்டமிழிற்பாடுகெனவப்பரிசேபாடினனக்குவன்யாரென்னில். (௪)

தருநிகருங்கொடையுடையான்றனதனிகர்தனமுடையான்றவமிக்குள்ளான்
பொருவரியதிருநீறுங்கண்மணியுமுடையவராய்ப்பொலியுநேசர்
திருவுருவேயரனென்னத்துதித்திடுமெய்யன்புடையான்சிறந்தசீலன்
பெருமைதருங்காரைநகர்ச்சொக்கலிங்கத்திருநாமம்பெறுநாவல்லோன்.

ஆலங்காடு ராம. சிதம்பரச்செட்டியார் மாணாக்கருள்
ஒருவராகிய கெடியூர்

## வைத்தியலிங்கச்செட்டியார்

இயற்றியது.

பொன்பூத்தசெழுங்கொன்றைபுனன்மதிகூவிளமர்வுபொதுளிவானின்
மின்பூத்ததிருவேணிச்சிவபெருமான்றளிகள்பலமிடைதலானுங்
கொன்பூத்தஞாலபுருடனுக்குறுப்பாய்ப்பலநாடுங்குலவத்தானே
தென்பூத்தசிரமாங்காரணத்தானும்பலர்புகழுஞ்சென்னிநாட்டில். (௧)

செல்லாரும்பொழில்வாவிகாலாறுபலவளமுஞ்செழிப்புற்றோங்கி
யல்லாருங்குழன்மடவார்விழிக்கயல்கள்குழைதாவுமாலங்காட்டில்
வில்லாரும்பாணியிராகவனேதோன்றினனென்றுமேதக்கோர்கள்
சொல்லாருமிராமசாமிக்குரிசிறவத்தினில்வந்துதித்ததோன்றல். (௨)

அன்னையானவள்சேய்க்குப்பாலருத்தல்போலெனறியாமைநீங்கப்
பன்னுதமிழினையெனக்குமிகுநேயத்தொடுபொழிந்தோன்பரமன்சீர்த்தி
துன்னுசைவப்பிரசங்கங்கேட்போர்களுளங்களிப்பச்சொல்லுமாண்போன்
மன்னுசைவகுரவருண்மைநாயன்மார்குருபூசைவழாதுசெய்வோன். (௩)

நிறைவாய்மைமிகுசெல்வப்புகழ்வாய்ந்தோன்சிவபூசைநேயனேற்றோர் [ன்
குறைதீரப்பொருள்பொழியுங்கொண்டல்சிவாலயப்பதிட்டைபுரிந்தகோமா
பொறைநேயமருவுசிதம்பரவள்ளல்சிவஞானம்பொலிந்தசீலன்
பிறைசூடும்பிஞ்ஞகன்வாழ்சூதவனமான்மியத்தின்பெருமைநோக்கி. (௪)

அத்தகையமான்மியத்தையாவருமோர்ந்தருளின்பமடையவெண்ணிச்
சுத்தமுறுசெந்தமிழ்ப்பாவாலியற்றித்தருகவெனச்சூதகான
நித்தனடிமனத்திருத்திச்சொற்சுவையும்பொருட்சுவையுநம்பவாணோர்
புத்தமுதமெனப்புலவோர்சிரந்துளக்கிமகிழ்வெய்தப்புராணஞ்செய்தான். ()

அன்னவன்யாரெனிற்பாண்டிநாட்டொருசார்தனவணிகாளப்பிலோர்க
ளென்னியகானக்குடியோன்புகழ்மலிந்தவன்றொண்டர்தொன்மாணாக்கன்
மன்னுபெருங்கல்வியினிற்குறுமுனிநேர்வோன்பரமன்வனசமேயும்
பொன்னடியேபூசனைசெய்சிவநேசன்சொக்கலிங்கப்புலவரேறே. (௬)

இந்நூலாசிரியர்மாணாக்கருளொருவராகிய

வே. நடேசபிள்ளை

இயற்றியது.

திருவளர்தெய்வக்கன்னிநாடதனிற்சீர்வளர்பலவளஞ்செறியுந்
தருவளர்பொழில்சூழ்காரையம்பதியிற்றனம்வளர்வைசியகுலத்தி
லருள்வளர்கல்விநிறைபொன்றவாய்மையன்புமுற்குணமெலாமமைந்தோன்
பொருள்வளரிராமநாதன்மூன்பன்னுட்புரிதவமெனவவதரித்தோன். (௧)

நாகர்கள்போற்றுமாலவர்ய்ச்சங்கநாயகமாயமர்ந்தவனே
நாகமூடுருவவேல்விடுத்தவனேயினமீதுறையுநான்முகனே
நாகநீள்பொதியவெற்பின்மாதவஞ்செய்நற்றமிழ்முனிவனேவாதி
நாகனேனாழுமிடப்புவிமேனண்ணினனெனத்தகுநலத்தோன். (௨)

நீதில்வெண்ணீறுங்கண்டியும்புனைவோன்றிருவெழுத்தைந்துநாப்பயில்வோ
னேதுகென்றெனையுமருளினன்னூல்க ளுணர்த்தியுட்டுக ளெலாமொழிப்
போன், கோதிலாகியமசிவார்ச்சனைமுதலாக்கூறுசன்மார்க்கநன்னிலையோ
னேதமில்பெரியோனின்னவன்சீர்த்தியென்றனற்புகலுதற்கெளிதோ. (௩)

அப்பெருந்தவனையாலங்காட்டமருமன்புருச்சிதம்பரநாம
வொப்பிலான்கொடையேதன்பெருந்தொழிலோனேதுமாவனத்தின் மான்
மியத்தை, யிப்புவியுய்யத்தமிழ்மொழிபெயர்த்திங்கீகெனச் சூதனுண் டிசை
த்த, செப்பரும்பொருளைச்செவ்விதாராய்ந்துசெந்தமிழ்விருத்தயாப்பாக.(௪)

பாசமுமதைவெல்பாதமோர்நான்கும்பசுபதியிலக்கணவளவு
மாசிலாமதுரநாற்கவிநலனுமரும்பொருணவரசநலனு
மீசனாருளுந்திருவருணலனுமினியமெய்யன்பியனலனுந்
தேசுறப்புகன்றனனையசொக்கலிங்கதேசிகனுவலரோறே. (௫)

இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவரும் தாமரங்கோட்டையைச்
சேர்ந்த செங்கப்படுத்தான்காடு கிராமமுன்சீப்
கோபாலபிள்ளையவர்கள் குமாரருமாகிய
திருச்சிற்றம்பலபிள்ளை
இயற்றியது.

சீர்மேவுதில்லைநடஞ்செயுமிறைவன்றிருவருளேதேசமுய்ய
நார்மேவுயாழ்ப்பாணநல்லூரிற்றிருவுருவாய்நயப்பப்போந்த
தேர்மேவுதிருவருள்கூராறுமுகநாவலர்கோன்றிருத்தாட்கன்பன்
பார்மேவுபாண்டியனாட்டெழிற்காரைக்குடியென்னும்பதியில்வாழ்வோன். ()

முல்லையிளங்கோக்குலத்தின்மொழிராமநாதன்கான்முளையாய்வந்தோ [ன்
னெல்லையிலாப்பரம்பொருளையெப்போதுந்தன்மனத்தேயிருத்திவைப்போ
வல்லைபிரமனைப்பிரிந்துகலைமகடன்னுநிலைத்துவதியப்பெற்றோன்
குல்லையணிமானிறத்திற்குலவுதிருமகள்குடியாக்கொள்ளப்பெற்றோன். (உ)

திங்களணிசடையண்ணல்சிறந்துவாழ்தலங்கடொறுஞ்சென்றுசென்றே
யங்கவனையருட்பாவாலடுத்திறைஞ்சும்பெருமக்களமைதிபோலக்
கங்குல்பகலொழியாமற்கறைக்கண்டன்றிருவடிக்கேகவிகள்சொல்வோ
னங்கமெலாந்திருநீற்றனகத்தியன்போலெக்கலையுமருளவல்லான். (௩)

பந்தமுறுமகவிருளைப்புறவிருளைப்பாற்றுறுபாற்கரனேயென்னச்
சிந்தியருள்வழிகாட்டியருணாலையெனக்கருளுஞ்சிறப்பான்மிக்க
சுந்தரமாரருட்குரவன்றூயதயாநிதியதியஞ்சூடும்வேணிச்
சுந்தரநாயகன்றிருப்பேர்சொலப்பெறுசீர்ச்சொக்கலிங்கத்தூயநாமன். (௪)

தேனொழுகுபொழிலாலங்காட்டினில்வாழ்சிவரியமச்செல்வநேயன்
வானொழுகுமழைசமழ்ப்பவளர்கொடைஞன்சிதம்பரப்பேவணிகர்கோமான்
மீனொழுகுமலர்விரிகாவிரிநாட்டிலுசாத்தானமென்னுமேன்மைக்
கானொழுகுதவனக்காதையினையீதியெனக்கழறல்கேளா. (௫)

இந்தணிசெஞ்சடையானையிருங்கயிலைமலையானையிமையமானைச்
சுந்தரவாமத்தானைச்சுயம்பெழுந்தருதவனநாதன் றன்னைச்
சிந்தனைசெய்தந்நூலைத்தென்னூலாயுலகுவப்பச்செய்துதந்தான்
றந்தருணாளுமகளுந்தமிழ்முனியுஞ்சிரமேற்கொடகையதம்மா. (௯)

---

ஸ்ரீவிஞகாநபுரஸ்தநல்லூராக்கியநகரநிவாச
திராவிடபாஷாதுரீண
சுத்தாத்துவிதசித்தாந்தசைவஸ்தாபக
ஸ்ரீமந்நாவலர்பெருமான்பாததூளி
சிரமேற்கொண்ட
யாழ்ப்பாணத்துவட்டுக்கோட்டை
ஆ. அம்பலவாணநாவலரவர்கள்
இயற்றியது.

---

திருவுசாத்தானமெனவுலகுசாத்தானமான்மியத்தைச்செம்மை
மருவுசாத்தானதமிழாற்றருகவென்றுலங்காட்டின்வாழ்வி
னிருவுசாத்தானகவிமாலையான்சிதம்பரவேளிசைப்பத்தந்தான்
கரு*வுசாத்தானயநதாற்கன்பாளன்சொக்கலிங்கக்கவிஞரேறே.

பாடுவதிற்பாடுநனொப்பாடுவதேபாடுபுகழ்பயக்குமாமென்
றூடுகெழன்மன்றுடையார்பாடுகொற்றங்குடியடிகளறிவித்தாராற்
றீடுபெறுசேக்கிழார்புராணமிசைத்தென்பரதுபேணியாமு
நாடுமிருபாவிசைத்தவ்விருவர்கெழுதகைமையுமன்னயந்தாமன்றே

---

* உ-விஷ்ணு.

# பெரியபுராணம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம். ௮௨௪-ம் பாடல்.

திருவுசாத்தானத்துத்தேவர்பிரான்கழல்பணிந்து
மருவியசெந்தமிழ்ப்பதிகமால்போற்றும்படிபாடி
யிருவினையும்பற்றறுப்பாரெண்ணிறந்ததொண்டருடன்
பெருகுவிருப்பினராகிப்பிறபதியம்பணிந்தணைவார்.

---

திருவுசாத்தானம்

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவாய்மலர்ந்தருளிய

## தேவாரம் பண் கொல்லி.

நீரிடைத்துயின்றவன் றம்பிநீள்சாம்புவான்
பேருடைச்சுக்கிரீவன்னனுமன்றொழக்
காருடைநஞ்சுண்டுகாத்தருள்செய்தவெஞ்
சீருடைச்சேடர்வாழ்திருவுசாத்தானமே. (௧)

கொல்லையேறுடையவன்கோவணவாடையன்
பல்லையார்படுதலைப்பலிகொளும்பரமனார்
முல்லையார்புறவணிமுதுபதிநறைகமழ்
தில்லையானுறைவிடந்திருவுசாத்தானமே. (௨)

தாமலார்போலவேதக்கனார்வேள்வியை
யூமனார்தங்கனாவாக்கினானொருநொடிக்
காமனாருடல்கெடக்காய்ந்தவெங்கண்ணுதல்
சேமமாவுறைவிடந்திருவுசாத்தானமே. (௩)

மறிதருகரத்தினன் மால்விடையேறியான்
குறிதருகோலநற்குணத்தினாரடிதொழ
நெறிதருவேதியர்நித்தலுநியமஞ்செய்
செறிதருபொழிலணிதிருவசாத்தானமே. (௪)

பண்டிரைத்தயனுமாலும்பலபத்தர்க
டொண்டிரைத்தும்மலர்தூவித்தோத்திரஞ்சொலக்
கொண்டிரைக்கொடியொடுங்குருகினினல்லினந்
தெண்டிரைக்கழனிசூழ்திருவுசாத்தானமே. (௫)

மடவரல்பங்கினன்மலைதனைமதியாது
சடசடவெடுத்தவன்றலைபத்துநெரிதர
வடர்தரவூன்றியங்கேயவற்கருள்செய்தான்
றிடமெனவுறைவிடந்திருவுசாத்தானமே (௮)

ஆணலார்பெண்ணலாரயனொடுமாலுக்குங்
காணொணாவண்ணத்தான்கருதுவார்மனத்துளான்
பேணுவார்பிணியொடும்பிறப்பறுப்பானிடஞ்
சேணுலாமாளிகைத்திருவுசாத்தானமே. (௯)

கானமார்வாழ்க்கையான்காரமண்டேரர்சொல்
லூனமாக்கொண்டுநீருரைமினுய்யவெனில்
வானமார்மதிலணிமாளிகைவளர்பொழிற்
றேனமாமதியந்தோய்திருவுசாத்தானமே. (௰)

வரைதிரிந்திழியுநீர்வளவயற்புகலிமன்
றிரைதிரிந்தெறிகடற்றிருவுசாத்தானனை
யுரைதெரிந்துணருஞ்சம்பந்தனொண்டமிழ்வல்லார்
நரைதிரையின்றியேநன்னெறிசேர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சூதவனபுராணம்.

காப்பு.

பூவரு மயன்மா லாதி புனிதரு முனிவ ராதி
யேவருஞ் சூழ்ந்து போற்ற வின்னரு ளொளிதி னல்கு
மாவரும் பொழிற்பைஞ் சூத வனப்பெரு மகிமை கூற
மூவரும் பரவு மானை முகத்தனை யகத்துள் வைப்பாம். (௧)

இதுவுமது. வேறு.

சீத மாவன மார்பினன் றெவ்வெலற்
கேத மாவன தீர்த்தரு ளீசன்வாழ்
சூத மாவனத் தோன்முகத் தோனம்பு
சாத மாவனத் தாணமந் தேத்துவாம்.

முதலடியில் மா - இலக்குமி. வனம் - துளபம். மூன்றாமடியில் மா - வண்டு. நான்காமடியில் வனம் - அழகு. நமந்து - சுபந்தமாகிய வடமொழிப் பெயரடியாற் பிறந்த வினையெச்சம். இதனை உமாபதிசிவம் திருத்தொண்டர் புராணசாரம் (௬௧) செய்யுளில் "வண்ணனை நமந்தகோ" என்றருளிய வாற்றானுமுணர்க. நமஸ்கரித்து என்னும் பொருட்டு. (௨)

நூற்பயன். வேறு.

பூத நாதன் சூதவன புராண மீதன் புறக்கேட்போ
ரோது மவரப் படனாடத் துார்முன் னெழுத் தமரெவரு
மேத மொழிந்து போதமுணர்ந் திம்பர் வாழின் பெல்லாம்பெற்
றுதி யமலன் றிருவடிக்கீ ழமர்பே ரின்புற் றுடன்வாழ்வார். (௩)

வாழ்த்து.

வேத வேள்வி மழைவளங்கள் வீற்று வீற்று ருயிர்க்கின்ப
மாதி யறங்க ளனிவளர்க வைந்தக் கரங்கண் டிகைநீறென்
றோது சிவசா தனம்பொலிக வுயர்சைவ திகசை வந்தழைக
நீதி வேந்தர் மனுச்செங்கோ னிலவி வாழ்க வுலகெல்லாம். (௪)

## கடவுள் வாழ்த்து.

### மந்திரேசர்.

பூமா தமரு மணிமார்பன் புவனம் புரக்கும் புகழ்நிலைத்தற்
காமா தரவிற் றசரதன்கா லாங்கா லோர்கா லருள்வலிவேட்
டேமாண் புறப்போற் றியவளித்த வெந்தை மந்தி ரேசனடி
நாமாற் சுழிப்பட் டிலையாமே நடலைக் கடலைக் கடத்திடுமே. (௫)

திருவு சாத்தா னந்தனயந் திகழ்த்த வமர்வோ னெமதுபவம்
வெருவு சாத்தா னந்தனய விளிப்போன் முகுந்த நீபின்னுண்
மருவு சாத்தா னந்தனயன் வருமென் றருள்வோன் மௌலியினிந்
துருவு சாத்தா னந்தனய னொளிர்பொற் கமலத் தாள்பணிவாம்.

திருவுசாத்தானமானது தன் நயத்தை விளக்கும்படி அமர்வோனென வும், எமதுபவம் நந்த வெருவுசானைய விளிப்போன் எனவும், சாத்தா நம் தனயனாய் வருவான் எனவும், இந்து உருவத்தைச் சாத்து ஆனந்தன் ஐயன் எனவும் பிரித்துப் பொருள் கொள்க. (௬)

### பெரியநாயகியம்மை. வேறு.

புரிய னாயகி லம்பர வருளெனிற் புரக்குந்
துரிய னாயகின் னந்தவிர்த் தெமக்கருள் சுரக்கும்
பிரிய னாயகி புனைபர னிடம்பிரி யாத
பெரிய நாயகி திருவடிப் பிரசமென் மலரே.

ஆய கின்னம் - எம்மைப்பந்தித்ததாகிய துக்கம். ஆய் அகி - நூல்களை ஆராய்ந்த சர்ப்பம்; ஆதிசேடனென்க. அன்னாய் அகிலம்பரவு அருள்புரி எனில், அப்பெரிய நாயகி திருவடிமலர் புரக்கும் எனமுடிக்குக. துரியனும் பிரியனுமாகியபரன் என்க. புரத்தல் கொடுத்தலுமாம். (௭)

### நடேசர்.

மடன குஞ்சித பாதவந் தனைக்கொண்மா வனத்தெம்
மடன குஞ்சித பாதவந் தனைமுறை வகுத்து
நடன குஞ்சித பாதவந் தனைதெற நலமார்
நடன குஞ்சித பாதவந் தனைதின நயப்பாம்.

எம் மடன் நகும் சிதம் பா தவம் தனை முறை வகுத்து-எமது அறியா மையைக் கெடுக்கின்ற ஞானத்தையும் பரந்த தவத்தையும் அளவையும்

முறையையும் வகுத்துக்காட்டி, அவம் தனைதெற - அவகுணங்களையும் சீவ போதத்தையும் தெறும் பொருட்டும், நகுஞ்சித பாத நட - சிறந்த முடியின்கண்ணே நீங்காது (தன்னை) நடும்பொருட்டும், மடல் நகும் சிதம் பாத வந்தனைக் கொள் மாவனத்து - இதழ்விரிகின்ற (மலர்செறிந்த) விண்மீன் அளவுயர்ந்த விருட்சங்களைக் கொண்டசூதவனத்தில் வீற்றிருந்தருளுகின்ற (நடேசப்பெருமானுடைய) நடன குஞ்சித பாத வந்தனை - நடனகுஞ்சித பாதத்திற் செய்யும் வழிபாட்டை, தினம் நயப்பாம் - தினந்தோறும் விரும்புவாம். நகுதல்-இகழ்தல்; அதுகெடுத்தலைக்குறிப்பாலுணர்த்தியது. தனை- சீவனை யென்னும் பொருட்டாய்ச் சீவபோதத்தைக்குறிப்பாலுணர்த்தியது. காட்டித் தெறும்பொருட்டும், நடும்பொருட்டும் வந்தனை தினம் நயப்பாம் எனமுடிக்குக. மலர் செறிந்த விருட்சமென்றியையும். (அ)

சிவகாமியம்மை.

பனகந் தரக்கிரு பாற்றெழச் சிற்சபை பயிலுங்
கனகந் தரனடங் காண்சிவ காமி தாட்கமல
மனகந் தரவிருள் வெளியுற மலப்பகை மடிக்கு
மனகந் தரசித மன்புசெய் தின்புற வடுப்பாம்.

பன்னகம் என்பது இடைக்குறையாயிற்று. மூன்றும் அடியிற் கந்தரம் குகை. (கூ)

தெட்சணாமூர்த்தி.

சிரவ ணம்புயங் கம்மதி யிதழியஞ் சிவனும்
பிரவ ணம்புய லளவுகல் லானிழற் பிரியா
வுரவ ணம்புயர் நால்வர்கூ முறவமர் பரம
குரவ ணம்புய நாண்மலர்ச் சேவடி குறிப்பாம்.

ஆம்பிரவனம் ஈறு உருபும் பயனும் தொக்கது. வனம்புயல் எதுகை நோக்கி இயல்பாயிற்று. (க0)

விநாயகர்.

தவள வாரணம் புகறிரு நீற்றொளி தழைக்கும்
பவள வாரணன் மேனியி னைங்கரன் பரமன்
றிவள வாரண வஞ்சடை வேதியன் சிறுவன்
கவள வாரண முகத்தனை யகத்தினிற் கலப்பாம்.

தவளநீறென்றியையும். நீற்றொளிதழைக்கும் பவளமேனி எனக்கூட்டுக. ஆர் - அருமை. அணல் இடைக்குறை. மூன்றாமடியில் ஆர் - ஆத்தி. வார் எனப்பிரித்துக் கங்கை எனக்கொள்ளினும் அமையும். (கக)

சுப்பிரமணியர்.

செங்க டம்பணி புயந்தழீஇத் தேவகுஞ் சரியோ
டங்க டம்பணி கொங்கையங் குறமின்வேட் டமர்கோ
னெங்க டம்பணி துணிமயி லூரிறை யெமக்கோர்
சங்க டம்பணி யாதசேய் தாடொழு தெழுவாம்.

எங்கள் தம் இறை என்றியையும். சங்கடம் உம்மை தொக்கு நின்றது. (கஉ)

வீரபத்திரர்.

தீர பத்திர விச்சுடர் வாளினாற் செகன்மால்
சார பத்திரங் காதிருண் மலப்பகை தடிவா
னீர பத்திர நாண்மல ராதிகொண் டிறைஞ்சி
வீர பத்திர னடிமுடி கொண்டுநாம் விழைவாம்.

தீரம் - தளராமை. ரவிபோலும் சுடரையுடைய பத்திரியாகிய வாளினால் எனமாற்றிப் பொருள்கொள்க. சார் அபத்து எனப்பிரிக்குக. (கங)

வைரவர்.

காரி யேற்றகங் கைக்கொளு கண்ணுத னிருவி
காரி யேற்றகங் கைக்கொளு திவர்கழ னிரகங்
காரி யேற்றகங் கைக்கொளு தன்கரத் தளித்த
காரி யேற்றகங் கைக்கொளுண் மலரடி கலப்பாம்.

(அரிபிரமேந்திராதி தேவர்களைத் துரத்திக்கொண்டுவந்த) விஷத்தை எதிர்த்துச் (சென்று) உள்ளங்கையிற் (கவர்ந்து) கொண்டுவந்து, கண்ணுதலும், நிருவிகாரியும், இடபத்தின்மேல் மனம் களிக்க வொண்ணாது இவருகின்ற கழலையுடைய நிரகங்காரியும், தாங்கிய கங்கையைக்கொண்ட நாதனுமாகிய சூதவனேசர் கரத்து அளித்த காரியாகிய வைரவமூர்த்தியினுடைய, மிக்க பாவத்தை வெறுக்கின்ற ஒள்ளிய நாண்மலரடியை (நம்முள்ளத்திற்) கலப்பாம். எறு - அகம் - எற்றகமென எதுகை நோக்கிப்பிறவினை போல் நின்றது. விஷத்தைக்கொண்டுவந்து நாதன் கரத்தளித்த காரி எனக் கூட்டுக. (கச)

## திருநந்திதேவர்.

துள்ளி மால்வரை வேணிமுச் சுடர்விழித் தூயோன்
வெள்ளி மால்வரை காத்தருள் விமலன்மெய்த் தவத்தோ
ருள்ளி மால்வரைந் துணர்சிவ ஞானபோ தந்நூல்
வள்ளி மால்வரை நந்திதாண் மலர்முடி வனைவாம்.

மால்வரைந்து - ஆசையால் எழுதி. (கரு)

## இலக்குமி. வேறு.

அமலை யாதியெண் செல்வ மருளுமை
யமலை தன்வலக் கண்ணம ரன்னைபாற்
கமலை மேற்றுயில் கண்ண னிறத்திசெங்
கமலை பாதங் கருத்து ளிருத்துவாம்.

பால் கம் அலை - வெள்ளிய பாற்கடல். (கசு)

## சரசுவதி.

முற்று மாவியம் மூகத் துவமொரீஇச
செற்று மாவிய வின்பரு ளூறெரீஇ
யுற்று மாவிய ளுதனெண் பாதமே
பற்று மாவியக் கன்னையைப் பாடுவாம்.

ஆவிமுற்றும் எனவும், மாஇயல் செற்று எனவு மாற்றுக. மாஇயல் - ஆணவமல சத்தி. மா - கருமை; அது ஆணவமலத்தை யுணர்த்திற்று. உமா வியன் நாதன் எனப்பிரிக்குக. (கஎ)

## தமிழாசிரியர்.

குலைய மாதவ னேகுறு கென்றுகை
தலைய மாதவ வைத்தரன் றன்னுரு
நிலைய மாதவண் டந்த நிறைதமிழ்
மலைய மாதவன் சேவடி வாழ்த்துவாம்.

குல்லையையுடைய அழகிய மாதவனே நீ குறுகு என்று தன்கையை அவர்தலையில் அம்மா மிகவும் வைத்தழுத்தி அரனுரு நிலைக்கும்படி அவண் அழகு தந்த மலைய மாதவ னென்க. மாதவனே நீகுலைக, குறுகுக எனவியங் கோளீருக்கினும், முன்னிலைமை குலையும்படி என எச்சமாக்கினும் அமை

யும் அரன்றன்னுரு-சிவலிங்கரூபம். யாது-விருப்பமுமாம். அப்படிக்கொள் ளுங்காற் சிவலிங்கரூபம் நிலைக்கும்படி தன்விருப்பத்தை அவண் செய்து முடித்த மலைய மாதவ னென்க. (கஅ)

ஆளுடைய பிள்ளையார். வேறு.

காழி நாதனைக் கௌணியர் திலகனைக் கடையேற்
சூழி னாதனைத் தொழுமுனந் துடைத்துவெம் பவஞ்சப்
பாழி னாதனை யாளுடைப் பிள்ளையைப் பாடின்
வாழி னாதனைப் பன்முறை வணங்குவன் மன்னே.

இ-ள் - இடைக்குறை. பவஞ்சப்பாழினின்றும் ஆதனாகிய என்னை எடுத் தாளுதலையுடையபிள்ளை. வாழ்வையுடைய இனிய நாவை. (கக)

ஆளுடைய அரசுகள்.

வெய்ய னாவினை வசத்துழ லென்னுள மேவுஞ்
செய்ய னாவிலூர் பரனருள் பெறுநெறிச் செலுத்து
மெய்ய னாவிக ளுயவருண் மேனிகொள் விமலன்
றுய்ய னாவின்வேந் தாளுடை யரசடி தொழுவாம். (உ0)

ஆளுடைய நம்பிகள்.

கேவ லம்பதி தானெனக் கிளத்துபொன் னிதழித்
தூவ லம்பதிர் முடிப்பர னிழலுருத் தூயோன்
மாவ லம்பதி நலந்திகழ் பைம்பொழில் வயங்கு
நாவ லம்பதி யாளுடை நம்பிதா ணயப்பாம்.

தனிப்பொருளாகிய பரமபதி தானே யென்பதைப், பிரணவாகாரமாய மைந்த தனது ரூபத்தால் யாவருக்கு மினிது விளக்குகின்ற, இதழியாலை யை யணிந்த சுத்தமாகிய வன்மையையுடைய கங்கையிருகின்ற முடிப் பரன் என்க. அணிந்தமுடி யென்றியையும். (உக)

ஆளுடைய அடிகள்.

பாச கத்தியற் றுவிக ளருணெறி பற்றித்
தேச கத்தியங் குறீஇச்சிவ மயமுறச் செய்யு
மாச கத்தியக் கந்தெறு வாதமா ணிக்க
வாச கத்திய லாளுடை யடிகடாண் மலரே.

பாச கஸ்தி எனவும், தேசு அகத்து எனவும், மாச க தியக்கம் எனவும் பிரிக்குக. (உஉ)

சண்டேசுரநாயனார்.

ஓத கம்பர கதிநெறி யுற்றிடா தய்வான்
சீத கம்பர கதிர்வயற் சேய்ஞலூ ரடிகண்
மேத கம்பர கதிர்நிலை யானருள் விளைவாற்
பாத கம்பர கதிசெய்சண் டீசர்தாள் பணிவாம்.

பரகதி - அந்நியமார்க்கம். பரகதிர் - பாரமான நெற்கதிர். மேதகு அம்பரம் - ஞானகாசம். கதிர்நிலை - வினைத்தொகை. (உ௩)

அறுபத்துமூவர். வேறு.

சேயன் மாண்கம லேசன் றிலையடி
வாயன் மாசற வந்தரு ளுவலூர்த்
தூயன் மாதிருத் தொண்டத் தொகையுளார்
நாயன் மார்பத நாம்பணிந் தேத்துவாம்.

தில அடி வாயன் - "தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்" என்கின்ற அடியை முதலாகக்கொண்டு பாடியருளிய வாயினன். (உ௪)

நம்பியாண்டார் நம்பி.

விலங்கொ ளுவருண் மேவுபே ரின்பமா
பலங்கொ ளெவெமைப் பார்த்தரு டீர்த்தன்வாழ
நலங்கொ ளுரையூர் நம்பியாண் டார்நம்பி
யிலங்கொ ளுண்மலர்ப் பாத மிறைஞ்சுவாம்.

பேரின்பமாகிய பலனைக்கொண்டுவந்து எம்மைப்பார்த்து அருளுகின்ற தீர்த்தன் என்க. (உ௫)

சேக்கிழார்.

உலகெ லாமென வோங்கொரு பொன்மொழி
யிலகெ லாமென வீற்றிடை காட்டிமால்
விலகெ லாநூல் விரித்தருள் சேக்கிழார்
திலகெ லாமலர்ச் சேவடி போற்றுவாம்.

மால் விலகு எல் ஆம் நூல் - மயக்கம் நீங்குகின்ற ஞானப்பிரகாச முண்டாகின்ற நூல் என்க. திலகம் என்பது கடைக்குறையாய்த் திலகு என நின்றது. எல் ஆம் மலர் - சூரியனால் மலர்கின்ற நீர்மலர். (உ௬)

மெய்கண்டசிவாசாரியார்.

மைகண் டாவருண் மேனி வாவருள்
செய்கண் டாவென வெண்ணெய்நல் லூர்த்திகழ்
மெய்கண் டானடி மேவி யிறைஞ்சினின்
றுயகண் டாயுப தேசமி துள்ளமே.

மைக்கண்டா என்பது எதுகை நோக்கி இயல்பாயிற்று. அருள் செய் கண் தா - கிருபாநோக்கம் தந்தருளுக. (உஎ)

அருணந்திசிவாசாரியார்.

இகல வாகமர் வீழ்த்துமென் னெஞ்சுகே
ளகல வாகமன் வாதை யருணந்தி
சகல வாகம பண்டிதர் தாட்டுதி
புகல வாகம வாழ்விற் புகுத்துமே

இகல் அவா எனவும், ஆகம் மன் வாதை அகல எனவும், புகல வா எனவும் பிரிக்குக. (உஅ)

மறைஞானசம்பந்தசிவாசாரியார்.

வரவு மாமண வாளன் மலர்க்கழல்
விரவு மாமனம் வேட்டுமெயம் மாதவர்
பரவு மாமறை ஞானசம் பந்தர்தாட்
புரவு மாமலா நாடொறும் போற்றுவாம்.

வர உமா மணவாளன் எனப்பிரிக்குக. (உ௯)

உமாபதிசிவாசாரியார்.

கனக வம்பல நாதன் கவிபெறீஇ
யனக வம்பல னுகரு முமாபதி
யெனக வம்ப லழிக்கு மிணையடி
மனக வம்பலர் தூய்சிதம் வாழ்த்துவாம்.

என் அகம் வம்பு அல் அழிக்கும் எனப்பிரிக்குக. மன் - மிகவும். நக- விளங்கும்படி. (௩0)

அரதத்தசிவாசாரியார்.

சிரத வேதவான்சிவ னேபதி
பாத வேத நமவிற் பகர்மெனச
சாத வேதங் குரையா தத்தர்தம்
வாத வேதனை மாற்றடி போற்றுவாம்.

சிரம் எதம் தவு அரன் சிவனே பதி - மேலாகிய ஏதம் நீங்கிய அரனாகிய சிவனே பரமபதி; (இது நிச்சயமே; இதனை இதற்குரிய வேதசிவாகமாதிசிவசாத்திரங்களால் நிர்ணயம் செய்வதொன்றோ? எந்தச் சமயிகளும் தும் ஆசங்கையின்றி யங்கீகரிக்கத்தக்க பொதுநூலாய் நடனவேறுபாடுகள் மாத்திரமே விளக்கவந்ததாயுள்ள) பரதவேதம்-பரதசாஸ்திரமும், நமவில் பகர்ம் என-நமஸ்காரமுத்திராபிநயத்தால் விளங்கக் கூறுமென்று சரத மாகிய ஏதுவை அங்கே யுரைத்தருளிய அரதத்த சிவாசாரிய சுவாமிகளுடைய வேதனையை மாற்றுகின்ற வரதபாதங்களைப் போற்றுவாம் (௰)

பரதநூலிற் கூறிய விதிப்படி நடிக்கின்ற நடனியானவள் கணேசாதி தேவசமூகங்களின்வரவை அவரவர்களுடையஆயுதாதிகளைக் குறிப்பிக்கின்ற அதிசாதுரிய அநேக அபிநயங்களாற் காட்டி, அதே போலப் பரமசிவனுடையவரவையும் அவர்க்குரிய திரிசூலாதிகளைக் குறிப்பிக்கத்தக்க அபிநயங்களாற் காட்டுவதொழிந்து, நமசேஷியன் சிவனே என்று சுருதிகூறிய உறுதிவாசகம் இனிதுவிளங்க, நமஸ்கார முத்திரையாற் காட்டுதலால், அரதத்த சிவாசாரிய சுவாமிகள் சிவனேபதியென்பதைப் பரதவேதம் நமஸ்கார முத்திரையாற் பகருமென்று சரத ஏது உரைத்தருளினாரென்க. (௰௧)

பட்டினத்தடிகள்.

சாம்பு கார்மலம் வீட்டிமெய் சார்ந்துய
வோம்பு கார்கோ ளுடுக்கும் வளந்திகழ்
பும்பு காரின்வெண் காடர்தம் பொற்கழ்
றோம்பு காமலர் தூய்ப்பணிந் தேத்துவாம்.

கார்மலம் - ஆணவமலம்; சாய்புகார்மலம் வினைத்தொகை. தோம் புகா மலர் - எனப்பிரிக்குக. (௰௨)

குருவணக்கம்.

மூங்கையைப்பே சுவித்தலினு முதுசெயலீ தெனச்சடமா மூட னேற்குந்
தூங்கருளா லு ணர்த்தியவன் றெண்டகுரு மணிஞானத் துறவுக் காணி
யாங்குலமெய் யப்பகுரு வருமணிநா வலநாம மகில மெங்குந்
தேங்கியொளிர் பரமகுரு சிகாமணிக டிருவடிகள் சென்னி சேர்ப்பாம் ()

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௰௩:

---

# பாயிரம்.

உலகெல்லா மறைப்பொருளொன் றொன்றா வுணர்ந்து நேதிகளைந்
திலகு வாய்மை யுபசார மிவையென் றுள்ள படிதெளிந்து
மலையில் பொருளொன் றேயிலையுண் மறைகாய் போலுள் வயங்குபதி
நிலவு முடியு மாபதியே நிசமென் றோர்த லருமையினால். (க)

அன்ன மறையுட் பொருண்முடிவை யகில முணர்ந்தாங் குய்யும்வகை
சொன்ன முறைமூ வாறென்ப தோற்று புராணஞ் சாற்றவற்றின்
வன்னி புராண மொன்றிரவி மாண்சொல் புராண மொன்றயன்சீர்
பன்னு புராண மிரண்டரிசீர் பகரும் புராண மொருநான்கே. (உ)

ஈச னெமையா ளுமைநேச னெல்லா மாகி யல்லனுமாய்த்
தேசு விரியத் துவிதநிலை தேற்றும் பரம சிவன்மகிமை
பேசு புராண மைந்திரண்டப் பெரிய புராணத் தொன்றென்ப
பூசு பௌடி யோத்தரமா புராண மதிற்கேத் திரகண்டம். (ங)

இனிது விளங்கு மிதில்விளங்கு மெந்தை பெருமான் சூதவன
புனிதன் பெரிய நாயகிவாழ் புரத்தன் வரத்தன் பெருஞ்சீர்த்தி
வினைமுற் றொழித்தின் பருளிந்த வியன்கா தையைவேற் காத்தமலன்
நனியன் புளங்கூர் நந்தீச னயந்து கேட்ப நவின்றானால். (ச)

ஈச னுமைக்கோ துறமடிமீ திருந்து கேட்ட விளங்குழவித்
தேச னுரைகேட் டுவந்தருளுந் திருநந் தீசன் றனைவினவு
நேசன் சனற்கு மாரமுனிக் குரைப்ப வனைய நிறைதவத்தோன்
பேசி னானால் வியாதனுக்கப் பெரியோ னுரைத்தா னெனக்கென்னா.()

சூத முனிசொல் வடமொழியைச் சுவைத்தண் டமிழ்மா நிலமாந்த
ரோதி யுணர்ந்து திருவருள்பெற் றுய்வான் றமிழின் மொழிபெயர்த்திங்
கீதி யெனமெய் யன்புருவா யிலங்கும் பெரிய னியல்பானே
நீது நெறிக டானிருக்குந் திசையும் புகுதப் பெறாச்சீலன். (சு)

சிவனே பதியென் றுள்ளபடி தேர்ந்து தெளிந்த சிந்தையினா
னவனா ரருட்புத் திரமார்க்க மாயசிவபூ சனைநாளுந்
தவறா தகத்தும் புறத்திலுஞ்செய் சகசன் மார்க்க நியமநிலைக்
கிவனே யொருவ னென்றுலக மிசைப்பச் சிறந்த விசைப்புனிதன்.(எ)

அறங்க ளெவற்றும் பரசுவப்பே றருள்பே ரறமில் லறமெனுநூற்
றிறங்கொள் சீலன் வித்துமிடல் வேண்டு மெனுமாண் டிருக்குறளை
பிறங்க நாளுந் தன்மனையெம் பிரான்மெய் யடியார் தம்மனையா
மறங்க வளர்ப்போ னமுதளிக்கும் வகையிங் கெவர்க்கும் வகுப்பரிதே()

சூத வனத்தின் கீழ்பாலோர் குரோச தூரத் தாலங்காட்
டோதும் பூவை சியர்குலத்தா னுலப்பில் சீர்த்தி செறிராம
நாதன் குமர னுயர்கங்கா நதிசூழ் காசி போய்க்கொணர்ந்து
சோதி லிங்க மீனாட்சி சுந்த ரேச னெனும்பெயரால். (கூ)

மன்னு மணிப்பொற் கோயில்புரீஇ வரநற் றினத்தி லவ்விலிங்கந்
தன்னை யுமையோ டலரிமுதற் சண்டீ சாந்தம் பதிட்டைபுரிந்
தென்ன பொருளு நிறைதரஅன் றங்கத் தியல்பூ சனையென்று
முன்னு சிவாக மநெறியி னுளுற்றி வருமா முதலாக. (ய)

விளைதண் கழனி முதற்பொருள்கண் மிகுத்து நிலைப்ப வகுத்தமைத்
தளவொன் றிலாநல் லறத்தாற்றூற் பல்கும்பொருள்க ளூடோறு[தோன்
மளவொன் றிலாத சிவதரும மாதி யறங்கட் களித்துவப்போன்
களவொன் றிலாவித் யாவிருத்தி கண்ணு வளர்க்குங் கடமையினன். ()

அன்பே யுருவன் குறிகுணமொன் றறியா தடியார்ப் பணிசீல
னின்பே தருபா லாம்பகன்பே ரியையப் பெறுசீர்க் கோபால
னென்போ னிவனை யருந்தவஞ்செய் தீன்ற மகவின் வாஞ்சைமிகத்
தன்பாற் கல்வி நலன்முழுதுந் தாவில் குணமுந் தரப்பெற்றோன்.(கஉ)

இன்ன பெருஞ்சீர்ச் சிதம்பரவே ளிசைத்தா னிவன்சொற் படியிந்தப்
பன்னு சூத வனக்கதைதை பகர்தற் கறிவோர் சிறிதுமிலே
னுன்னி யிதனைச் செயலொழிந்தா லுவன்சொன் மறுத்த துளதாகு
முன்னி முடித்து மெனநினைந்தான் முடியாச்செயன்மேற்கொளலாகும்.

என்றான் புரிகே னிரண்டிடைநின் றெண்ணித் துணிந்தே னெமையாளு
முன்றோ னடியா ரெண்ணமெலா முடிக்கும் பரம னன்புசிறி
தின்றான் றொடங்கு செயற்கருளா விடினு மிசைத்த விப்பெரியோன்
றன்றா னடப்ப தாலருளாற் றானே யுமைகோன் முடிக்குமெனா. (கச)

துணிந்தாங் கனைய வடமொழியைத் தூய பெரிய நாயகியைத்
தணிந்தார் முடிமந் திரநாதன் சலசத் துணைச்சே வடிமல்லை
யுணர்ந்தார் பெரியர் தமையெளியேற் குணர்த்தா சிரியர் தாட்டுணையைப்
பணிந்தா ரருளி னடங்கிநிதம் பரவித் தமிழிற் பகர்கின்றேன். (கரு)

பகரும் புராண சருக்கமொரு பதினைன் கொடுவாழ்த் தெழினுடு
நகர்பா யிரமே யவையடக்க நண்ணு முதல்வைத் திவைவிரிபாத்
தொகையாயிரத்தைஞ் ஞூற்றிருபான் சொற்றே னளித்தே னவரசத்து
ணகைகூ ரிரதச் சுவையுண்டு நாவ லோர்க ளனியுவப்ப. (கசு)

## அவையடக்கம்.

சத்தம் யாவுஞ்சிற் சத்தி யுருவமே
யத்தம் யாவுஞ் சிவனுரு வாமென்ப
வித்த கைச்சொற் பொருள்க ளிடைவழு
வுய்த்து ணர்பவர்க் கியாமென் னுரைப்பதே. (கஎ)

யாவர் கூற்றுநின் னேவலி னல்லதை
மேவு றுவென் றியம்பினர் மேலையோ
ராவ தாலறி யாச்சிறியேன் புகல்
பாவெ னுவழுப் பார்ப்பர்கொல் பண்பினோர். (கஅ)

வழுநி றைத்திறை வைத்த களஞ்சியக்
குழுநி கர்த்தவென் கூற்றெனக் கொள்ளினும்
பழுது பார்த்தல் பழிப்பென்க பாவலோர்க்
கொழிவி லொன்றின்மற் றொன்றுற லின்றரோ. (கக

பாயிரம் அவையடக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருஉ.

———(o)———

## தற்சிறப்புப்பாயிரம். வேறு.

தேவை நகர்வாழ் வன்றொண்ட தேசி கேசன் மாணக்கன்
றுவில் வளங்கூர் காரைநகர்த் தனமா வணிகர் குலதிலகன்
சேவில் வருவா ரடிக்கன்பன் றிகழ்சொக் கலிங்க தேசிகனிப்
பூவின் மிகுசீர்ச் சூதவன புராணம் புகன்றான் புவிவாழ.

———

உ

சிவமயம்.

# திருநாட்டுச்சிறப்பு.

## பொது.

பொன்னாலு மணியாலும் பூவாலுங் காவேரி பொலிநீர் நாடு
பன்னாலு மறையாலும் பரனாலும் வரனோதும் பயில்சீர் நாடு
வந்நாலு முகத்தாலு மயனாலு மியலாத வருள்கூர் நாடு
வென்னாலுஞ் சொலத்தகுமோ வெண்ணரிய திருச்சோழ வெழிற்பேர்நாடு

உலகமொருங் குதவியகீ ரோததியி லுவணகே துள்ளத் தோவா
துலைவிறவத் துணர்வினிடை யுதித்தருளி யுவணையா சுருகி யோதப்
பலர்புகழ்பொற் பதியமர்ந்தும் பாராசன் பால்வலியப் பகர்ந்து பற்றி
யிலகுதியா கேசனுறீஇ யிருப்பதிந்நாட் டின்னசையே விசைப்பதென்னே

திருநெறிய தமிழ்மூவர் தேவாரச் சிறப்புயர்கேத் திரங்க ளிந்நா
ளிருநிலமெங் கணுமிருநூற் றெழுபதின்மே லொருநான்கா மிவற்று ளே
பரவுறுபற் பலநாட்டும் பயில்பதியெண் பதினன்கே பண்புநீடுஞ் [னைப்
சுரர்பரவு மொருநூற்றுத் தொண்ணூறு திருத்தலமிச் சோழ நாடு. (௩)

வைதிகசை வம்பொலிய வந்தருண்மூ வருந்தருதே வார மந்நா
ளெய்துமிரா யிரமுடிக்கொ ளிலக்கமிவற் றிறையருளா லிறந்த நீக்கி[காய
யுய்தருமூன் றெழிலெண்ணூ றுளவவற்றைஞ் ஞூற்றைம்பத் தொருநான்
தெய்விகமாண் டிருப்பதிகத் திரடனக்கே திகழ்தருமிச் சென்னி நாடு. ()

முந்நாடு தம்மினுஞ்சீர் முன்னாடு மிந்நாடு மொழிதென் வேதச்
சொன்னீடு முயர்தலத்தாற் சொன்னீடு வயனலத்தாற் றொகைநீ டின்ப
மன்னீடு பலவளத்தான் மல்குபொருட் குலவளத்தால் வளர்சீர்க் கென்று
மெந்நாடு மெவ்வுலகு மிணையாகா வென்பதுல கெல்லாஞ் சொல்லும். ()

## வேறு.

ஆரிய னீதிக் காணி யாதிமா மனுவி னீதி
யுருவமான் றுயர்க்குத் தன்னோ ரும்பன்மீ துரு *ளுய்த் தாரூர்
வரனருட் கருவூ லஞ்சீர் மனுநீதி கண்ட சோழப்
புரவல னருட்செங் கோலிற் பொலிவதிச் சோழ நாடு. (௬)

உலகெலாம் பரவு சான்றோ ருடைத்தெனு நாட்டி ருந்து
மலைமலை நிலன்வி ஞயோர்ந் தழைத்தன பாய நாமச்
சிலைவலான் றலைமை செய்யச் சேக்கிழார் குரிசி லாற்றும்
வலனுய ரமைச்சு நீதி மாண்பதிச் சோழ நாடு. (௭)

---

* உய்த்தவென்னும் பெயரெச்சத் தகரந்தொக்கது.

அருண்மொழித் தேவ ராய வருளினீர்த் தனைய வாய்மைக்
குருபரன் வாக்கின் றீக்கை கொள்கெனக் கொடுப்பித் தெம்மான்
றிருவரு ணிறைந்த சோழர் சிகாமணி யனபா யப்பேர்ப்
புரவலர் பெருமான் செங்கோல் பொலிவதிச் சோழ நாடு. (அ)

மணிகளி லமல னங்கண் மணியணி யங்க ராகக்
குணிகளிற் றிருவெண் ணீறு கூறுமந் திரங்க டம்முட்
கணிதிரு வைந்தெ ழுத்தே கவினுறீஇ வயங்கு மாபோற்
றுணிபுயர் மேன்மைத் தான்றோர் துதிமிகுஞ் சோழ நாடு. (௯)

மன்னுமே தக்க சோழ வளநாடு சோறு டைத்தென்
றன்னையா ரவ்வையாரோ தருண்மொழிப் பொருண்மை நோக்கி
னென்னநன் னாட்டு மேலா யிகபர மோக்க வாழ்க்கைத்
தொன்னிதி தானே யீத றுலக்குமிச் சோழ நாடு. (௧௦)

நாதக்க மடந்தை யென்றே நாவலர் பரவி யேத்து
மூதக்க வாய்மை ஞான முதல்வியா மவ்வை மாதா
மேதக்க வளநா டென்ன விசேடண முன்பின் கோத்திட்
டோதக்க வின்கொண் மேன்மை யுற்றதிச் சோழ நாடு. (௧௧)

ஆருநீர் நாடென் றோதி லனையது தனையே யன்றி
யோருதல் பிறிதொன் றின்பா லுறுதிடு குறியே யாகும்
பேருறீஇப் பலமாண் செல்வப் பெருவளப் பெருக்க மென்றுஞ்
சேருபு திகழும் வாய்மை தேற்றுமிச் சோழ நாடு. (௧௨)

அங்கண்மா ஞாலத் தாவிக் கருளிய கோயில் கொண்டா
னெங்கணு மென்ப தேனை யிடங்கட்கு முகம னாக
வொங்குதன் பாலவ் வாய்மை யொளிர்தர விடம்வே றின்றிச்
சங்கர னமர்பொற் கோயி றழைப்பதிச் சோழ நாடு. (௧௩)

செங்கம லத்தின் மேவுந் திருமகள் பொதுமை நீக்கி
மங்கல வகைக ளெல்லா மலிதர வழங்கு மாண்பாற்
பொங்குறு சிறப்பி னென்றும் பொலிதலாற் பொன்னி நாடென்
றெங்கணுந் திகழ்பேர் கொண்ட திசைமிகு சோழ நாடு. (௧௪)

அரியயன் முகுந்த னாதி யமரர்நா டவனி யேனை
நிருபர்நா டுருத்தி ராதி நேசர்நா டெல்லா மென்று
மருவுதங் குறைக ணீங்க வாம்பெறச் சிரமேற் கொள்ளும்
பெருமையாற் சென்னி நாடென் பேருடைத் திந்நீர் நாடு. (௧௫)

நாடெலாம் விளைவி னீட்ட நகரெலாம் பொருளின் கூட்டங்
காடெலா மலர்ப்பூஞ் சோலை களனெலாம் பிறங்கு நெற்போர்
மாடெலாந் தரும சாலை மறுகெலா மணிக்கு வால்கள்
பாடெலா நாடும் போற்றிப் பணிதிருச் சோழ நாடு. (கசு)

கற்பகப் பொங்க ரெங்குங் கற்பக வல்லி யெங்குங்
கற்பகல் லூரி யெங்குங் கற்பக மாத ரெங்கு
மற்பக மாந்த ரெங்கு மற்பூக லறங்க ளெங்கும்
பொற்பக மாட மெங்கும் பொற்பகன் மணிக ளெங்கும். (கஎ)

காத்திர நீழ லெங்குங் காத்திர வளங்க ளெங்குங்
காத்திர சுகங்க ளெங்குங் காத்திர வாமை யெங்குங்
கோத்திர குலங்க ளெங்குங் கோத்திர நலங்க ளெங்குங்
கோத்திர மேன்மை யெங்குங் கோத்திரன் பொழிபா லெங்கும். (கஅ)

பார்ப்பவர் கண்கட் கென்றும் பசுமையே தோன்றும் யாண்டும்
பார்ப்பயில் பயிர்முன் னைவ பலனொடே பல்கும் யாண்டும்
பார்ப்பணி யாதி தாமும் பல்லுணா நுகர்வ யாண்டும்
பார்ப்பனச சாதி யாதி பகர்நெறி தவறா யாண்டும். (ககூ)

திராவிட வேதம் போற்று திருத்தகு மூர்த்தி யீட்டந்
திராவிட வேதம் போற்று திருத்தங்க டிருத்த லங்கள்
பரவிட மிடங்க டோறும் பல்குவ சோணாட் டென்று
பரவிடல் யாரு நேரே பார்க்கலா மின்று மென்றும். (உ0)

பரவுறு சரியை யாதி பக்குவர்க் கருண்மெய்ஞ் ஞான
குரவர்தம் மினங்கள் வாய்மைச் சங்கம குலங்க ளாதி
வரமிகுங் கூட்டங் கூட்ட மாத்தொகு வகையிங் கன்றிப்
பரவுமெந் நாட்டு மின்றாற் பார்க்கலா மின்று மென்றும். (உக)

இன்னநாட் டியற்சீர் யாரே யிசைக்குநர் தொகுத்தி யாவு
மென்னநாட் டினுமே னட்டி னிலகுபே ரின்ப நல்கிப்
பொன்னிநாட் டிடங்க டோறும் பொய்யுறா முனிவர் வாக்கின்
மன்னுகார் வளமுன் னோர்ந்த வகையொரு சிறிது ரைப்பாம். (உஉ)

மழைவளம்.

உருவநா லருவ நாலென் றோதிய வுபய நாப்ப
ணிருமையும் பொதுமை யாகி யிலங்கெழிற் சதாசி வன்றன்
பெருகொளிப் பளிங்கின் றோற்றம் பிறங்கிவிண் ணேக் கீசானத்
தெருண்முகப் பிரதி விம்ப மென்னவான் சேணிற் சென்ற. (உங)

நமதன்ப ரூசை மித்த நாலையவ் வாணை நீத்துக்
கமையம்பு கொண்டு பின்னுங் களிப்பது காண்டு மென்று
மையயன்ப னீற்றுக் கோலத் துற்றெருழித் திடநேர் சென்றுங்
கிமையம்பு தஞ்சே ணின்று மெறிதிரைக் கடல்புக் கன்றே. (௨௪)

கருங்கட றரங்கக் கையாற் காமரு தரளமாதி
யிருங்கழ லிறைஞ்சித் தூவி யிரத்தலி னரற்றல் கேளா
வொருங்குணு திரங்கி யெம்மா ஞெழிநமெதன வெழுந்து வானில்
வருங்கனம் வேண்டுங் காறு மாந்திமே லெழுந்த மாதோ. (௨௫)

வாரிதி குழியப் புக்கு வாரிவாய் மடுத்த வானந்
தேரிய லிறைய கோரத் திருமுக காந்தி யேந்திக்
காரிய லுருவாய் வாமக் கதிர்முகச் செம்மை வாய்ந்தாங்
கேரியல் சம்பை யீட்ட மெங்கணும் பரப்பிற் றன்றே. (௨௬)

மதிநதி யிதழி வேணி வானவன் காத்தெஞ் ஞான்றும்
பொதுமையி னிருமை யாய புற்கல வர்க்க மெல்லா
மதிர்தரு தமரு கத்தி னைழத்தரு ளொலியே யென்னக்
கதிர்விசும் பெழுசீ மூதங் கனையொலி பெருக்கிற் றன்றே. (௨௭)

கறைமிடற் றிறைவன் மத்த கயத்துரி யெடுத்துப் போர்க்கு
முறையென நிமிருஞ் சைய முதுவரை யெங்கு மூடி
நறையொளி நீல்லி தான சித்திலத் தொடைநி றைத்தாங்
குறைமலி தாரை யாண்டு மொய்யெனப் பெய்யா நின்ற. (௨௮)

இறையமர்ந் தினிது வாழ்வெற் பிருஞ்சிற கரிந்தோ மிந்த
மிறையொழிந் துய்து மென்று விண்ணிறை மணிக்குடத்தி
னறைகடற் கூவத் தாணை யாங்கயி றமைத்தெ டுத்துக்
குறைதப வாட்ட லெய்ப்பக் கொண்டனீர் விண்ட மாதோ. (௨௯)

போற்றிய சதாசி வன்றற் புருடவா சியம்போற் பொன்னின்
றேற்றமிக் கிலங்கு சாபந் துலக்குவான் பெய்ந்நீ ரன்றேன்
பாற்றிகழ் சத்தி யோசா தம்முக நிறப்ப ரப்பின்
வீற்றுவீற் றருவி சைய வெற்பிட மெங்குங் காட்டும். (௩0)

விண்ணுயர் சைய நாம வெற்பிருஞ் சிரந்தொ டுத்துத்
தண்ணிய சாரல் காறுஞ் சதமக னிதம தாகக்
கண்ணறுந் தளவு மல்லி கைத்தொடை சாத்தி யேத்தும்
பண்ணிசை யென்னச் சூழ்ந்த பரவுநீ ரருவி யோதை. (௩௧)

தனையுறு வலியில் சீவர் தமையுமாற் சார மென்ன
வினிதெடுத் தழுக்க கற்றி யின்பரு ளாசான் போலக்
கனைகுயி லுவரொ ழித்துக் கான்றநீ ருலக மெல்லா
நனியுணு மமுத மாகி நானிலத் தொழுகிற் றன்றே. (௩௨)

நிலையிலா வுடலங் கையி னேர்ந்தவக் கணமே மிக்கோர்
நிலையிலா வுடலங் கையி னெறியினுய்த்*துய்து மென்னு
நிலையிலார்க் களித்தல் போலி நீள்பயோ தரநீர் * பெற்றந்
நிலையிலாங் கெஞ்சா நீத்த நீத்தமா வளித்த மன்றே. (௩௩)

கணந்தொறு மாறி மாறிக் கருதுமுள் ளத்தின் † மாலை
‡ யுணர்ந்திரு நிதிசெல் வப்பே ருற்றதை யுதவுவோரை
மணந்தரு சீர்த்தி போர்த்தன் மானநீர் முழுதும் வானந்
தணந்துற வளித்துமேனி தவளம்போர்த் தாங்கு நின்ற. (௩௪)

பொருள்படைத் தருளா ரெய்தும் புன்மையு மளித்தார் தூய்மை
மருவலுங் காட்டி யாங்கு வாரியுண் டேகுங் காறு
மிருளுறீஇச் சைய மால்வெற் பெய்திநீர் பெய்த மாரி
தெருள்பெறு தூய்மைத் தாகித் திகழ்ந்துவான் சென்ற வன்றே. (௩௫)

உடல்பெறுங் கணத்த றத்தி னுதவனா னெறியென் றியாமிவ்
விடைபெயி னியாச் செல்வர்க் கீந்ததா யறனு மின்றாய்க்
கடல்புகு முலக மெல்லாங் களிக்கநீ ரளிக்கும் வெற்பென்
றடையநன் கொடைசெய் கொண்மூ வமலமா யகல்வான் சென்ற. ()

உருவுடைச் சீவர் யார்க்கு முதவிய வுருக்கொண் § டெய்தும்
பரமன்யா மவனி லன்னோர் பயன்பெற வுருவு கொண்டு
வருவதே முறையென் றெம்மான் மலியருள் பிரவ கித்தாங்
கொருவுறச் சைய வெற்பி னொழுகுமா லருவி நீத்தம். (௩௭)

ஈசன்மாட் டினித மர்ந்தே யிணையினீள் மலைய வெற்பின்
வாசனார் கமண்ட லத்தின் மந்திர நீர தாகித்
தேசமார் கணேச னீண்டே செல்கெனத் திருவு ளங்கொண்
டாசில்பூ முதல்வ ளர்ப்பா னளித்ததித் தெளித்த நீத்தம். (௩௮)

* பெற்றவென்னும் பெயரெச்சத்தகரந்தொக்கது.
† மாலை - தன்மையுமாம்.
‡ உணர்தல் இரண்டிடத்தும் பொருடந்துநின்றது.
§ எய்தும்வினைமுற்று.

இந்நதி சைய வெற்பி னிடையமர்ந் தருவி யாக
மன்னியே குறுமா லீது மந்திர தோய * மாறூற்
பன்னுமைந் தொழிலுந் தானே பண்ணுமென் றியம்ப லென்னும்
பொன்னிகா விரிமுன் னுமம் புகல்பவிப் பொருவி னீர்க்கு. (௩௯)

நதியெலாந் துதிசெய் கங்கா நதியுமிக் கதிசெய் பொன்னி
நதியினோர் கூற்றுக் கொப்பா நவில்வதும் பழுதா மென்னே
நதியிவை யிரண்டும் பூவி னடக்குங்கா ரணத்தை நோக்கி
நதிவரன் றலையன் னோர்மெய்ந் நாவெடுத் தியம்பு முண்மை. (௪0)

பிறந்திறந் துழலுந் தேவர் பேணுமூ ரமர்ந்த கந்தை
விறந்துபா ரரசு வேண்ட மென்சடை நுதிக்குட் டேஞ்சிப்
பிறந்தொரு முனிவன் மிச்சி லாகிப்பின் காதிற் போந்தே
யிறந்தவர் சாம்ப ரென்பி னெய்திய திசைத்த் கங்கை. (௪௧)

பொன்னிமா நதியிப் பாரிற் போந்தருள் புனித மேன்மை
முன்னொரு வாறி சைத்தா முரனொழித் தோர்ந்திப் பொன்னி
தன்னிலை யுணர்க வானீர் தானுமோர் சிறிதொவ் வாவிந்
நன்னதி மேன்மை யோரா நாயினே னவில்வ தெங்ஙன். (௪௨)

வானிடைத் தாரை யாகி மலையிடை யருவி யாகி
மானிலத் திடையே யாறு வாவியாழ் கூவ லோடை
கானிலத் தடமுன் னுமங் கடற்புன லொன்றே கொண்ட
தானிடைப் பரமன் சிவர்க் கருடாப் பெறும்பேர் போல. (௪௩)

கருமுகி லாய மத்து கயமிவர்ந் தப்பு மாரி
பெருகவில் வாங்கி மின்வாள் பிறக்குகா ரொனும்பொன் மோலி
யரசுறக் கண்ட வேனி லாங்குறும் படங்கித் தேய்ந்து
சுரநிலத் தோர்காற் சென்னி தூக்கிநீர் நோக்கி மாயும். (௪௪)

பெரியவர் முனியி னும்பின் பேறினி தடைத றிண்ணந்
தெரியுறப் பொன்னி யீர்த்துச் செல்பிணை பிரிந்த தன்கே
ளரிணநேர் புகுந்தோர் பாங்கின் படைந்ததால் வாத வூரம்
புரவல ரொறுத்தா லொன்றும் போதுமென் றருளிற் றேர்ந்தாம். ()

கணிமலர் காசா கொன்றை கவின்பலா சலர்பூ முல்லை
யணியணி பரவப் போர்த்தாங் கைவருந் தானே யைந்து
பணிகளுந் தானே செய்யும் பான்மைநேர் காட்டி யேகு
மணிகொழித் திலகும் பொன்னி மந்திரக் காக தீர்த்தம். (௪௬)

---

*ஆனல் என்பது ஈண்டுதேற்றப் பொருடந்தது.

ஆக்கமு மறையு முண்டா மரனரு ளொன்றிற் றாழ்ந்தோர்
மீக்கொளு நிலையர்க் கென்றன் மெய்ம்மையே தருப்பை யாதி
தாக்குநீர்ப் பொன்னி முன்னந தாழ்ந்ததி விருத்தி யாய
மேக்குற நிமிர்த ருக்கள் விளிந்தன வேர்கீண் டம்ம. (சஎ)

கடிகமழ் மாதர் மேனி காட்டெழின் மலர்ச்சு ராவி
னொடிவின்மஞ் சரிகள் புன்னை யொண்டுணை ருடன்கொண் டேகும்
படியினீள பொன்னி காட்டும் பசும்பொன்முத் தாதி பூண்டு
நெடியதண் புனற்ச ரிக்கு நீரர மகளிர் தோற்றம். (சஅ)

வேறு.

மூவரு முறையே யொருதொழி லிரண்டு முத்தொழிற் குரியராய்த் துரிய
தேவினி லொடுங்கல்காட்டிடுங்குறிஞ்சித்திணையிலவ்வொருநிலப்பொருளே
காவகத் திரண்டு பணையின்முப் பொருளே கவருபு காட்டியீர்த் தேகி
யோவற வவைமுற் றுததியிற் புகுமா றுய்த்துறும் பைத்தநீர்ப் பொன்னி.

வேறு. குறிஞ்சி.

ஐந்திணையின் முதற்றிணை யீ தசலமாண் டிணைபேரின் பமைதி தேற்று
னைந்தமிணை விழைச்சினிறை நலத்திணையென்றைவரின்முன்னுதனெற்றிச்
செந்தழலாய்ச் சத்தமல சித்திடையா னந்தமயத் திரட்சி யாய
சுந்தரவே ளமர்ந்தருளோ கூரந்தளிக்கப் பெறுங்குறிஞ்சித் தாயவைப்பு. (ருo)

வேறு.

பூந்துணர் பொதுளும் வேங்கைப் புடைசூலா மெறுழி யீட்டஞ்
சார்ந்திற வுளர்கு பூமச் சாமிதா ளிறைஞ்சல் காட்டு
மேந்திண ரொழுக்கு செந்தே னின்னரு ளொழுக்க மெய்க்கு
மாந்துமா முசுக்க ளாடன் மற்றவர் வெறியாட் டேய்க்கும். (ருக)

செயலையந் தருமே லோர்பைஞ் சிகியுற வண்டி சைப்ப
வயல்வரை வெடிப்ப வீழ்முத் தாங்குச்சென் றுதைக்குந் தோற்ற
மியலிதண் மேலா லோல மெனக்குரல் கவர்புள் ளோடக்
கயல்விழிக் குறமான் முன்னுட் கவணெறிந் தமர்ந்த காட்டும். (ருஉ)

அருகமர் பாரானை வேங்கை யடியுரு.வொடுக்கிச் சீயங்
கரியுறல் கண்டு வல்லே கரந்துறை பான்மை செவ்வே
ளிரலைமா மகண்முன் போந்தாங் கிரந்திற வுளர்கோ னம்பி
வரநெறீஇக் கணியொன் றாகி மறைந் தொளிர் வாய்மை தேற்றும்.

காமுறு பிணையொன் ஞேர்பாற் கதுவிய வொருபால் வேழ
நாமுற மருப்பு நீட்ட நாப்பணின் றலர சோக
மோமுதல் வேழ முன்ன ரூன்றல்கண் டெயினர் நங்கை
யேமுற வலித ணைப்ப விங்கடுச் சேயை யேயும். (ருச)

புதுமலர் கணியிற் ஞேன்றப் புளிந்தர்கூர்ங் குயத்தி னேனல்
கதுமென நிலத்திற் சாய்வக டம்பணி தடம்பு யத்தோ
னெதிர்பொரத் தொடர்கி ராதர் யாவருஞ் சேவ ஞேன்ற
விதிர்விதிர்த் தாவிசோர்ந்து மேதினி வீழ்ந்த தேய்ப்ப. (ருரு)

அரிகுர லருவி யாவு மாங்கெயிற் றியரி னேர்பு
குருமலர் வேங்கை நீழற் குவாலுற வீழ்வ வள்ளி
யருளினு ருயிர்பெற் றன்ஞே ரறுமுகன் றிருவ டித்தா
மரைநிழ லுறமுன் வீழ்ந்து வணங்கிய வாய்மை காட்டும். (ருசு)

கறிக்கொடி யிணர்த்துச் சூழ கருத்தரு விளர்த்த செம்மல்
வெறித்தசெங் காந்தண் மீது வீழ்த்தி சின் ஞெளிருந் தோற்ற
மறித்தகண் ணெறித்த வோதி வள்ளியோ டள்ளி யெம்மான்
பொறித்தழ லிடையி லாசம் போகட்டு மணந்த தேய்க்கும். (ருஎ)

தோற்றட மருப்பு கொங்கைத் துணைக்குடைந் துருவி ளர்த்துந்
தோற்றவை யனைத்து மாங்குத் துணித்தித ணமைத்து மீது
தோற்றமன் கொடிச்சி, மார்கைத் தொடிசசிமார் வீற்றிருப்பர்
தோற்றவர் வென்று ளாரைச் சுமப்பது மரபே யென்ன. (ருஅ)

மருங்குலைக் கொம்ப ரென்பர் வளர்பசுங் கொடியே யென்பர்
பெருங்கவி வாண ராகு பேரவை யேனை மாதர்க்
கிருங்கழ லெயினர் மாதர்க் கியற்பெய ரேகொ லென்னத்
தருங்குளிர் தழைதொ டுத்துத் தாமரைக் குடுத்து வாரால். (ருகூ)

துயர்தரு கணைவேட் கீந்து சோகஞ்செய் நினக்க சோகப்
பெயர்கொலென் றெயின மாதர் பெரிதுளங் கறுத்து தைப்ப
மயர்வுறச் சிவந்து மேன்மேல் வாளிதூய் வருத்துந் தெம்மேற்
செயலைசெய் செயலை யோதுஞ் செயலெவன் செயலை யேபேர். (சூ0)

அழலெரி மடுப்பித் தாங்க ணகருமுன் னகழ்ந்தெ றிந்து
பழகுமை வனமுன் வித்திப் பயனனி பல்க வாழ்வார்
தொழின்முய லெயினர் யாவுஞ் சுடுநெருப் பிருந்த காடு
தழையுமென் ஞேதுந் தன்மைத் தனிமொழி யகிர்த மாமோ. (சூக)

ஏனலூன் கிழங்கொ டைய லின்னற வாதி யாவ
கானவ ரருத்தி யொன்றே கருத்தின ரருத்தி வள்ளி
கோனையுண் டுவப்பர் யாவுங் கோதறச் சிவமாக் கண்ட
ஞானியர் வந்த வெல்லாஞ் சிவார்ப்பண நயக்கு மாபோல். (சுஉ)

வேளெனு முதனி லைப்பேர் வேடரோன் றிறுதி யாதி
கோளுறீஇ யமைய வாய்ந்து குலமுதற் குமர வேடன்
கேளிரா யுரிய சம்பந் திகளெனக் கிளத்தப் பெற்ற
மீளியர் மேன்மை யம்ம விளம்புதற் கெளிய தேயோ. (சுங)

கண்ணப்ப னெப்ப தோரன் பின்றெனக் கரைந்த மெய்யன்
புண்ணெணக்க மணிவாக் கெந்தை யுரைக்கிலக் காய தூய
திண்ணப்பொன் றுமை வாழ்வின் றிருவவ தார மேன்மை
நண்ணப்பெற் றுளார்கு றிஞ்சி நாயினே னிசைக்கற் பாற்றே. (சுச)

வேறு. பாலை.

புராரி யேமுதற் சுரரெலாம் பூருவ மகிட
சுராரி யாற்கொளுஞ் சினத்தழன் முழுமையுஞ் சூழ்ந்த
பராரி யோருரு வாயவம் பணத்தியென் றுரைக்கும்
வராரி யூர்தியங் கமர்ந்தருள் வயத்தது பாலை. (சுரு)

கணமுந் தாங்கருஞ் சினத்தழ லுருவினள் காக்கு
மிணையில் பாலையு நண்பகற் பரன்முரம் பிடத்தைப்
புணர்பொ ரோர்பொழு துடற்றுவெங் கதிரினற் புலனாய்த்
தணவு மாலைய தல்லதை யுலகெவன் றுங்கும். (சுசு)

இன்ன பாலையி னிறையழல் கமர்வழி யேகி
யன்ன பாதல முழுதுமார்ந் தகிபதி யனந்தன்
சென்னி மீதுநின் றெரிவதை மணியென்பர் தெரியா
ரென்னை நாமினி யிசைப்பதவ் வெரிதழல் விரிவை. (சுஎ)

உடலி னேய்முழு தொழித்துய ராற்றன்முற் றுதவுங்
கடமை பாலையங் கிழத்திக்கென் றேதனோர் காட்டுந்
தொடர்ச மூலமு நோயெலாந் தொலைத்துடற் பலன்செய்
திடன வாமுதிர் வேப்பினந் தளிப்புறஞ் செறிந்து. (சுஅ)

வாகை யாங்கணுந் தருந்திரு விந்தைமா மகளே
யாகை யாலதி லமுமடைந் தருள்பெறு கெனத்தஞ்
சாகை யாற்றிகந் தங்கண்மூ லததிற்பா தலம்விண்
போகை யானசைந் தழைப்பது போல்வது வாகை. (சுகு)

பிரிந்து செல்லுநர் தனிமைதீர்ந் தின்பமுட் பெருகப்
பரிந்து மல்குபூம் பாவையர் பஃறொகை காட்டும்
புரிந்த நாயகி சேடியர் குழாமெனப் புருடர்
தெரிந்து மாதரார் தம்மின மெனத்திகழ் குரவம். (எ0)

சுரர்நி லத்தமு தரிதுபல் காவலுட் டுறுமிச்
சுரநி லஞ்சுதைத் திரளைபல் கோடிமேற் றெருத்தச்
சுரரு முண்கெளி தென்பபோற் றூத்திரி துருமஞ்
சுரர்ம ருத்தினுஞ் சுவைப்பலப் பலம்பல சொரிவ. (எக)

பொன்னி னூட்டிளைந் தருமலர் பொன்னெனு மொன்றே
யன்ன தென்பெறு மலர்மல ராடக மரும்பு
பன்னு மாண்கிளிச சிறைப்பொனுஞ் சுகந்தமுஞ் பரப்புங்
கன்னி காரங்கொப் பணியிள முலையெழில் காட்டும். (எஉ)

மதுர வொண்கனி தாத்திரி யீந்துமுன் வலிய
வதிர நல்கவும் பாலுண வருந்துவ கபோத
மதமு டற்குறு மெவ்வுறு வழங்கினு மறுத்து
சிதமென் றுங்கட காதியுண் மாதவர் சிவண. (எ௩)

வேறு. முல்லை.

முன்னம் பதினு றுயிரமேன் முல்லை யலைத்துந் துவரையினி
லென்னும் புவனப் பழிசுமப்ப தெற்றுக் கினித்தூச சோழமுதற்
பன்னுாதேத்து முல்லையெலாம் பல்கப் புரநதப் பழிதுரந்தங்
குன்னும் பயன்மிக் குறுதுமென வுவண கேதோம் புறுமுல்லை. (எச)

கீர வீரை பிரிவாற்றுக் கிளர்பே ரன்பி னுடையானைச்
சார வடுத்தாங் கானிரைக டாமே பொழிபால் குடத்தியர்கை
யார நிறைபல் குடத்தியரா யடுத்து மடுத்தெங் கணும்பரம்பி
யோ வளர்க்கு முல்லைமுத விறையுட் குறிப்போர்ந் தொழுகுநர்போல்.

கடியோர் சிறிதில் பொற்பூக்கள் கலுல்கற் பகமுந் தலைவணங்கும்
படியோங் கார விதசகித பஞ்சாக் கரங்காட் டிதழியெனும்
வடிவோங் கியகற் பகங்கள்பல மல்குந் துத்தோ ததியிதற்கந்
நெடியோ னுழி நிகர்கொலென நிறைபால் வெள்ளம் பரந்தொழுகும்.()

ஆயர் மதிக்கு மண்டர்பல ரங்க லாரிந் திரைபல்லோர்
பாய விதழி செருந்திபல்கற் பகமான் றேனு மத்தொலிகண்
மேய பூவைக் குலமரிகள் வெண்ணெய்க் குடம்பால் வெள்ளமடுத்
தேயும் புறவைப் பாற்கடலொன் றென்னு மிதுவோ விதன்பெருமை.

வேலி கடவாப் பிறர்தொட்ட விரைப்பூங் குளத்து நீருண்ணுச்
சீல முடன யாசகமாச செறிபுல் லுண்டு குறுமுயலுஞ்
சால விரத நெறியுறுமேற் சாற்றும் புறவந் தனிபுரக்கு
ஞால மகிண னருளினல நவிற்ற லெவனு மினிப்பிறநாம். (எஅ)

வழிபா றருமான் கன்றினமு மான்கன் றினமு முடன்விளையாட்
டொழியா துகைப்ப மகாரினுமிக் குறமார் பணைத்து மடியிருத்திக்
கழியா வுவகைக் கடறிளைப்பர் கனிவாய்ச் சியரவ் வாய்ச்சியர்க
ளிழியா நீத்தோர் களும்வாஞ்சித் திடுப வெனிற்பி னிசைப்பானேன்.

எவனு மின்சொ னிகராவ தென்றுட் கறுத்தாய்ச் சியரான்பா
றுவரா ரழலிற் காய்ச்சியுமேற் றோயா மத்திட் டதுதிரளு
நவநீ தங்கண் டிசசூர நலத்தா லென்றே நினைப்பு கழ்த
லிவனோர் குதுமப் பெருமையுமென் றெரியிட் டுருக்கி யின்புறுவார்.

அடரு மிடரார் புரிநதாலு மாகூழ் வலத்தார்க் கபிவிருத்தித்
தொடர்பே யாமென் றிடலோர்ந்தாந் தொறுவி மார்காய்ச்சான்கிர [யா
முடனே ததியாய்நனிசுவையுற் றடைமத்தினில்வெண் ணெய்ச்சுவை
யிடர வுருக்க நெய்ச்சுவையா யின்றி யமையாச் சிறப்பமைந்த.

அர்க்க னுதவிக் கிதுகைம்மா றுகென் றண்ட ரவண்விளக்கு
மூர்க்க மாட மாடகமுன் முதிர்பசு சைகணீ லம்பொன்முதல்
வர்க்க மிரவி யிளைப்பாற வதிபல் லிரவி யெனக்குவிப்பா
சொர்க்க மிணையோ பொன்னென்றே சோழ்பே றிகட்சேயிடமாமால்.

உலகம் புரப்போன் றனைப்பொ துநீத் தொருதன் றனக்கே சிறப்பாக
நிலவ வகித்துக் கொண்டொளிரு நிலனென்றேவைந்திணைத்துறையுட்
குலவு மிருத்த லகப்பொருணூல் கூறிற் றிதனுக் கென்றுபெரும்
புலவ ரிசைக்கும் பெருஞ்சிறப்பிற் பொலிவ தனைய பூம்புறவம். (அ௩)

மலரும் புறவத் தண்டர்கடம் மரபி லுதிப்ப வானுய
ரலகின் றரிய தவம்புரிந்தோ ரனைய புறவின் றவமெளிதோ
குலவும் பெருஞ்சீ ரானுயர் குழலி னோசை கேட்டருளி
நிலவொண் சடையோன் விடையிவர்ந்து நேரே வரும்பேற் றினதம்ம.

வேறு. மருதம்.

பொன்னுலகைந் தருச்சுதன்மை புரியமர ராமகளிர் போற்றுஞ்சீர்த்தி
வன்னமுலைச் சசிசிந்தாமணிமுதற்பன்னிதிபோக வகையில்வாழ்க்கை
தன்னினுமிக் கார்வமுறத் தடமலர்க்கண் குளிர்காட்சி தாவா தென்று
முன்னுவனத் தெனச்சுரர்கோ வதிதேவாய் வழாநிலத்துமருதமாதோ.

ஊடுதல்கா மக்கின்ப மெனுஞ்சுருதி யிலக்கணமீ துண்மையேயென்
றீடுபெற நிதரிசன விலக்கியத்தாற் றேற்றுதலி னிதுவே யூட
னீடுதிணை யாய்வளஞ்செய் நிலையினுல கபிவிருத்தி நியமாய் நின்று
கூடுதிணையிம்மருதக்குளிர்திணையே லிதன்பெருமை கூறற்பாற்றோ.

பொன்னிநதி யெனும்பெருஞ்சீர்ப் பூங்கொடியொன் றரிசொனதி முதலாப்போதும், பன்னதிய பெருங்கிளைகள் பற்பலகாற் சிறுகிளைகள் பரம்பநீட்டித், தன்னிகர்பல் வயறழைத்துத் தருபைங்கூழ் நிரைபூத்துத் தானியாதி, மன்னியபற் பலவகைய வளம்பழுத்தே யெஞ்ஞான்று மல்காநிற்கும்.

இன்னமுதம் பருக்கிவளர்த் தெடுத்தினிது பாராட்டி யினிய வூட்டித் தென்னருணற் றாயெனவே சென்னிறைகாவிரிமூலத்தாய் செவிலிகைத்தாய், மன்னியபாராட்டுறுதாயூட்டுறுதா யையவருநதாய் வழிச்சென்மாபோற் றன்னிடையை யாறுகடாநதனித்தனியேகிளைத்தொழுகத்தாவாதோங்கும்.

வேறு.

உலகெலா மளித்திடற் குரிய பேரரு
ணிலவுமா வெள்ளமே நிகர்செல் காவிரி
வலனிமிர் தருபிர வாகந் தாயினை
யிலகநேர் கண்டசே யெனக்கண் டார்ப்பரால். (அக)

கண்டிடு முழவரக் கவேரன் மாமக
ளொண்டொடி நிலைறபய முணசசெல் சேயென
மண்டொலிக் கிணையெழ மருவிச் சூழ்ந்துசென்
றெண்டரு கால்களி னினிதி யக்குவார். (கூ0)

அருள்புக நெகிழுமெ யன்ப ருள்ளெனத்
தருபுனன் மடுத்தலு மள்ளர் தண்வயல்
வருகமர் விரணங்கீர் மருத்தொ ழுக்கலு
மொருவியாங் கொழிந்துசா லுறக்கு ழைந்தன. (கூக)

பாவனை யுறைப்பவுட் பயிலு மைந்தெழுத்
தாவபன் முறையெழு தன்பர் போன்மெனக்
காவுபல் பகடல நுகத்தின் காற்பிணைத்
தோவறு களமராங் குழுவர் பன்முறை. (கூ௨)

ஐந்தெழுத் திடையறு தலையுந் தூமனத்
துந்தொளி யெழுதலி னுழுத சால்வழி
வந்தெழு மணிகளும் வரம்பின் மாழையு
மிந்துறழ் வளைகளு மிமைக்கு மெங்கணும். (கூ௩)

கமரொழித் திதம்புரி காலு யேலலத்
தமரகி தத்தினு மபேத நெஞ்செனக்
கமையென வோர்தரக் காட்டு மாண்பினைப்
புமைசெயன் முறையெனப் பரம்பு கைப்பரால். (௯௪)

இளகியைந் தெழுத்தமைந் திலங்கு நெஞ்சினிற்
பளகிலன் பசைவற நிறுவும் பான்மையின்
வளநிறை பற்பல சாலி வாலிய
முளையெழ விதைத்தனர் மூசு மள்ளர்கள். (௯௫)

அன்பினில் வேறலா தவிரு மொண்சிவ
மின்புற வெழுதலி னெழுந்த வெண்முளை
பின்புருத் திரன்முனோர் பிறக்க மேவலின்
முன்பித ழொன்றிரண் டாக மொய்த்தன. (௯௬)

பருவமுற் றன்பெடுத் தமல பாதம்வைத்
தருமையின் வளர்த்தலி னனைய நாற்றினை
வருபுனற் கழனியின் மள்ளர் மாதர்கள்
பெருகிய வாழ்த்தொலி பிறங்க வூன்றுவார். (௯௭)

அருட்புன லிடைவள ரன்பின் றேற்றம்போற்
றெருட்புன லிடைவளர் திகழ்பைங் கூழினை
யிருட்பழ வாதனை பேய்ப்பச சூழ்ந்தன
பொருட்படா திரிதரப் புணரும் பல்களை. (௯௮)

அருண்முறை நவிலுமைந் தெழுத்தென் வாளினு
லிருண்மல வாதனை யிரித்தல் போன்மென
மருண்மது நுகர்தரு மள்ளர் மாதரத்
தெருண்மலர் வயற்களை சிதைத்த லாற்றுவார். (௯௯)

ஈசனு ரருள்வசத் தியைந்திட் டேபழ
வாசனு மலந்தெறு வாரின் மாந்திய
நேசநா றியமது வசத்தி னிற்றெழு
தேசநாண் மலர்க்களை சிதைப்பர் யாங்கணும். (௧௦௦)

பளகொருங் கொழிதலும் பரவு மொண்சிவ
விளையனு பவமுளே விரவி நிற்றல்போல்
வளர்பசுஞ் சாலிகண் மள்ள ரோம்புறக்
கிளரும்வெண் கருவுகங் கிடைத்தெ ழுந்தன. (௧௦௧)

கருமுதிர்ந் தெழுந்தநெற் கதிர்கள் வெண்மைமுன்
மருவியொண் பசுமைபின் செம்மை வாய்த்தெழு
தருமொளிர் சத்துவந் தமசு ராசதத்
தரனரி யயன்முறை யவிருந் தோற்றம்போல். (௧0௨)

தனிநுக ரனுபவந் தாவில் யாவர்க்கு
மினிதுற விரிந்தரு ளியல்பி னுட்கரு
னணியெழீஇ நெற்கதிர் நலக்க முற்றிய
பிணையரிந் தரிக்குவால் பிறங்கு போர்செய்வார். (௧0௩)

அரிதனக் கரியெனு மலஞ் சாய்த்திட்டோர்
கருமுகிற் படைஞர்புக் குழக்குங் காட்சிபோல்
விரவுநெற் போர்கள்பார் வீழ்த்த மள்ளர்சூழ்
நிரைசெறிந் துழக்குவ மேதி நீள்குலம். (௧0௪)

அழுக்கினை யழுக்கினு லகற்றல் போன்மல
வழுக்கினை மாயையா லகற்றல் காட்டுவ
வொழுக்கிய மேதிக ளுழக்கி யோய்ந்தபின்
குழுக்கொளும் பலாலமுற் கோது நீக்குதல். (௧0௫)

தொழில்பல கருவிக ளோடு தோய்ந்திளைத்
தொழிபிளைப் பாறியா ருயிர்க ளுற்றெனக்
கழிபலா லம்முதற் கடித கற்றிய
வழியொளிர் நெற்குவால் வயங்கும் யாங்கணும். (௧0௬)

ஈடிலா ருடனுறு பிணியுந் தம்பெரும்
பீடெனச் சிற்றினம் பிரிந்து நல்லினங்
கூடுநர் போற்பதர் நீத்துக் கோதொரீஇ
நீடுநெற் குவால்கள்பன் னிலையிற் சார்வன. (௧0௭)

ஆறிலொன் றரசர்நன் னீதி யான்மறை
யாறிலொன் றறனிறைந் தனைத்து மோம்புமிவ்
வாறிலொன் றியநன்றி யயர்ந்தி டாமன்மு
னாறிலொன் றரசருக் களப்ப ராங்குளார். (௧0௮)

ஐம்பெரும் பாகநெல் லனைத்துங் கொண்டுசென்
றைம்பெரும் பாகமா யவைமுற் றுய்ப்பராற்
றம்பொருள் பாத்துணத் தகுமெ னூற்பொரு
டம்பொரு ளாகவே தலைக்கொள் வாழ்வினோர். (௧0௯)

கன்னல்கண் மஞ்சள்பல் கதலி யாதிய
துன்னுமே னிலமுதற் றெருகுபஃ றுணிய
ரின்னிலம் விளைவன வெல்லை யில்லன
வன்னமுற் றுறவிரித் தறைதலாவதோ. (கக0)

அனைத்துல குயிர்நிலை யாக மல்கியே
யினத்துயர்ந் தொளிருமிவ் வினிய தண்பணை
யுணற்கருந் திணையெனி லோத லெந்நன
மனக்கொள நிறைபெரு வளனெ லாமரோ. (ககக)

வேறு. நெய்தல்.

உதக வேந்தனென் றெமையுல குரைப்பமுற் றுலகுக்
குதக மீவதிவ் வுததியே யாதலி னுரைச்சா
ருதக மோம்பினப் பெயர்நிலைத் தருமென வருண
னுதக நோக்கிவீற் றிருப்பது நெய்தலி னுதகம். (ககஉ)

பூதி கண்டிகை முதற்சிவ சம்பந்தப் பொருளி
னோதி பூசையாற் றன்பர்போற் பரதரவ் வருண
னூர்தி முட்புனை சிழற்றவி யூன்றியவ் வம்பற்
கோது சீர்விழா வெடுத்துவேண் டுவனபெற் றுவப்பார். (ககங)

ஓரங்கு துன்பத்தி னிறுதியே யின்பெனப் பிரிந்தா
ரிரங்கு ரிக்கிணை யெய்தினா ரோற்றிருந் திரங்கி
னிரங்கி மேற்கொளு மீசனென் றெண்ணிமுண் டகங்க
ளிரங்கு வண்டெழிற் கண்டிகை நீறுபூத் திலங்கும். (ககச)

புன்னை நீழலிற் கெடவாற் சிறுமியர் புனரி
மன்னு சிற்றிலைச் சிதைப்பவள் வருந்தித்தம் மாதா
மன்ன வேலைமேல் வீசலுங் கொடுசெலு மன்ற
தன்ன தொண்பொரு ளுறிற்கொளத் தாழ்க்குமோ சலதி. (ககரு)

எகி யாயபூ தயிர்க்கரு ளிறைவனே வலைஞ
னாகி மீன்கவர்ந் திடினமக் கடாகொலென் றலையேற்
சோகின் மீதுறீஇப் பரதவர் துறையுமீன் சால
* மாகி னீள்பல சாலங்கள் வீசுபு வலிப்பார். (ககசு)

விழியை யொப்பெனப் படுகட லுடன்விரா யாற்றல்
கெழுமி கிற்றிராற் காண்டுமென் றலைஞர்மேற் கிளர்ந்து
முழுத கன்களைக் குவித்தபின் மீனெலா முதங்கூர்ந்
தெழுநு ளைச்சிய ருணக்குவர் மேலுமவ் வினைய. (ககஎ)

---

* மாகு - வலைமணி.

துறைக டோறும்பன் மரக்கலத் தொகையினுட் டுறைதயு
நிறைபொ ருட்குவால் கொணர்ந்துகைத் தோணிக ணிகழ
வறைக டற்கரை யளிப்பமா ணவர்குலக் காழ்ந்த
பொறைக விப்பொரு ளெடுத்தரு ளாரியர் போல. (௧௧௮)

உருவ நிட்களத் திற்கய லன்றென வுணர்த்துங
கிருத காடினி யத்துடனெண்ணிய கிளையாய
மருவு கென்றுநெ லுமணராங் குவரிநீர் வாக்கிப்
பெருக வாற்றுமுப் போகங்கலெப் பாங்கரும் பிறங்கும். (௧௧௯)

என்ன தேத்தரும் பொருளெலா மியலும்பல் கலத்தாற்
றுன்ன கன்கரைக் குவிதலெலா நிலங்களுந் துதைந்து
முன்னி யேற்பநா டொறுங்குறை வறத்தரு முதன்மைத்
தின்னி லத்தியல் பென்னிலா ரிதற்கிணை யிசைப்பார். (௧௨௦)

எம்மை யாளரு ணம்பிபோற் றதிபதத தொனுஞ்சீர்ச
செம்மை மாமணி யுலகெலா மொளியுறத திகழ்ந்து
தம்மி யற்குலத் தவதரித் திட்டமா தவஞ்சரா
நன்மை யாளர்ந நிலததவா பெருமையாா நவில்வார். (௧௨௧)

திணைமயக்கம்.

குன்றி ளநதினைக் கதிர்நுகா குரங்கங்கொற் றவைதன்
மன்ற ளிக்கலை யூர்தியை யினமென மருவுந
துன்று திண்பர லுண்புற வமையினஞ் சொரியா
நின்ற வெண்மணி பரலெனச சென்றுண நிற்கும். (௧௨௨)

வரையி ளஞ்சிறு மறியுகைத் தான்முலை மடுக்கும்
வரையு ழைப்பொலி முலையுணும் வனநிரை மழவு
வரைமி சைந்துசென் றும்பல்கண் டுயில்வன மருதம்
வரைய கின்னிழ லுறங்குமிக் குணவரு மும்பல். (௧௨௩)

அமைவெ டித்தெறி மணிவிரைந் துணங்குமீ னருங
கமைகொ டிக்குலத் துதைப்பவிண் பறந்துறுங் கழைமே
விமிர்பொற் கோங்கிடைச் சியர்க்கொளிர் காதணி யீவ
நிமிர்பொற் கொன்றையம் பணத்தியர்சசனைத்தொழினிகழ்த்தும்.

உழும்ப கட்டினை யோட்டுவ நெல்லியொண் கனிகள்
வழங்கும் பூகதந் துவர்க்கனி மறவருண் மகிழ
வொழுங்கு மீந்திருங் கனிதரும் பரத்திய ருவப்ப
முழங்கு வாரிமீ னெறிவன மறத்தியர் முகப்ப. (௧௨௫)

முல்லை யான்பொழி பால்புகு முளரியந் தடத்து
ளொல்லை வாளைதாய்ச் செருந்திவீ யுகுப்பவவ் வுறுபால்
வல்லை யத்தட நிரப்பிவா ரிதிப்புலான் மாற்ற
வில்லை மாவெனக் காசைமே லலைவளை வீசும். (கஉசு)

தாழை யின்கனி தகர்ப்பவீழ் மாங்கனிச் சாறு
வாழை யின்கனிச் சாறுமுன் னூற்ற வளர்முட்
டாழை தாதுகுத் தாங்குநோக் குநொலாந் தவள
வாழை யாதியென் றேதிய விமரிதம் வழங்கும். (கஉஎ)

வேறு.

எண்ணாரப் பொன்கொடுத்தா ளிசைபழிச்சப் புகும்புலவ னியம்பு வாக்கிற்
றண்ணீருங் காவிரியே தாரவேந்த னுஞ்சோழன் றனே யென்று, மண்ணுவ
துஞ்சோழ மண்டலமே யென்றுமுறை வருமே லொத, விண்ணுடும் பாவு
மிந்த மேனாட்டின் பெருமையெம்மால் விளம்ப லாமோ. (கஉஅ)

திருநாட்டுச் சிறப்பு முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (கஅ௦.)

---

# திருநகரச்சிறப்பு.

வேத மூன்றிடை விளங்கெசுர் வேதமூ வேந்தர்
சோதி நாட்டினுட் சோழநா டிதனிடைத் துலங்குஞ்
சூத கானன மதனிடைக் காண்டமே துணையு
மோது ருத்திரஞ் சிவாலய மைந்தெழுத் துமைகோன். (க)

உலகெ லாநிறைந் தொளிர்முனி வரரெலா மொருங்கே
நலனெ லாமெளி தருள்வதிந் நகரெனுந் நணுகி
நிலவ லாலன வரதசா ருவமுனி நிவாசத்
தலமெனுமமும் பெறத்தகுந் திருவுசாத் தானம். (உ)

அகில லோகத்து மவிர்சிவ தீர்த்தங்க ளனைத்து
மகில மாமுனி வரும்புகுந் தழைப்பவந் தாங்கே
சகல போகமோக் கங்களுந் தந்துவாழ் தலினாற்
சகல தீர்த்தவா சிரயமித் திருவுசாத் தானம். (ங)

சகமெ லாம்வழி பாட்டின்மெ யின்புறீஇத் தழைப்பச்
சகள நிட்கள சதாசிவ ணிமகிரி தனையை
சகன மர்ந்துவாழ் தலனெலாஞ் சார்ந்துவாழ்த் தலினாற்
சகல கேத்திரா தாரமித் திருவுசாத் தானம். (௪)

உருவ நாலரு நாலென வுரைதகு முபய
மருவ நாப்பணின் றென்பது வகைமையும் வயக்கும்
பொருவின் மூர்த்திமுற் ற * மூதிறை தனைத்தொழப் புகலாற்
சருவ மூர்த்திக ணிலயமித் திருவுசாத் தானம். (௫)

கோயி லூரொனும் பெயரிடு குறியெனக் குலவும்
வாய்மை யேயமு தேசனு மெய்ப்பெரு மாண்புந்
தூய்மை கூர்தன தியற்கையும் விளக்கிய துலங்குந்
தாய்மை யாரரு ணிறைதரு திருவுசாத் தானம். (௬)

விண்டு வாதிவா னவரெலா நாடொறு மிடைந்து
தொண்டு ஞற்றுபு குறையொரீஇத் துதைதலிற் றனைநேர்
கண்டு ளார்க்குவான் பதமெலா மெளிதுறல் காட்சி
கொண்டு தேற்றியாங் கிலகுமக் குலவுசாத் தானம். (௭)

அகில லோகமுந் தனையடுத் திறைஞ்சவாங் கறங்க
ணிகில முங்கொடுத் தெங்கணும் விரித்தரு ணிலையாற்
றகுதி சாலிதே தருமகோ சம்மெனச் சான்றோர்
திகழ வோதிய பொலிதருந் திருவுசாத் தானம். (௮)

உலகெ லாமுமெய்ப் பொருள்விழைந் துறினுமவ் வடன்முற்
றிலக நல்கியு மெட்டிணை பெனுங்குறை வெய்தா
நிலைய பல்வளத் தருத்தபண் டாரமாய் நிலவித்
தலைமை சான்றொளிர் தருவது திருவுசாத் தானம். (௯)

நாம நீருல காதிய வுலகெலா நயப்பத்
தோமி லைம்பொறி நுகர்ச்சிமுன் னலனெலாந் துதையத்
தாம மிக்கன வரதமுந் தருதலிற் சகல
காம தாயக நிலையமிக் கவினுசாத் தானம். (௧௦)

மாய ஞதியர் பதத்தழி மாலைய தாகாத்
தூய நித்திய சுத்தவத் துவிதவா னந்த
நேய மாண்சிவ மோக்கமென் றுன்றவர் நிகழ்த்துஞ்
சேய மூலபண் டாரமித் திருவுசாத் தானம். (௧௧)

* உம்மை தொக்கது.

வேறு.

வார்கொண் டருமை காட்டியவா வளர்க்குஞ் சுபயோ தரக்குடைந்து
வார்கொண் டிடாமுப் புடையிளநீர் மகைப் பொறையாற் றிலாங்கலிகள்
வார்கொண் டோடி நெடுவானின் மலிசா ணச்ச முடனடுங்க
வார்கொண் டளிக்கும் பயோதரநீல் வார்கொண் டெனச்சூழ்ந் துடனுதவும்

மண்ணின் மடவார் முலைக்கொல்கா மடியினைமைத் தாழ்த்துநரெவரோ
வெண்ணின் மடவார் தமுட்டேவ வியல்பிற் பெருமை யெழின்மாதர்
விண்ணின் மடவார் முலையொத்தே யவிழுப்பமுடையே மெனக்களித்தா
குண்ணின் மடவா ரிளநீர்த்தெங் குவனை முழுதுஞ் செறிந்தாடும். [௧௩

தேவ வழிபா டாதியடல் செயல்கட் கெனையின் றமையாமை
மேவு மெமக்கோர் சிறிதொவ்வா விண்ணுற் பகங்க ளெமக்குமே
லாவ தறிது மெனமேற்சென் றதனைத் தாழ்த்தி மடல்சிறிதாங்
கோவு பாளை சுரையினகு முவனை மேலு மிலாங்கலிகள். (௧௪)

மும்மைப் பயனுந் தருகிமிம் மூசார் செறியு மிலாங்கலிக
ளம்மைப் பயன்வீ டறத்தளிக்கு மதனாற் றெருட்டு நூலளவை
யும்மைப் பயனி னளப்பிலகாயத் தோம்பு வாக்குப் பெரும்பொருட்ட
திம்மைப் பயன்கூட் டுதெருட்டு மென்றுங் காட்சி யளவையவோ.

இனத்தா லேந்தெனு மொகுமள வெயதூம் வான்கற் பகமென்னுங்
கனத்தா லுரிஞ்சி யிதமதுரக் கவினீர்ச் சூல்பெற் றிடமென்னு
மனத்தா லெசுற் றறல்பெயச்செய வளஞ்சாரல் புவிக்கற் பகநிலையின்
வனத்தா ரளவோ தமெனுயா யலகிப் பொலியு மிலாங்கலிகள். (௧௬)

ஆற்று நீரை யும்முவராக் காழி நீருண் டதைமாற்றிப்
போற்று நீராக் கெம்மின்மிகும் புனிதச் சுவைத்தாக கிலாங்கலியென்
றேற்று நீர் * மை யப்பொழில்சூழ்ந் திலங்கு மெவர்நீ யினமுவர்த்தாற்
றேற்று நீர்மை நல்வினைத்தைச் சேர்ந்து வயங்குந் திறம்புரியார். (௧௭)

அறன்றிக் களிப்போ னெமக்குவனை யரச னவனு ளுதவிபெரு
நிறைபொற் றருக்க ளவற்கோவா நீழல் பரப்ப வாளாநாந்
தறையுற் றெழுனன் றல்வென்றுத் தாழை நிரைகண் மேலோடிப்
பொறையுற் றலர்பூந் தருமேலும் பொலியப் பரப்பு நறுநீழல். (௧௮)

ஆய துணர்ந்தாங் கலர்பூக மரய்பை கரும்பு முதலாவ
பாய விழியா யிரத்தவன்வான் பதியம் பகங்கட் கிதஞ்செய்வ
வாய பசிய தண்ணியவே மற்றவ் வுடையேம் யாமென்ன
மேயங் கிழற்கீழ் வெளியெல்லா மிடைந்து நிரைந்தாங் கணிசெய்வ. (௧௯)

* மை-மேகம்.

மருதத் தலைவி தனைப்புரக்கும் வானிற் றலைவற் குண்கலத்தி
னருமைத் தவள நறுஞ்சாலி யன்னம் படைத்தாங் ககல்வானில்
விரவிப் பொலிபைங் கதலியின விரிமெல் லிளநெட் டிலையினிடை
யுருமுற்றியவெண் முழுத்திங்க ளொளிகான் றமர்ந்து திகழ்தருமால்.

அனைய மதுமேற் செந்தாதிட் டலராம பிரந்தே னுகுத்தமுதிர்
கனியும் வருக்கைச சுளைகதலிக் கனியோ டுகுப்பத் திகழ்காட்சி
பினையத் தலைவி பருப்பொடுநெய யேனுஞ் சுவைய முக்கனிக
ளினிதத் தலைவற் கன்னமுட னிலங்கப் படைத்தா லெனப்பொலியும்.

குளிர்பூ கதமேற் றிரையன நுங் கொடிகள் படாந்து துவன்றியிளந்
தளிர்க ளடுக்கி யெனத்துதையத் தாவில பழுக்காயக் குலையடுப்ப
மிளிர்பூ முகையோ மெல்லிலையின மீது பொருந்து நிலைநோக்கி
னொளிர்தாம் பூலமவெண் சுண்ணத் துடனுங்குதவிற் றெனவொளிரும்.

வேறு.

சுரர்முழு தரண்புக நீண்டுத துதைதலால் வெறிதா மன்னோர்
புரமுழு தவற்றை யெல்லாம புரப்பதெங் கடனன் றேவென்
றுரமுழு தருளிக் கோயி லூர்முழு துடுத்து மேற்சென்
மாமுழு தீண்டு சோலை வானமுழு தரணிற் சூழும். (௨௩)

சந்திர காந்த மாடந் தருசுவை யமுத ரூப
மந்திர நாத னீற்று வயங்கொளி மேனி மானு
மிந்திர நீல மாட மிடையினமா ணிக்க மாடந்
தந்திர மயமா தேவி சாமிமா மேனி மானும். (௨௪)

பொன்மணி மாடம் வானிற் பொலியவம் புதங்கீழ்ச் சாத
லன்மணி நிறத்தன் றன்மாட் டயனெழு தோற்றங் காட்டும்
பின்மணி முகின்மே லாகப் பிறங்குமம் மாட மன்ன
மன்மணி மலரோன் றனபான் மாலெழு தோற்றங் காட்டும். (௨௫)

நாகமீப் பொலிவி லோத னங்களாஞ் செங்கை நீட்டி
மாகமீப் பொலிவா னோரை வருகென வழைப்ப வன்னோர்
தாகமீப் பொலிய வேள்விச் சாலைபுக் கீண்டி நாளும்
யாகமீப் பொலியு ணாக்கொண் டின்பமீப் பொலிவர் யாண்டும். (௨௬)

அரிவைய ரல்கு னாக மரைக்குடப் பதும்பொன் னாகந்
தெரிவையர் மருங்கு னாகந் திதலைமென் முலையு நாகம்
வரிவிழி களுமை நாக மறைந்துறை கடலி னாகம்
புரிகுழன் மிசைப்புன் னாகம் போதுமென் னடைபெண் ணாகம். (௨௭)

கதிர்கிரி மைந்தர் வாகங் கரிபரி முதல வாகங்
கதிர்மிகு மணிய வாகங் காமனுஞ் சமழ்ப்ப வாக
மதில்கண்மே * லெழுவ வேக மறைமுழு துணர்வி வேக
மதிமனத் தொளிரு மேக மாளிகை யிவரு மேகம். (௨௮)

மாடமும் வாவி தாமும் வயங்கர விந்த நேரு
மாடவிர் முகங்கா ரோதி வயங்கர விந்த நேரு
மாடவர் கற்பாய் மார்ப மணிநறுஞ் சாந்த நேரு
மாடவர் கற்பாய் † மார்ப மணிநறுஞ் சாந்த நேரும். (௨௯)

மாதர்வா னரம்பை யென்ப வண்கவா னரம்பை யென்ப
மாதர்கூ ரியலுந் தோகை மனங்களி னியலுந் தோகை
மாதர்செய் விழியுந் தேனே வளங்கனி மொழியுந் தேனே
மாதரம் பொருவ கொங்கை மலர்க்குழ றருவ கொங்கை. (௩௦)

கிளைதழூஉங் குடியெ லாங்கைக் கிளைவழூஉம் யாண்டு மாதர்க்
கிளைதழூஉங் காம்பு யங்கள் கிளைதழூஉம் ‡ வராம்பு யங்கள்
வளைதழூஉ மடவார் கண்டம் வளைதழூஉஞ் செவிக ளொண்கான்
முளைதழூஉ மனையெ லாஞ்சொன் முளையெழூஉங் கழனி யெல்லாம்.

கள்ளளிப் பனவாங் கென்றுங் கடிமல ரினங்க ளேயங்
கள்ளக டுறப்பெ ருக்கிக் களிமயக் குறுவ வண்டே
§ கள்ளகம் பயில்வ மின்னார் கண்களே யவைக ளாற்றுங்
கள்ளகப் படுவ வன்னோர் காளையர் மனங்க ளேயாம். (௩௨)

நிறைமலர்ப் பொழில்க ளேகண் ணீர்பொழி சிலையவென்றுஞ்
சிறையளி யியங்க ளாதி திறங்களே யிரங்கு நீர
நறைமலர்த் தருக்கண் மாட நிரைகளே கொடிய நம்மனோரும்
பொறையின்வாய்த் தலர்க டூற்றிப் பொலிவபூ முதல்க ளேயாம். (௩௩)

வெறியன மலர்க ளேயாம் விளியிய லுருபி னொன்றே
யறிவில சடங்க ளேயா மமர்த்தலா டவர்க டாவே
முறிதரல் விருக்க மாதி மூடஞ்சோ திடநூற் கூற்றே
பிறிவதீ வினைக்கு மாமே பிணிமுக மஞ்ஞை யேயாம். (௩௪)

* எழுவவே கம் எனப்பிரிக்க.
† மார்பம்—ஆகுபெயர். ஆள் தவர் கற்பு ஆய் மார்பம் எனப்பிரிக்குக.
‡ வராம்புயம்—வடமொழிச் சந்தி போல்வதொன்று. முருகேசனென்பதுபோல.
§ கள்—முதனிலைத்தொழிற்பெயர்.

செல்வமிக் குடையார் மாடச் சிறப்பெலா நோக்கி யென்னு
மொல்வது புரிது மென்பா ருளூற்றுபொன் மணிமா டங்கள்
செல்வமே லுலகே ழப்பாற் சென்றவோ நின்ற வோமற்
றொல்லதெங் கெம்மா லம்மா வுரைப்பதொண் பொருட்பெ ருக்கம்

இன்னன வலகி லாத வியல்வளந் துவன்று மிந்த
நன்னகர்ப் பொதுமை யாய நலன்முழு திசைப்பர் யாரே
மன்னகத் திடைப்பு றத்த வலைச்சிறைப் பாம்வ ளத்துட்
கொன்னுமென் னறிவோ வில்லிக் குட * மெனிற் கூற லென்னும்.

வேறு. புறநகர்.

விண்ணி யங்கினுஞ் சிறையினு லரிந்தனன் வேந்த
னெண்ணி யங்கவை † நோற்றெனுங் கால்கள்பெற் றினிநாம்
மண்ணி யங்குது மெனக்குல மலையெலா மொருங்கே
யண்ணி யங்குறல் போன்றன வவிர்மணி யிபங்கள். (௩௭)

உலக மெட்டினீற் றும்பல்க ளும்பர்செ லும்பன்
மலைமு னவன தாங்குமா நிலத்தைமென் மலர்த்தார்
மலைய வோர்புயத் தாற்றுமன் னவரைமேல் வகித்தாங்
குலவி யெப்பகை யுந்தெறு மும்பர்வா ‡ ழும்பர். (௩௮)

கண்ணி னேச்சுவ திகந்தமே முடிவிடங் காணு
விண்ணி னேக்கினு மன்னதே யென்னிலார் விரிப்பா
ரெண்ணி னேக்கியுங் நீட்சியு முயர்ச்சியு மென்ப
மண்ணி னேக்குதா ரெனத்தகு மிபக்கள மாண்பு. (௩௯)

முத்தி றத்திப நிலைக்கள மிசைக்கொண்மின் முகிலோ
டத்த வெற்புத யாசலத் திருசுட ரவிர்கான்
மத்தி நிற்றல்சங் கர்ழிகை மருமமொண் டிருவை
வைத்த மால்கரிக் கருளமுன் வந்தமை வயக்கும். (௪0)

உவமை யாகுபே ரென்பசிந் துரநுத லொழுகுற்
றவிர்ம ருப்புவிற் றிலகமின் னதிர்முழக் கசனி
திவள்க டாமழை யாதிய வியலுறு திறத்தா
லெவன தாகுமண் ணியங்குகா ரெனுந்திற லிபங்கள். (௪௧)

* எனில் என்பது தேற்றப்பொருட்டு: ஆலவாய் சிவனுலகாணு லென்ற திற்போல.
† அவை அரிந்தனனென்றியையும்.
‡ உம்பரீறு போலி.

இரும ருப்பிரு பால்வளைந் திடைக்கர மூலந்
தெரியி பங்கறை மதிமிசைத் திகழ்முகி லெனப்பார்
மருவு காரினைப் பிடியெனப் பிடித்தனர் வாய்விட்
டொருவி லுட்பயத் தோடுமுட் பயமெலா முகுப்ப. (௬௨)

வளைந்தி யைந்தவெண் மருப்பினைக் கீழுற மண்மேற்
றுளைந்த சுண்டநேர் கண்டவர் சேய்மையிற் றூய்மை
யளைந்த சீருப ராகநா ளின்றென்ப ரயிர்ப்பார்
விளைந்த வங்கமைந் துணர்த்தில தென்னென வியப்பார். (௬௩)

சுண்ட மேனிமிர் தரநிமிர் மதமழை சொரியுங்
கொண்டல் பற்பல வம்மத வெள்ளத்துக் குழுமுற்
றெண்ட ராதுநீண் டகன்றுள விபநிலைக் களங்கண்
மண்டு பற்பல சிதைக்கல வாரிதி மானும். (௬௪)

வேறு.

அரங்கமல் கரிவலி யடர்க்கு மாற்றல
*குரங்கம லுளைசிறு மிதப்பிற் கொண்டன
தரங்கமன் னிரையெனச் சாற்று சால்பின
துரங்கமந் துரைநிரை துதைவ பற்பல. (௬௫)

குலமகண் முகமெனக் கவிழ்ந்த கொள்கைய
நிலவுற வகன்றெழி னிமிர்ந்த நெற்றிய
வலவனைப் படைப்பவ னமைத்த வச்செனா
விலகுறு நாசிய வெண்ணில் கந்துகம். (௬௬)

பளிங்கினிற் கருமணி பதித்து வைத்தென
விளங்கிரு விழிகரு நெய்தல் வீழ்வன
வளங்கனி யரம்பைய மலரி னீண்மட
லளங்கனி செவியின வளப்பில் கோடகம். (௬௭)

மாந்தளிர் நாவின மார்புங் கண்டமும்
பாந்தளொண் படமெனப் பகரும் பண்பின
போந்தெதிர் பகையுரங் குருதி போகப்பாய்ந்
தேந்தெழிற் குரத்தின வெண்ணில் பாடலம். (௬௮)

வீதிமண் டலமுதல் விரியு மீரொன்பா
னேதரு சாரிமுற் றியைந்த வைங்கதி
யாதிய கதிகள்பற் பலவு மார்ந்தன
கோதறு குணத்தன வெண்ணில் குந்தமே. (௬௯)

* குரங்கு முதனிலைத் தொழிற் பெயர்.

எட்டிடங் வெளுத்துமுற் றிலக்க ணம்பெறு
மட்டமங் கலமிட மைந்தில் வெண்மைவாய்ந்
திட்டுள பஞ்சகல் யாண மென்பன
கட்டழ கமைந்தன கந்து கம்பல. (௫0)

வெரிந்மிர் பல்லண மிதவை யும்விழி
யிருகடை மறையத ளெனுஞ்சிற் றுமையும்
புரையில்வால் வரால்களும் புரோதந் தெனுமேப்
பரிநரை தரங்கமென் பான்மை தேற்றுமால். (௫௧)

தெய்வத மணிமுத லாகச் செப்பிரண்
டைவிதச் சுழிகளு மவ்வவ் வெல்லையுற்
றெவ்வகை நலங்களு மினித ளிப்பன
வவ்வகைப் பரித்திற னறைவ தென்னினி. (௫௨)

ஓருருட் டேரினை யோட்டி யும்பரி
னேரொனும் பிறர்சொலி னிறுத்தி மேருவை
யோரியற் புலமையோ ரொப்பின் றென்னுமா
சீரிய தேரினஞ் சிவணு மெண்ணில. (௫௩)

மிசையுலா வமரரும் வேறு ளார்களு
நசையுலாந் தம்பதி ரதங்க ளேயெனத்
திசையெலாம் பரந்துமேற் கடந்து சேணெலா
மிசையெலாம் விரிந்ததே ரெல்லை யில்லன. (௫௪)

ஒத்தன மெனக்களித் துலாய வெற்பெலாங்
கொத்துறு சிறையரீஇ வீழ்த்த கோனகர்க்
கொத்தெழுந் தணிசெய்வ நன்றி யோர்ந்தபோற்
கொத்[illegible]று மணிநிரை குலாய தேரெலாம். (௫௫)

ஓய்வற மறுகெலா முருளிற் செம்பொனே
தோய்வுறப் புரிந்திம்பர்ச் சுவர்க்க மாக்குமான்
மீயெழு தூளிபொன் னுலக மேவுவித்
தாயதை வையமே யாக்கும் வையமே. (௫௬)

இங்ஙக ரிரதநோக் கினர்மற் றேனைய
வென்னவு மருவருத் திதயத் தோர்பொரு
ளென்னமுன் வையமென் றிசைப்ப வப்பெய
ரன்னவைக் காகிப்பின் பொதுமை யாய்த்தென்ப. (௫௭)

விதிரத மரிரத மாதி வெட்குறு
மதிரத மாரத வகைக ளேயவண்
வதிரதஞ் சமரத மருத்த மன்பெயர்
பொதிரத மாங்கணெப் புறத்து மின்றரோ. (௫௮)

வளையுறு நேமியங் கையின் வாய்ப்பத்த
னுளையொரு நிறத்தின்மா வுவந்து மேற்கொளக்
கிளர்தர வானமீக் கெழுவு தேரின
மளவிலர் நெடியவ ரென்ன வாங்குறும். (௫௯)

பொன்னினு மணியினும் புனைந்த தேரின
மின்னினுங் கதிரினு மமைத்த மெய்யின
வென்னினு மியைவதன் றென்ம னாரெனின்
முன்னினு மொழியினு முற்று நீரவோ. (௬0)

வீரமே யுருவினர் மேற்கொள் போர்க்கவி
னாரமே புயத்தின ரசைவற் றென்றும்வாழ்
தீரமே யுளத்தர்தெவ் வினத்தை வீட்டுகெம்
பீரமே யுரையினர் பெருக்க மேயவே. (௬௧)

எத்திசை வீரரே யெனினும் போர்க்குறி
னத்திசை தமதிசை யாக்கி யன்னவ
ரித்திசை யெமதிசை யெனத்தெ னாதுல
கத்திசை வுறுத்திசை காண்ப ராங்குளார். (௬௨)

தைத்திட விடுகணை தவறிற் றம்முடி
தத்திமண் வீழ்ந்தெனத் தரிப்பின் மானத்த
ருய்த்திடு கணைகளே முலக மூடுரு
வத்தநெஞ் சுன்னுமுன் கடக்கு மற்றவை. (௬௩)

விடுத்திடு மனுவுமக் கணைகண் மீண்டுகை
யடுத்திடு மனுவுமுன் னாம்பல் பேதமுந்
தொடுத்திடு மொவ்வொரு தொடைப்பல் கோடிக
ளடுத்திடு விகற்பமு மெளிதி னோர்ந்துளார். (௬௪)

முன்னருய்ப் பனவிரு பான்மு டுக்குவ
பின்னருய்ப் பனமனூ டுருவும் பெற்றிவா
னன்னருய்ப் பனமுத னன்கு ணர்ந்துளா
ரென்னருய்ப் பனவுநே ரின்றென் சீர்த்தியார். (௬௫)

வாளமர் வில்லமர் மருவு மல்லமர்
தோளமர் வலியினிற் றொடங்கும் பற்பல
கோளமர் வகையெலாங் குறிக்கு மாணியென்
றாளமர் வீரர்முற் றடுக்கு மாற்றலார். (௬௬)

இயற்கையே யிமைத்திடா ருயர்சசி யென்னவா
முயற்கருஞ் சமரிலவ் வும்பரும்புகழ்
செயற்கையி னிமைத்திடாத் தீர மேயுரிந்
தயற்கரி தாயதென் றதைவி ளக்குவார். (௬௭)

தெவ்வுரத் துருவுகோல் செலுத்தல் போலநட்
பொவ்வுரச் சந்தனத் தாங்கு ணர்த்துசொல்
கைவிலிற் கோல்விடுத் தெழுதிக் காட்டிமீண்
டவ்வுரை கொடுவர விஞ்சை யாற்றுவார். (௬௮)

மறுவிழுப் புண்படா வைக ருமெலாம்
வெறுவிய வென்னவே துணியு மேன்மையாற்
றெறுபகை யின்மையிற் றம்முட் டெவ்வினின்
றுறுசமர் விகற்பமுற் றுவப்பி னுற்றுவார். (௬௯)

வடவையா ரழலுமா மறலி யாற்றலுங்
கடல்வயி றழலமுன் கதித்த நஞ்சமு
முடனிரை யிடியுமோ ருருக்கொண் டென்னவே
மிடலுறப் பொலிவராருங் கோரொர் வீரரும். (௭௰)

மழுப்படை யுடம்பிடி நேமி வச்சிரங்
கழுப்படை குந்தம்வில் வாளி கப்பண
மெழுப்படை தோமர மேதி யாதிய
விழுப்படை நிறைபல சாலை வீறுவ. (௭௧)

விற்றொழி லிரதமா வேழ மூர்தொழின்
மற்றொழில் வாட்டொழி லாதி வான்றொழி
னிற்றலுங் கற்குநர்க் கியைந்த நீள்வெளி
நற்றலம் பற்பல நயப்ப மல்குமால். (௭௨)

கசைகுசை கல்லணை கச்ச மாதிபு
ரசையில கடகிக ளங்க ளங்குச
நசைதரு கிம்புரி முதன விற்றியாங்
கிசைமிகு கைவலா ரிடங்கள் பற்பல. (௭௩)

அச்சுருள் பார்நுகங் கால்க ளாங்குய
ருச்சிமேற் கோப்பொடு மொளிர்வி தானங்கள்
குச்சமேற் போர்வைபல் கொடிக ளாதிசெய்
தச்சர்முற் றெழில்வலார் தகையி டம்பல. (எச)

மெய்ச்செறி தருபல விதகுப் பாயம்வில்
கைச்செறி யாதிய கணைக ளாதிய
தைச்செறி படைக்கிடு தடமு முற்பர
விச்செறி தரப்புரி வியலி டம்பல. (எரு)

இன்னன பற்பல வெல்லை யில்லன
வென்னிலிப் புறநக ரிசைக்கற் பாலதோ
பன்னரு மிடைநகர்ப் பரப்பின் பல்வளந்
தன்னிலுஞ் சிறிதொரா மரபிற் சாற்றுதும். (எசு)

வேறு. இடை நகர்.

பன்மணிச் செய்குன்றம் பாசிள மரத்தண்கா
நன்மணித் திரைவாவி நறுவிரை மலரோடை
வின்மணித் திகழ்மேடை வியன்மணி நீண்மாட
மென்மணிக் கரங்கூம்ப வெல்லையில் லனமல்கும். (எஎ)

பளிங்கினிற் புரிகுன்றம் பைஞ்சிறை மயிலும்பர்
விளங்கிய வமர்தோற்றம் விரிநில முழுமதியங்
களங்கற வருள்கென்னுக் கண்ணுத றனையுன்னி
யுளங்கனிவுறநோற்றுங்கிடுக்குற்றென வொளிர்தருமால். (எஅ)

அன்னதன் புடைவாவி யலையெறி தரளநிரை
மன்னுதம் மிறைபாங்கர் மருவுடு நிரைமானுந்
துன்னுவெண் மணற்குன்றிற் றுதைமல ரிதழிவிடை
யின்னவற் கருளவமு தேசனுற் றெனத்தோன்றும். (எகூ)

மேனிலை யமர்மின்னார் விரிகுழல் புலர்த்துமகிற்
றூநறும் புகையவர்தூஞ் சுவணவண் பொடியோடும்
வானெழு தருதோற்றம் வார்குழற் குளநாணி
மானிமிர் மினலோடு வல்விரைந் தோடுதல்போன்ம். (அ0)

மடவிய ராடவர்தா மாறுற வெதிர்வீசுஞ்
சுடர்கெழு பலவண்ணச் சுண்ணமங் கவரடிக்கீழ்ப்
புடவியின் வளைந்துறலப் புருவவிற் குடைவானத்
தடநெடுஞ் சிலையன்னார் தாள்பணிந் துறல்போலும். (அக)

நாற்புற மலர்ந்தொளிர்செந் நளினங்க ளிடையடையின்
மேற்படர் வளையொன்று மிளிர்வதம் மடநல்லா
ரேற்புறு முகத்தெழுஞ்செய் தியமதி கனளுப்பட்
பாற்படு கமடம்மேற் பயிறவத் தியல்காட்டும். (அ௨)

மீயுயர் மாடமிசை மெல்லியர் மிகவூடி
நாயகர் பணிதோறு நளினங்க ணணிசிவந்தார்
காயமுன் வருபணிக்கோள் காண்டலுங் கடிதோடி
யாயவர் புயத்திறுக வணைத்தகை நெகிழார்பின். (அ௩)

பவனவா ளரியைவெரீஇப் படர்பிடி யனையார்தம்
மெவனவா ளரிமார்பத் திணைமருப் பால்வடுப்பப்
புவனமுற் றுருங்கீன்ற புனிதநா யகிகாஞ்சித்
தவனமார் பெமக்கருள்கே சரிநனி வாழ்கென்பார். (அ௪)

சிறிதுநம் முலையொவ்வாச் சிறியநின் றலையெடுப்பீண்
டறிதுமென் றடிப்பவெழுந் தம்முலை மிசைமோத
மறுவலு மடித்தடித்தே மடந்தையர் பந்தாட
றெறுசம ரிளையாம விருவர்செய் திறம்போலும். (அ௫)

கைம்மண மலரொன்றுக் கடுகுபன் னிறவண்ட
ரம்மல ரெறியவுமே லலமரு செயனும்பா
லெம்மவர் செயல்போன்மென் றிளையவர் சொலமடவார்
தம்முக நகையாடத் தாங்கழங் காடுவரால். (அ௬)

எம்மன ஞூசனும தெழில்வளர் கயிறூர்த்திட்
டம்மவொர் கணநீங்கா தாடல்கண் கூடாக
வெம்மவர் தெரிதற்கோ விதுசெய லெனக்கொண்கர்
தம்முடி நனியாட வாடுவர் தடங்கண்ணார். (அ௭)

இளமரத் தண்காவுக் கீர்ம்புன றரும்
விளைபுனல் பாய்ச்சிலமிவ் வீரமென் னெனவியப்ப
வளமதிச் சிலையால வாலங்கண் மதியெதிர்கால்
பளகறு புனல்பெருகிப் பாய்வன நாடோறும். (அ௮)

இனவளிக் குணுநல்கா விவறன்மை நனிநோக்கிச்
சினமிக நம்பொழிலைச் செறவிவண் வருகின்ற
தெனமக பதிதானு ரெழில்வியை யுய்த்திடவக்
கனமிசை தடுத்தாங்குக் கவிவன பொழிலெங்கும். (அ௯)

மலர்செறி வாவியினின் வாவிவிண் ணெழுவாளை
பலமுறை மோதமிசைப் படிந்தவம் புதங்கள்வெரீஇ
விலகலு மப்பொழிலவ் வியனலக் கெதிர்செய்தாங்
கலர்மது கனியாதி யட்டுவ பட்டமெலாம். (௧௦)

தம்முரு நிறங்கவருந் தபனியந் தனைவெகுண்டாங்
கிம்மெனத் தகர்ப்பார்போ னிடித்திடு பொற்சுண்ணத்
தம்மகி பொன்னுலகா ளவர்குழற் புகைசூழ்வான்
விம்மித முறவிருள்சூழ் வியலிட மெனத்தோன்றும். (௧௧)

வேறு

ஒண்டொடி மகளிர் மைந்த ரோடுநீ ராடு காலை
மண்டுபல் செல்வ ரால்க மடங்குளிர் தடங்கம் பாதி
கண்டிரிந் தொளிப்ப வம்மா கதித்தெழு பகைநே ராற்றல்
விண்டிடு மெளியர் செய்யும் விதமிதன் மேல்வே றென்னே (௧௨)

பங்கயம் வலயம் *வீசி பாசிபைங் குவளை யாம்பல்
செங்கிடை வளைய னேகஞ் செறிதல்கண் டிளையா ரொன்னே
யெங்களிற் சிலரீண் டுற்றே மெண்ணிலர் செறிகின் றாரொன்
சங்கைகொண் மனத்தர் தத்தந் தலைவரோ டுடு கிற்பார். (௧௩)

அங்கிளை வரவேற் குங்கா லறிஞர்செய் செயலே போலப்
பங்கய முகம லர்ந்து பணிலவின் முறுவல் காட்டித்
தங்கடை மரக தத்தா சனமளித் துடற்பொ டிப்பிற்
பொங்குபுற் புதஞ்செ றிந்து பொலிவன குடைத டங்கள். (௧௪)

உயிரனார் கொங்கை நேரிங் குறுதிர்கொ லென்ன மைந்த
ரயன்மினார் கொங்கை யம்பு யத்தரும் பென்று பற்றிக்
கயினுரு மையின்மே லீர்ப்பக் கனன்றிரு வோருஞ் சீறச்
செயலறக் கவன்று நாணித் திருத்துவ ரிருவர் தம்மை. (௧௫)

நனைந்தநுண் டுகிலிற் றோன்ற வுறுப்பெலா நாணி மீண்டெட்
கனைந்தெழு திரைதூ சென்று நனைந்ததைக் களைந்திட் டந்தோ
வனைந்தது மலைகொண் டோட மடவியர் வாட மைந்தர்
புனைந்ததொன் றுடுத்தின் பாரப் புயந்தழீஇக் கரையிற் செல்வார்.

*வீசி—திரை.

தளரிடை வளர்மென் கொங்கைத் தையலார் தங்கட் கெல்லாம்
பளகறு தெய்வந் தத்தம் பதிகளே யென்ப தோர்ந்தே
யுளமுறப் பூசித் தாங்கவ் வுரியர்மேன் மடவார் தங்கை
யளகமொண் டிறைத்துப் பல்பூப் பறித்தெறிந் தாடு வார்கள். ()

வாவியின் மைந்த ரோடு மாதர்தோய்ந் ததன்கை மாறாத்
தூவிளை கமழ்சந் தரிதி தொக்கன ரளித்து மீண்டு
மேவிய வுடைபூண் வேறு வேறணிந் தலர்கொய் வான்பூங்
காவினி லுறுவர் மாரன் கவின்படை யினஞ்சேர்ந் தென்ன (௯௮)

புரிசன மிடைமி ஞர்தம் பூம்பட மொதுங்கத் தோன்றும்
கரிசனக் கொங்கை காணுங் காளையர் பாவை யாகத்
தெரிசனப் பெரும்பி ணிப்புட் செல்குவா ரொன்று லன்னோர்
பரிசன முற்றுஞ் செய்யும் பரிசனோ வம்ம வம்ம. (௯௯)

கொம்பரொன் பெயரொப் பாவிக் கொம்பர்யாந் தீண்டற் பாற்றன்
றெம்புயத் தமர்ந்து கொய்மி னென்றுகொண் டந்த லார்கா
லம்புயங் கண்டன் னோவெம் மகலவெற் புதைத்து தைத்தே
செம்பத மாய்த்தென் றநகை தீண்டியுட் குழைப்பர் மைந்தர்.

மைந்தரா லுட்கு ழைந்த மங்கையர் செங்கை நீட்டி
யந்தினீள் வளார்கு ழைத்தாங் கலர்பலர் சிலகொய் போது
சிந்துபோ துடனக் கொம்பர் தெவ்வலே்ம் விடுமி னென்று
தந்திடு பாதகாணிக் கையெனத் தயங்கு மெங்கும். (௧0௧)

தளவநம் மூர னேரத் தருங்கொ லென் றெதிர்ந கைப்ப
வளவறத் தழைத்த ரும்பி யலர்ந்தெதிர் நகைததல் கண்டத்
தளவெழீஇப் படர சோகந் தனைவெகுண் டுதைப்ப வன்ன
தளவில மதன்கோ லத்த வாயிழை யார்மேற் றூவும். (௧0௨)

மலர்செறி குராநேர் நோக்கு மகளிர்தம் மினமென் றுள்ள
மலர்தர வணைப்ப வன்ன தலகிலா மகளிர் பூத்து
நலமிகு மடவா ருள்ள நயப்புற வணைக்குங் கூட்டத்
தலகில்சந் ததிவி ருத்தி யாமெனல் கண்கூ டாக்கும். (௧0௩)

நாசியை நேர்த ருக்கு நாமினிக் காண்டு மென்னு
மூசினர் கொய்யச் செல்லு மொட்யிழை யவர்க ணீழன்
மீனிவ ணுறலு மிக்கு வீபல மிடையப் பூத்துக்
காய்சினந் தணியச் சண்ப கம்மல ரடியிற் றூவும். (௧0௪)

புவிதரு பிரம னூரிற் பொலிபுற நகரின் மேலு
மவிர்தரு முகுந்த னூரே யாமெனு மிடைந கர்ச்சீர்
நவிலுதற் கெளிதோ விந்த நகரொரு விதங்க டந்தாஞ்
சிவநக ரதுவே யாமுண் ணகரினிச் செப்பு கின்றாம். (௧௦௬)

அகநகர். வேறு.

அண்டமெலாம் படைத்திடற்காங் கயனேமுனம் படைத்தருளு மமுத நாத
னண்டமதி லதுசூழ்பே ராழியைநீ யிவ்வளவிற் றாக நாளுங்
கண்டனைசெய் கென்றமைத்துக் காட்டிவைத்த மாதிரிகைக் கருவியென்றே
கண்டவர்சொல் வாரொளினிக் கவினகர்மா மதில்கழ்நாங் கழறற் பாற்றே.()

உயர்வகலத் திண்மையெவ் ருக்குமுறற் கருமைமுத லுடைய தாமிச்
செயலரிய தனிமதிளுற் றிசைவாயி றொறுங்களிறு திண்டே ராதி
யியலுதல்போன் மேனிலவா யில்களின்வெண் கரிபரிவா னிரவிதேர்முன்
வியன்மறுகிற்செலும்னைய மிளிர்மணிக்கோ புரச்சீர்த்தி விளம்பற் பாற்றே.

வகைவகையா விரிந்துவளர் வளமெனுசித் தியவாயு வரனோர் நம்பி
யகனிலவிந் நகர்நங்கை யாம்வதுவை மணம்புணர்ந்த வாதி நாளின்
முகிலெனுநீல் விதானமிசை முதுவான மணப்பந்தர் முழுதுந் தாங்குந்
தகையபல கால்களெனத் தகைதுசங்க ளம்மதிலிற் றயங்கா நிற்கும்.(௧௦௮)

எவராலு மெஞ்ஞான்று மெவ்வழியு மேற்றுறலின் றெனினு மிந்தச்
சிவராச தானியெனுந் திருநகர மயற்கிறைமா திரிகை யாச்செய்
புவிராச நகராகப் பொலிதலினம் மதின்மிசைப்பல் பொறிக்கு ழாங்க
டவிராது நிறைதருமித் தகைமுழுதும் பகர்வரிதெத் தாத்தி னோர்க்கும். ()

முடியிடைவெண் டிங்களும்வான் முதுநதியுங் கோளரவு முயங்கா நிற்ப
வடியினைகழ்ப் புனலுமொரா தமைதலின்மா துமைகோனம் மானைக்காவெண்
பொடியணிதா னுவைப்போலும் பொன்மதிலின் றன்மையெவர் புகல்வ
ரம்மா, வடிவுசெயல் சொலினிளைஞர் * வபுபொனுயிர் கவர்மடவார் வளமை
சொல்வாம். (௧௧௦)

பரத்தையர் வீதி. வேறு

ஐயவென் சோறும் யாது மையமின் றுள்ளந் தேர்ந்த
மெய்யரு மோர்கா ளைக்கின் மெய்மறந் தவச மாகிச்
செய்யகால் விழவுள் ளாற்றுங் கலவியின் றிறங்க டட்டும்
பொய்யசித் திரம்பு றத்தே பொய்சொலார் போற்செ றிப்பார்.

* வபு—சரீரம்.

புருடராங் கரும்பின் மல்கும் பொருளுடற் சாறு முற்றும்
வருமள வுறுஞ்சிக் கோது மறுகவாய் மறுக யாரும்
பரிகசித் திடவே வீசும் பரத்தையர்க் கன்ன கன்ன
விரதம்வே றுக்க லொன்றே யியற்றுமெந் திரந்தா னொப்போ.

தம்பொரு டம்பா லாகத் தருணர்க்கு விலைசெய் தன்னார்
தம்பொருண் முற்று மவேண்டித் தரப்பெறு விலைமின் னார்க்குத்
தம்பொருள் கொடுத்து முன்னீ டவணையின் விலையோ மீட்டுந்
தம்பொரு ளோகொள் வாணி சனையுநேர் சாற்றற் பாற்றோ.

அருத்திகூ ரிவர்ப ரத்தை யளிப்பரென் பதாதி ரிந்து
பரத்தைய ரென்று நாமம் பரித்தவ ரொருவீட் டின்பிற்
குரைத்திடு மெடுத்துக் காட்டிங் குவர்ப்புண ரின்பே யென்னாத்
தெரித்தநூல் வாய்மை யென்று சொல்லிய றெரிப்பர் மைந்தர்.

வஞ்சகஞ் சூது பொய்மை மதுநுகர் வாதி யாவு
மெஞ்சலில் லனநா டோறு மினிதுகொள் கல்லு மின்னோர்
விஞ்சுகா ரிகைக்கு டைந்தோ வேறனோ கப்ப மேபோற்
கஞ்சமின் றிருவெ லாமிக் கணிகைய ருழைக்கு விக்கும். (ககரு)

சாதனம் வரைந்த ளித்துந் தருபொரு ளானும் பெற்றும்
வேதன மாந்த ரேவற் கிடையீடு மிகவுண் டந்தோ
சாதன மிலாது மைந்தர் பொருளெலாந் தீர்க்குற் றேவல்
வேதன மின்றி யாற்றி னிவர்செயல் விளம்பற் பாற்றோ. (ககசு)

ஆவணவீதி.

இன்னது கொடுமின் கொண்மி னென்றுரை யேவ லல்லா
வின்னது* ண் டெனுங்க டாவு மெதிர்தரு விடையு மென்றுந்
தன்னகத் தியாண்டு மில்லாத் தகையவா வணச்சீ ரம்மா
தன்னமோ வுரைப்ப வெம்மாற் சிற்சில சாற்று கிற்பாம். (ககஎ)

விலைநனி விரிக்குஞ் சொன்ன விலைபகர் வோர்கள் சொன்ன
விலைநிலை யேகொள் வார்முன் மேவிநேர் செய்த ராசிற்
கலையொரு தட்டிட் டாட கம்மொரு தட்டிட் டவார்
கலைதெளி ஞான மிக்கோர் சமரசங் காட்டு வார்போல். (ககஅ)

* உண்டோ வென்பது வினாவிடைச்சொலீறு தொக்கது.

செம்மணிப் பதக்கஞ் சங்கந் திகழ்சவுத் துவம்பொன் வாச
மம்மபல் கோடி கோடி யமரிட மண்ட கோடிக்
கெம்பிறை யேவுங் கோடி யிந்திரை கேள்வர்க் கீவான்
சொம்மணி யாழி யாதி தொகுத்தபண் டாரம் போலும். (௧௧௯)

மணிகளொன் பானுஞ் சொன்ன மரபினோர் வைத்து வைகும்
வணிகர்முன் றலை வாயெம் வள்ளன்முன் வழுதி காத
லணியது போலு மென்ன வரசிளங் குமரர் செல்லக்
குணிவிலை பகரா தள்ளிக் கொடுத்தினி துவப்பர் வாழ்த்தி (௧௨௦)

பலவகைத் துகில்விற் போரிற் படர்ந்துளா ரொன்று காட்டிக்
குலவுமீ தளித்தி பென்னக் கோடியென் றளிப்ப வம்மா
விலகிதொன் றளித்துக் கோடி யென்றசெட் டழகி தென்ன
வலமிது பெயர்க்கு மேவன் முற்றுமா மமைக வென்பார். (௧௨௧)

நென்மலை கொள்ளத் தூர நிலையினின் றுறுவோ ராங்குப்
பன்மலை செறிகு றிஞ்சிப் பரப்பென மீள நேர்ந்தோர்
சொன்மலைக் குலமென் றேருதச் சொன்மலை வுறநேர் கிட்டி
நன்மலை யிவைநாம் வேட்ட சாலியென் றுளநயப்பார். (௧௨௨)

அடுகரி துரகம் வைய மத்திர சத்தி ரங்கண்
மிடைநிரை நிரையா மல்க விற்குநர் கொள்வோர் பல்கத்
தொடர்களம் பாடி வீட்டிற் றேன்றுநா ரணத்தாற் போலும்
படர்பகை யவ்வூர் மேற்செல் பயன்றுணிந் துறுமை யம்ம. (௧௨௩)

கைக்குடத் தொடுசென் மின்னார் கடைமறு குறச்சென் றிந்தப்
பொற்குடம் விலையா தென்னப் பூங்கொடி தளரக் கொண்டீர்
முக்குட மேலுங் கொள்ளின் முறிகுட மென்பீ ரென்ன
நக்குடன் சென்று ரன்ன நலக்குடன் முகிழ்த்தார் மைந்தர். ()

பூவிலை பகர்வார் முன்போய்ப் பூவையர் பொருளை நீட்டி
மாவினஞ் செறிந்து தூங்கு மல்லிகைத் தார்நேர் காட்டி
யீவிரி நீலத் தாரை யென்னநுந் நீலத் தாரை
யேவினும் புண்ணிற் கோங்கொத் திடின்முழு தளித்துமென்பார்.

கலனுலாம் வாரி வெற்பு கானநா டென்னு நான்கு
நிலனுலாம் பொருள்க ளெல்லா நிறையக்கொண் டளிக்கு நீரா
லுலகெலா நுகர்பல் போக வொண்பொரு டன்பா னல்கும்
வலனுலா மாயை போலு மாவணம் வழுத்தற் பாற்றே. (௧௨௬)

வேளாளர் வீதி. வேறு.

தருமுகிலான் மணிமுதல தாவிலெழு வோருமுதல்லா
ரருள்கொடைமை தவாதமர்ந்து மடைவரிய தனிநாம
மொருதமக்கே யிடுகுறியா யுறப்பெறுவே ளாளர்குல
மருவிவளர் பெருமாட மணிமறுகி னணிபகர்வாம். (௧௨௭)

எத்தொழில்செய் வார்க்குமுணு வினிதளித்து நிலைநிறுத்தி
யத்தொழில்கட் காருயிரா மருந்தொழிறந் தொழிலாக்கொண்
டெத்தொழில்க ளினுமுழவே தலையெனநூ லிசைவாய்மை
கைத்தலநெல் லியிற்றேற்றுங் காராள ரிவரம்மா. (௧௨௮)

நிலமலைநீள் கடல்வினவு நேரியர்க்கீந் தமைச்சாகி
யுலகமுதல் கொடுபெருநூ லுலகமெலா முயவளித்த
மலர்புகழ்சேர் சேக்கிழார் மாமணியிம் முதலியார்
குலமணியே யெனிலினிநாங் கூறுதிறன் வேறெவனோ. (௧௨௯)

இன்னதிரு மணிவாயி னிடைநேச நடராசன்
றன்னருளால் விரிந்தெழுந்த தனிமணிக ளேழொன்பா
னன்னவற்று ளொருபதின்மூன் றருமணிக ளவதரிப்ப
முன்னமருந் தவம்புரிந்த மூதகுசீர்க் குலமிதுவே. (௧௩௦)

என்னினிநா முரைத்துநனி யிம்மட்டோ வீராண்டிற்
பொன்னகர்நாண் வெண்ணெயமர் பொல்லார்பே ரருட்கடலுண்
டந்நிகரில் சித்தாந்த வமுதுபொழி மெய்கண்ட
நன்னர்முகி லவதரித்த நற்குலமு மிதுவன்றே. (௧௩௧)

உழுதொழிலே தலையெனக்கொண் டுறலொன்றோ வுமாபதிதா
டழுவியமெய் யன்புறுபூ சனைத்தொழிலும் வழித்தொண்டர்
விழுமியபூ சனைத்தொழிலும் விருந்துபுறந் தரன்முதலாங்
கெழுதொழிலு மருதுபுரீஇக் கிளர்கீர்த்திமேல் வளர்தருவார். ()

முத்தொழிலி னடுத்தொழிலா முழுதுல்க மளித்தருளு
மத்தொழிலோ னமிசத்த ராமரசர்க் காறினிலொன்
றுய்த்தவர்கோல் கோடாமை யுலகளித்தற் குயிர்த்துணையா
மித்தகையோர் பெருஞ்சீர்த்தி யிசைப்பரிதே யெவராலும். ()

வணிகர் வீதி.

குலத்தாலு நலத்தாலுங் கொடையாலு நடையாலும்
புலத்தாலுஞ் சிவநியமப் பொறையாலு நிறைகல்வி
வலத்தாலும் வளர்செல்வ மாண்பாலுஞ் செட்டிகளென்
றலத்தாலு முற்றுளாபே ரணிவணிகர் மறுகுளாப்பாம். (௧௩௪)

இருநிதியாற் றனதர்பல ரென்பரஃ திவர்க்கியைமோ
வொருவருமுண் ணுதவுவர்க் கூவனீ ருவனிதிய்ம்
பெருகுசுவை யூருணிபோற் பிறங்குவதிங் கிவர்நிதிய
மிருநிலவேற் றுமையணுவு மண்டமுமென் னினுமேலா. (கடரு)

ஈட்டுறுகா லணுவெனும்பொன் னிரவியென வேயீட்டி
மீட்டதனுக் கெதிர்மறையா விழுமியபல் லறநெறியி
னீட்டுவரெஞ் ஞான்றுநடு நிலைதிறம்பா நிலைதுலைக்கோல்
காட்டுமிவர் கையினுறீஇ யென்னினியாங் கழறுவதே. (கடசு)

அம்மையே யெனவெல்லா மளித்தபர னழைத்தருளு
மம்மையா ரியற்பகையா ரமர்நீதி கலிக்கம்பர்
மும்மையா லுலகாண்ட மூர்த்தியா ரைவர்செக
மும்மைவாழ்த் திவர்குலஞ்செய் முதுதவத்தா லவதரித்தோர். ()

பயன்மரமுள் ளூர்ப்பழுத்த பான்மைத்தே பகர்செல்வ
நயனுடையான் கட்படினென் னன்னூலி னிலக்கணமிவ்
வியல்பினர்நீ ணிதியறத்தா றேகுநிலக் கியங்கண்டே
யுயவுலக முறைத்தசெனி னுவர்மகிமை யெவருரைப்பார். ()

அரசர் வீதி.

உலகமெலா மோம்புதொழிற் கொருமுகுந்த னுருவினரோ
குலவரச ரெனநூல்சொல் கூற்றுநேர் தேற்றுதல்போன்
மலர்தலைய நிலமகளை மணிப்புயத்து மணந்தளிக்கு
நிலவுமணி முடியரசர் நியமமொரு சிறிதுரைப்பாம். (கடஎ)

அமைச்சுமுறை றஞ்சாமை யாதியவே ழியற்றன்முதற்
கமைத்தொழிறன் குளர்காட்சிக் கெளியர்கடுஞ் சொற்கடிந்தோர்
அமைத்தவறன் சிறிதிழுக்கா ளிகொடைகோல் குடியோம்ப
லிமைப்பளவுந் தவறுதல் லவைநீக்கி யினிதளிப்போர். (கசo)

திறைகொசோ ரயலரசர் திரளொருபா லணையநிதிப்
பொறையொருபான் முரசொருபாற் போற்றுறுபல் லறவொருபா
லிறையொருபான் மறையொருபா லின்னனமுற் றெவ்வொருபா
னிறைதருமக் குலவேந்தர் நிரம்பிவளர் திருக்கோயில். (கசக)

புகழ்தகுசெங் கட்சோழர் புகழ்ச்சோழ ரிடங்கழியார்
நிகரிலருண் மானியார் நெடுமாறர் சேரரெனத்
தகுமிவரோ ரிருமூவர் தம்பிரான் றோழர்தரு
தொகையினுளா ரவதரித்த தூயதவத் திவர்குலமே. (கசஉ)

வேறு.

உலகெலா மரசர் குலமெலா மேற்கொண் டோர்ந்துசெய் நீதிநூ லுரைத்த
குலமனு வேந்து திருமுறை கண்ட கோவொரு சேய்மிசைத் தேரூர்ந்
*தலகில்சீ ரரசு பொதுவெழு தனிச்சொ லருந்திறை யிவர்குலத் தவரான்
மலருமூ வேந்தர் தமிலுயர் சோழர் மகிமைநாம் வழுத்துதற் கெளிதோ.

அந்தணர் வீதி.

முற்றுல கொருங்கு படைத்திடு பிரமன் முககோற்பன முனிவர்சந் ததியோர்
முற்றுல கொருங்கு வாழ்வுற வேள்வி முதுமறை முறைபுரீஇ முகில்கண்
முற்றுல கொருங்கு நிறைபயி ரோங்க மும்மழை பெய்ம்முறை முயல்வார்
முற்றுல கொருங்கு வாழ்த்துவே தியர்வாழ் முழுமணி மறுகினி மொழிவாம்.

ஒருவரு மிருமை மும்மையு மின்பே யுறப்பெறு நிலையர்நா லொழுக்க
மருவுதற் குரிய ஞாம்பெரு வேள்வி வயக்குந ரறுதொழி லாளர்
பெருகுசீ ருலகே ழெட்டுறு மேனும் பின்னரு நவமுறப் புரிவார்
திருநிறை தருவார் ஞானசம் பத்தே தேடருஞ் செல்வமா வளர்ப்பார்.

ஒருபது புராண முழுவது மோர்ந்தோ ரொன்பதா மெண்குண முடைத்தா யருமையேழ் பவந்தீர்த் தருள்பெரும் பொருளை யாறங்கத் தைந்தெழுத் துண்மைப், பொருளென நான்கு மறையினுட் டெளிந்து பூசனை முப்பொழுதுளுற்றி, யிருபதத் தொன்று மன்பினு லின்பே யெய்துவார் திறனெவ ரிசைப்பார். (௧௬௬)

திருவளர் வாத வூரர்சம் பந்தர் சிறுத்தொண்டர் நீலநக் கடிகள்
முருகர்சோ மாசி கலயரப் பூதி நமிநந்தி மொழிகண நாதர்
தெருள்பசு பதிசண் டேசர்வண் பூசல் சிறப்புலி தில்லையந் தணர்கள்
குருமறை ஞான சம்பந்தர் கொற்றங் குடியடி களுமிவர் குலத்தோர். (௧௬௭)

ஆதிசைவர் வீதி.

உலகெலா முய்யு முபாயமே செய்யு மொருபெருந் தொழிற்சதா சிவன்றற்
புலனுற முப்போ துந்திரு மேனி நீண்டுமா பரார்த்தபூ சனைதா
னிலகுதன் சாதி வேதிய ரேசெய் திடன்மர பெனவிதித் தைந்து
மலர்முகத் துதிப்பித் திட்டவைந் திருடி மரபினர் மணிமறு குரைப்பாம். ()

நில்வரு வுருவ சதாசிவ சிருட்டி நிமலவே தியர்களா மிவரை
யலர்வரு பிரம சிருட்டிவே தியரே யாதிநாற் சாதிய ரெவர்க்கு
மலர்சிவ தீக்கை முதற்சமக் கார வகையெலாம் புரியதி கார
நலனினு லன்றோ குருக்களென் றுலக நயந்திடு குறியெண நவில்ப. (௧௬௯)

---

* ஊர்ந்த வென்னும் பெயரெச்சத்தகரந்தொக்கது.

அரிபிர மாதி யருமிவர் பரார்த்த மாப்புவி யதில்வழி பாடு
புரிசிவ லிங்க தெரிசனு திகளாற் புன்மைதீர்ந் துய்வரே னிலையில்
சுராருலகொன் றேதருமறைவேள்வி துணிவரோ சிவாக்கினித்தொகையே
வருசிவா கமஞ்சொன் மரபினெஞ் ஞான்று மல்குற நியதியின்வளர்ப்பார்.()

வேதவிக் கிரய மாதியாற் றேவ லகத்துவ விளைவினர் முதலோர்
தீதற லாதிக் கியற்றுறு பிராயச் சித்தமே நித்திய மாதி
யோதுபூசனைகள்பிறர்பொருட்டுஞ்செய்துலகெலாமுய்விக்குங்கருணை
யேதகு முருக்கொண் டுற்றவ ரிவரென் றெவ்வுல குந்தொழு தியல்போர்.

நம்புகழ்த் துணையா ரூரர்சீர்ச் சடைய ஞரிசை ஞானியார் நாரை
நம்பியாண் டார்மன் னருணந்தி யிவரிந் நற்குலத் தவரென லொன்றோ [து
நம்பியொன் பதின்ம ராந்தொகை தொகுத்த நாயன்மார் தம்மின்முப் போ
நம்பிரான் மேனி தீண்டுவா ரிவரே னும்பிற நவிற்றற் னெவனோ. (௧௫௨)

மறைமொழிப் படியே வைசியப் பிரமன் வதனத்திற் றோன்றியான் மார்த்த
முறையல துலக முயச்செயும் பரார்த்த முறைக்குரித் துறுமவர் புகழே
யறைவரி தெனில்ம் மறைபிரா மணனென் றருள்சதா சிவன்முகத் துதித்து
நிறையினவ் விரண்டும் புரிசிவத் துவிசர் நீதிநா மோதுதற் கெளிதோ.(௧௫௩)

இத்தகு சிறப்பிற் பெருந்தவத் துவிச ரிருந்துவாழ் யணிநெடு மாடப்
பத்திவான் சமழ்ப்ப வொளிர்திரு வீதி பாங்கினி லெண்மிமன் சூழ
மத்தியெம் பெருமான் மந்திர நாதன் வாழ்மணிச் சினகர மன்னு
மத்திருக் கோயி னலனெலாம் வகுத்த லம்மவோ வெம்மனோர்க் காமோ.

பற்பல கோடி யண்டமும் விரிந்து பரந்துவாழ் பல்லுயிர்த் தொகைக்கும்
வெப்பறு கவிகை யாமலர்த் துணைத்தாள் விரிந்தெழ றருமமு தேசற்
கொப்பிலா மரக தம்மணிக் குடையா வுலகெலாம் விரிந்துயர்ந் தோங்கு
மற்புத சூத பூருக மம்மா வாங்கொரு பாங்குநின் றவிரும். (௧௫௫)

நந்தன வனங்க டடங்கள்பல் கழக நன்மணி மேடையா டரங்க
முந்தன சாலை யன்பர்வாழ் மடங்கண் முதற்பல வுறுப்பெலா நிறையு
மிந்தநன் னகரே விராட்டெழிற் கோயி லேயித யாம்புய மென்றே
சந்தத மருத நாயகன் கருணை தந்துவீற் றிருந்தர சியற்றும். (௧௫௬)

தீயவல் விடமுண் டமுதருள் சிவனென் பொதுத்தனக் கேசிறப் பென்று
தூயமு தேச நாமமே தேற்ற றுணிவுறக் காழிவாழ் மணியிங்
கேயருள் பதிக முதலிலச் செயலிவ் விறைசெய லெனுஞ்சரித் திரஞ்சேர்த்
தாயகா ருடைநஞ் சுண்டுகாத் தருள்செய் தவனென வருளிய தம்மா.

செறிபொழி லணிசெய் திருவுசாத் தானந் தெண்டிரைக் கழனிசூழ் தான
மிறைதிட னெனவே யுறைவிடஞ் சேணி னெழுந்தலா மாளிகைத் தான
நிறைமதி யந்தோய் மதிலணி தான மென்பன வாதியா நிகழ்தென்
மறையருண் மொழியா லினையசேய் வழுத்து மாண்பதித் திருவுசாத் தானம்.

ஆயவிந் நகரத் தரும்பெருஞ் சிறப்பில் வறிவிலா வேழையே னுரைக்கு
ளாயதோ வம்மா வத்தனிக் காழி யருமணி குருமணி யயில்வேற்
சேய்மணி யமுத வாய்மணி கமலச் சேவடி சென்னிசேர்த் தெளியேன்
வாயில்வந் தனசிற் சிலபொறுத் தருள்வீர் மாசறத் தெளிந்தமாண் புலவீர்.

திருநகரச்சிறப்பு முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௩௧.

# புராணவரலாறு.

சித்தி யெட்டினின் றேவல் செயும்வனம்
பத்தி வேலி*யருட்புனல் பாய்வன
முத்தி வான்பயி ரோங்கு முதல்வன
நத்தி மாதவர் வாழ்நை மிசவனம். (௧)

வேறு.

இன்ன விப்பரு வத்துறு மெனும்வரம் பின்றிப்
பன்னு மூவிரு பருவத்தும் பனிமல ராதி
யென்ன பற்பல பொருள்களுங் குறைவுறா தென்று
மன்னி மல்குபு விளைவது நைமிச வனமே. (௨)

காட்ட மாவன மேதருப் பாதிய கலப்பை
*யீட்ட மாவன மேதமி னியமங்கட் கிசையக்
கூட்ட மாவன மேதரு மெனமுனிக் குழாங்கள்
வேட்ட மாவன மேதகு நைமிச விபினம். (௩)

நேய மாதவ நேத்திர னிமாசலை நிமிர்வேற்
சேய மாதவந் தடக்களிற் றுனனன் றிருத்தாட்
கேய † மாதவப் பொறிநெறி தொலைத்துநின் றிறைஞ்சுந்
தூய மாதவர் வாழ்வது நைமிசத் தடவை. (௪)

* ஈட்டம் ஆவ நம் ஏதம் இல் நியமங்கட்கு எனப்பிரிக்குக.
மாதவ = ஆணவமலவிருள்கெட

எங்கள் வானுல கென்பெறுந் துன்பமே யேற்கு
மிங்கு ளார்கள்பே ரின்பமே வேறறி யாரென்
றங்கு மான்முதற் சுரரொலா மவியமு தாசை
பொங்க மேவலி னுலகபண் டாரமப் பொங்கர். (ரு)

சரியை யாதிநாற் பாதமுஞ் சாற்றுநூ லப்பரம்
பரம தாமிரு சோடுமைம் முகனையோர் முகப்பண்
பொருவி லாதுணர் வநலொன்று முறுவராங் குறுவர்
வரன கோபுரம் போலுமவ் வில்லையார் வல்லை. (சு)

வன்னி வேதியின் வயக்குவ வன்னிமுன் னுவ
வன்னி யோதுநான் மறைமுழு தோதுவ வன்னி
யன்ன நூலயந் தேர்ந்துயு மயன்கிடு மன்ன
மன்ன மாதியெண் டிருசிறை யங்கு மடவி. (எ)

அங்கி மூன்றவ ணநதண போம்புவா ரவர்த
மங்கை மாரவற் றோடுதம் வாயகற் பாய
துங்க வங்கியு மேற்கொடு நான்கெனத் துலங்கத
தங்க ளுவளர்த் தொழுகுறத் திகழ்வதத் தவமே. (அ)

இன்ன பல்வளஞ் சொல்வளத் தியம்பொணு தென்று
மன்னு மப்பெருங் ககனபூ வாசமு னீசர்
பன்னு மாசவு னகமுனி முகமெனப் படைத்தாங்
குன்னு மோர்வடி வமைந்தென வொன்றிவாழ் மனத்தோர் (கூ)

இத்த வப்பெரும் பண்ணவ ரித்தவத் தென்று
முத்த மப்பர ஞானசிட் காமியத் துடனுய்
முத்த முற்பல வேள்விக டொடங்குபு முடிப்பார்
சத்த மக்குள மரபுல குணருமா சரத்தால். (௧0)

இனைய மாதவ ரிமாசல யாதம ரிடத்தான்
வினைக ழற்றியற் கனைகழற் றிகழ்மனம் விழையும்
புனித தத்தம நித்திய நியமங்கள் போற்றி
யினிய சத்திர யாகமங் கியற்றின ரிருந்தார் (கக)

அன்ன காலையிற் சூதமா முனிவர்கோ னுங்கே
துன்னி னனது காண்டலுந் துண்ணென வெழுதார்
சென்னி கூப்பிரு கரத்தினர் வரத்தெதிர் சென்றூர்
முன்னி றைஞ்சின ரின்னுரை முகமன்முன் மொழிந்தார். (கஉ)

அழைத்து வந்தன ராதனத் திருத்தின ரன்பாற்
றழைத்த தூமலர் பாத்தியா சமனமர்க் கியமுன்
விழுத்த கக்கொடு வழுத்துபூ சனைமுறை விளைத்தார்
முழுத்த வன்பினு லின்புற முன்பிவை மொழிவார். (கங)

ஐய மெய்சசிவ புராணநூற் போதமுற் றளித்தே
யுய்ய வெம்மனோர்க் கருளிய மேனிகொண் டுற்ற
மெய்ய வேதையேங் குடிசைநீ விழைந்துபோந் தருளிச
செய்ய முற்றவ நற்றவம் பெற்றவென் சிறியேம். (கச)

கருணை மாநதே முற்றுணர் கற்றவ ரேறே
பொருணை யந்தநின் வாக்கட லுக்கடை புராணத்
தெருணை யநதவா ரமுது வுண்டுண்டுந் தெவிட்டா
தருணை யந்தி லார்வமீக் கூர்வதா லண்ணல். (கரு)

முன்ன ரொண்சிவ கேத்திர விசிட்டமுற் றியற்சீர்
சொன்ன லம்பெற விரித்தனை சுருக்கினை சொலுங்கா
னன்ன ராம்பிர வனமது நாதநற் றலமொன்
றென்ன மாதலத் தினும்பெருஞ் சிறப்பின திதன்கண். (கசு)

இனிது வீற்றிருந் தருளுமா தேவனெம் மீசன்
புனித மான்மிய மளப்பரி தெனப்புகன் றுரைத்தா
யனைய மாண்விரி வுணர்விழை வதிவிரி வென்று
வினைய வாய்மையின் வேட்டனர் கேட்டனர் மேலோர். (கஎ)

அன்ன வாய்மையின் வாய்மைகேட் டருணிறை சூத
னென்னு மாதவன் னென்னுமா தவன்மறை யாவும்
பன்னு மந்திரேச் சுரன்பத பங்கயம் பரிவாற்
சென்னி வைத்தரு ணிலத்துலாய் நன்றிது செப்பும். (கஅ)

முனிவீர் கேண்மினும் வினவுல கினுமொழி முதலா
மெனது நெஞ்சக முஞ்சக முஞ்சக மிரித்து
வனிதை பாகனு ரருள்பெறற் காகநார் மலிந்த
இனித ளிக்குமிச் சிரவணம் பரவண மெவர்க்கும். (ககூ)

நீவி ரிங்குரை தாவிரி மாவிரி நிழற்காத்
தேவி ளங்குமான் மியமயக் குவர்க்குரை செய்யாத்
தூவி ளங்கதி குய்யமித் துய்யுமான் மியத்தை
நாவி ளங்குசீர் நந்திதே மூந்திசை நவின்றான். (௨௰)

போத னேதகு புத்திர சிகாமணி பொருவின்
மாத போதனர் வழுத்துசிந் தாமணி வரந்த
வாத சீர்ச்சனற் குமாரமா மணிமுனிக் கவ்வா
றோது வாமினி துணர்மினென் றுறுவர்சோ னுரைக்கும். (௨௧)

கண்ண கன்புவ னங்களாங் காங்குயர் கருமங்
கண்ண கன்புறச் செய்பயன் கைபெறீஇக் களித்தே
கண்ண கன்புரிந் தமர்களை கண்ணுதற் கண்ணாங்
கண்*ண கன்புடைத் தருடிருக் கைலையஞ் சைலம். (௨௨)

காள கண்டனை மொழியிமா சலையிடங் கவின்செய்
காள கண்டனை மண்டனை விண்டனைக் கலந்த
தாள கண்டனை யண்டருந் தொண்டருந் தழுவத்
† தாள கண்டனை யருள்வது கைலையஞ் சைலம். (௨௩)

சுருதி யானளப் பரி ‡ தெனும் பரமனிற் றூயோர்
வருதி யானத்தி னாற்பது கோடியோ சனைமாண்
கருதி யானதிற் பாதிய கலமெனப் பரவித்
தருதி யானம வெனப்பெறுங் கைலைமா தரமே. (௨௪)

விண்டு வாதிய விபுதர்வாழ் பதமெலாம் விளிகாற்
கண்டு மேனகும் காட்சியிற் கவின்செய்வெண் கதிர்தா
னண்ட மெங்கணு மகண்டனுந் தன்னகத் தரன்போற்
றண்டு றுதொளி பயில்வது கைலையஞ் சைலம். (௨௫)

ஆற்றல் சாலசு ராதியர்க் கஞ்சுமா லாதி
சாற்று வானவர் சாருமா தாரமா தாரம்
போற்று மொண்கன கங்களெப் புவனத்துள் ளனவுந்
தேற்று மாண்புயர் திருக்கயி லாயநீள் சிலம்பு. (௨௬)

பன்னு மூவுல கத்துள பறம்பெலா முகாந்தத்
தின்ன நீர்தரச் சரண்புகு மினியகோ வென்ப
சொன்ன மேருவு மேருவந் தின்னும்பஃ றுதிகள்
சொன்னன் மான்மியத் திருக்கயி லாயநீள் சுரும்பு. (௨௭)

அகன் - பாவம்.
தாளகண் - திருவடிஞானம்.
எனும் - இடைக்குறை.

வேறு.

இன்னன பலவே றாய வியல்வளத் தொகுதி யார்க்கு
முன்னரும் பெருஞ்சி றப்பி னொளிர்திருக் கயிலா யத்திற்
பன்னருட் சோதி லிங்க பரமன்சீ கண்ட நாமத்
தென்னையா ளிறைவன் யாவு மீன்றரு ளன்னை யோடும். (௨அ)

வியனுல கெல்லா முய்வான் மேதகு குடிலை யாதி
வயநிறை தத்து வத்திண் மணியரித் தவிசின் மன்னிப்
பயனுற வமர்பொற் கோயிற் பரன்றிருச் சந்நி தானந்
தியலருள் வெள்ள மாமீ தென்றுல கெல்லா மேத்த. (௨௯)

உடலிடர்க் கடலோ யாரு முட்கொள நீண்டல் காண்ட
லிடனுறின் மடனெ லாமு மிரித்துயி ரிடர்முற் றோட்டித்
திடனரு ளமுத தோயந் திகழ்சிவ தீர்த்த மொன்றெறத்
தடமுமன் புடன்சென் றேத்துந் தனியர சாக மன்னும். (௩0)

பேசுமித் தடாகஞ் செம்பொற் பித்திகை நாப்பட் டேனுந்
தேசுறு பரிசத் தன்றிச் சென்றுநேர் நின்றுங் காணார்
மாசறச் சென்றோர் சில்லோர் மதிலலான் மற்றொன் றில்லா
வாசறு தளியொன் றுண்டோ வண்ணறன் கைலைக் கென்பார். (௩௧)

வயிரத்தொண் சோபா னஞ்செம் மாணிக்க மிழைத்த சந்து
பயிலத்திண் பளிக்க கஞ்செய் பரவுமவ் வாவி நீரத்
துயர்பத்து நூறு பைம்பொ னொண்மணித் தம்பத் தும்பர்
நயனுற்ற விதது காந்த நகுமணிப் பரப்பு வாய்ந்த. (௩௨)

மண்டப மொன்றி லங்கும் வித்தியா மயமீ தென்றே
யெண்டரு முனிவ ராது யிறைசிவ ஞான வேட்கை
கொண்டெழு மன்பர் கூட்டங் குறைவற நிறைவ தாங்கே
பண்டரு மறைநான் காதி பலகலைத் துழனி மல்கும். (௩௩)

வழுத்துமம் மண்ட பத்தின் மத்தியிற் புண்ட ரீக
முழுச்சரு மாத னத்தின் முற்றுல கெல்லாம் வநது
தொழத்தகு மம்பு சாதத் துணையடி சிவப்பப் போந்து
விழுத்தக வீற்றி ருந்தான் விழைதிரு நந்தி தேவன். (௩௪)

வேறு.

சிவமுணர்பன் முனிவர்குழாந் திவியர்பிர மதகணங்கள் செறிந்து சூழச்
சிவதரும மகாத்தியட்சன் சிவனந்தப் புரபாலன் சிவமெய்ஞ் ஞான
சிவகுரவ னருள்பர சிவனுகும் பிரபுதிரு நந்தி தேவன்
சிவமுதவுந் திருவுளமே திகழ்தரவீற் றிருந்தருளுந் திருமுன் றுங்கே.()

மலமகன்ற குலவிரதன் மாதவர்தம் போதநிதி மலர்ந்த செங்க
மலமகன்றன் மகன்சிவமே மருவுமக னொருவுமகன் மறைசொல் ௦சீர
மலமகன்றம் மனவிழையும் வனமுனிவர் வனம்போற்று வானன் பான
மலமகன்ற சனற்குமர மாமுனிவர்க் கோர்முனிவன் மயன்வந் தானால். ()

வந்தசனற் குமரமுனி மாமேரு வாமேனி யுள்ள லாய
நந்திதிரு வடிமலர்க்கீழ் நலனுறுதண் டெனவீழ்ந்து நமந்து போற்றிக்
*சந்தமலர் கமலமலர் கரவின்மலர் கலப்பமலர் கருத்த னாகிப்
பந்தமலர் படத்தெறுமப் பாதமலர் மீதமலம் படப்பூ சித்தான். (௩௭)

பின்னுமடி பணிந்தெழுந்தெம் பெருமானே யருளாழி பிறரெ வர்க்கும்
பன்னரிய வேதாந்த பாரகனே பரியாய சிவனே பன்னூ
லின்னுரைமா சிவதரும மெல்லாமெம் மவர்க்குணர்த்து மினிய போதா
வென்னுரிய குருநாதா வெளியேன்விண் ணப்பமுள மிரங்கிக் கேண்மோ.

புத்திமுத்தி யருளகில புனிதசிவ தலங்களினுட் பொருவி லிட்ட
சித்திமுத்தி தருமேரு சீசைல மாசைலத் திரள்சென் றேத்து
முத்தமப்பொற் றிருக்கைலை யொண்சைல மந்தரமு தலப்பில் சீர்த்தி
வித்தகப்பஃ றிருத்தலத்தின் விசிட்டமுரைத் தருள்காலை விளம்ப வற்றுள்.

ஒப்பரிதா யெப்பரிசு முரைப்பரிதாய் வரைப்பரிதா யுண்மைத் தாகித்
திப்பியமா யனவரத சிவசாநித் தியவிளக்கச் சிறப்ப தாகித்
தப்பரியு காரணப்பேர் தான்பலபெற் றுளதாகித் தரையின் சேம
வைப்பெனலாய்த் திகழ்சூத வனப்பெருமாண் புகன்றுரைத்தாய் வள்ளான்
[முன்னாள். (௪0)

சொன்னதலத் தீர்த்தமருட் சுயம்பிலிங்க மூர்த்திவான் சொல்லித் தாரத்
தின்னமியம் புறக்கேட்பா னிதையமிசைத் துதையார்வ மீர்ப்பப் போந்துன்
பொன்னடிப்பூந் துணைபணிந்து பூசித்தே னேசித்தென் புந்தி வேட்கை
மன்னருளாற் கைகூட வழங்குகெனப் பணிந்தெழுந்து மலர்க்கை கூப்பி.()

திருமுனமப் பெருமுனிவர் சிகாமணிநின் றேத்தவருள் செய்து நோக்கி
வருதியயன் பொருட்குமர மற்றெமக்கோ ரருட்குமர வையமுய்யத் [டோ
தருபதிநூற் றெருட்குமர சனற்குமர நினக்குரைப்பத் தடையொன் றுண்
வருகிருத்தி யெனவிருத்தி யம்முனியைத் தெம்முனிபே ரருணந் தீசன்.()

---

௦சீர் அமல் அம் மகம் எனப்பிரிக்க, அது மகன் எனப்போலியாயிற்று.
* கரங்களின் மலர்கொண்டு பூசித்தானென்க.

சனியருள்கூர்ந் தினிதருளு நங்குமர பாக்கியமே ஞான நேசா
மனிய:சிவ முகாம்புயநூன் மகரந்த பானமது கரமாய் வாய்ந்த
தனியயில்வேற் கரதார காரியருட் சண்முகன்மா தாம டிக்க
ணினிதமர்பு தாதையனேக் கியம்புதல்கேட் டெனக்கிசைத்தாங் கிசைத்து
[மென்று. (சங)

அய்யனையு மன்னையையு மாறிருமா மலர்வதனத் தாறிரண்டு
கையனையு மொருகோட்டுக் களிற்றினையு முளத்திருத்திக் கனிவா யோதும்
பையணிவெம் பணியணிகள் படர்ந்திவெண் சுடர்மதியம் பரவு சீர்த்திச்
செய்யமதி யிதழிமுடிச் சிவபாதாம் புயார்ச்சகமெய்ச் சீல கேண்மோ. (சச)

பரவியலவ் வியாசகிரு பாகரமா தேவனருள் பவன மெல்லாம்
வரமுறநல் கியவென்று மன்னுபுவீற் றிருந்தருளம் மாமன் சானப்
பரமதல மத்தியந்த பாவனமா யாமினிய பாரா வாரத்
திரமுறுமால் புரிராம சேதுவின்சா னதிசை திகழ மன்னும். (சரு)

இப்பரம சிவதலமே யிப்புவிக்கா ருட்டுணையா யிலங்கு முத்தி
கைப்பொருளாக் கிடுஞ்சகல காரியமுந் தரும்பாவங் கழிக்கு மிந்தத்
திப்பியமா தலப்பெருமை செப்பரிதெவ் வெவர்க்கெனினுஞ் சிறிது நீகோ
ளப்பெரிய நசைமறுக்க லாற்றாது சொலத்துணிந்தா மருமை மைந்த. (சசு)

இன்னதிருத் தலந்தீர்த்த மிலிங்கமுத சுயம்பிலிங்க மூர்த்தி யென்று [று
மன்னருள்ச் சஞ்சூத வனமெனும்பேர் பெறுசிபஞ்சொல் வாய்மை யென்
பின்னகிசோன் பாற்கடலிற் பிறங்குபசே சம்மாம்பாற் பெறுசீ ரென்று
பன்னனைய குரவனிடைச் சிவலிங்கம் பணிபதிகொள் பான்மை யென்று.

வரனிறையவ் வகியரசம மாவனத்திற் பாவனத்தின் வருசீ ரென்று
பரவுதிருப் பணியாங்கப் பணிவேந்த னெணியாய்ந்து பயிற்ற லென்று
கரவில்சிவ பூசனையக் கட்செவிவேந் தாங்கியற்று காட்சி யென்று
நரலையர சுறுசாப நடலையொழித் தாருளே நண்ணிற் றென்று. (சஅ)

தூயறன்மார்க் கண்டமுனி தோய்ந்துடன்மா சிரித்தருள்சார் தூய்மை யெ
ன்று, சேயரெகு குலபதிமந் திரப்பேற்றிற் பகைதொலைத்தின் புறுசீ ரெ
ன்று, மேயவமு தங்கொணர்ந்து விண்டுசிவ சுவேதனைஞ்செய் மேன்மை
யென்று, வாயதிரு விழாச்சிறப்பு வானவர்கோன் புரிந்தருள்சார் வாய்மை
யென்று. (சகூ)

இவ்வகையோர் மூன்றுதலை யிட்டபதி ஞோர்காதை யியல்பு முற்று
மவ்வகையே மைந்தநினக் கறிந்தவகை விரித்துரைத்து மமையக் கேளென்
றுய்வகைசெய் நந்தீச னுரைத்தனனென் றுடன்சூத வுறுவர் கோமான்
செய்வகைமா தவர்க்கனைய திருநந்தி மொழிப்படியே தேற்று கின்றான். ()

புராணவரலாறு முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௱அகூ.

# தலவிசேடச்சருக்கம்.

மரைமகன் மைந்த கேணின் மனம்விழை கின்ற வாறு
நிருமல மந்தி ரேச னிலவுத லங்கொண் மேன்மை
யுரையில டங்கி டாத தொருசிறி தன்பு நீட
வருளுது மென்று வாய்மை யறைதரு நந்தி நாதன். (௧)

வேறு.

மலரவன் றனையருள் வயங்கு மாதவா
திலகனென் றல்குரை செம்மல் கேண்மியா
நிலவுல கலைவற நிறுவு சந்திர
வலநிரை *யிரவியி னவாசி வம்பலில. (௨)

திருநிறை நாவலந் தீவின மேவிய
பரவிய வரனுறு பரத கண்டதிற
பொருவறு திரவிட பூமி மங்கைதன்
றிருமுக மெனப்பொலி சென்னி நாட்டினில. (௩)

கண்ணென திகழ்தரு சூத கானனம
புண்ணிய மாநிதிப் பொன்னனி மாநதிக
கண்ணிய தெனுதுமூன் றுய யோசனை
பண்ணிறை மறைவனக குடாது பாங்கரின். (௪)

ஓரிரு யோசனை யோங்கு தென்கடற்
சேரியல் வடாதுமா திரங்கு ரோசமைந
தேரிய லெல்லையி னிலங்கு மிவ்வனத
தோரிய லகலமுக் குரோச மோதுப. (௫)

தெவ்வனத தஞ்செயமால சென்று ராவலாற
செவ்வன சததிரு வாதி சோதலா
லெவ்வன நிததிய வின்ப மீதரு
மிவ்வனந திருவுசாத தான மென்பவே. (௬)

புத்திகள் வேண்டினும் பொருவி லிரு
சித்திகள் வேண்டினுஞ் சித்த சுத்திமா
முத்திமுன் வேண்டினு முற்றும் பெற்றுளா
ரித்திருத் தலம்புகி னெண்ணி யாங்கரோ (௭)

* இரவி—மலை.

இத்தல மெத்தலத் திருந்து மெத்தகு
சுத்தமா மூனிவருஞ் சூழ்ந்து போந்துமை
யத்தனை வழிபடூஉ வமரும் பூதல
தத்துவ மெனத்தகுஞ் சனற்கு மாரனே. (அ)

ஆதரத் தடைந்தம ரகில சீவர்தம்
பாதகக் குழுத்துகட் பருப்ப தங்களைப்
பேதுறக் கரைத்துயர் பேரின் பேதரு
சீததத் துவமெனச் சிறக்கு மித்தலம். (க)

எத்துணை மூடரு மெய்தி னீண்டவர்
கத்திசெய் சூதவ னக்க ணக்கிலாக்
கொத்தெலாந் தகித்தருள் கூட்டு மாரமூற்
றத்துவஞ் சூதவ னத்தண் மாதலம். (க0)

சேகதி மனத்தவ ரெனினுஞ் சென்றவ
ணேகதி யெனப்புகி னிகரில் பாவநீண்
மாகதி ரட்குல மலைகள் சாடுஞ்ச
தாகதி தத்துவஞ் சாற்று மித்தலம். (கக)

அம்பர வான்புவி யாதி போற்றுதோ
லம்பர சிவனிரண் டற்ற வன்பருக்
கம்பர வின்பளித் தமருஞ் சிற்சன
வம்பர தத்துவ மாகு மித்தலம். (கஉ)

கண்டவ ரித்தல நிரயங் கண்டிடார்
தொண்டெவ ராற்றுந ரனையர் சூழ்ந்தவா
னண்டர்தொண் டாற்றிய வமர்ந்து பேரரு
ளண்டகு புவனம்வீற் றிருப்பர் வேந்தராய். (கங)

இத்தலத் துற்றவ ரினித்த லத்திலுற்
பத்தியற் றருட்சிவ பத்தி யுற்றுயர்
முத்திபெற் றுய்வரான் முனிசி காமணீ
சத்தியஞ் சத்தியஞ் சத்தி யம்மிதே. (கச)

மன்றலெண் டிசைகம ழமிர்த மாவன
மென்றொரு முறைதிரு நாம மேவர்வாய்
நின்றெழ லுறினுமந் நிமல நாமமே
யன்றவர் தம்மையு மமிர்த ராக்குமே. (கரு)

மாதகு திருவுசாத் தான மாண்பெய
ரோதுநர் புகழ்த்திரு வுரைசெ யண்டிரு
மேதகு பரசிவ ஞான மெய்த்திரு
வாதிய திருவுசாத் தான மாவரே. (௧௬)

ஏனைய தலங்களி னியற்றும் வேள்விகண்
ஞானமா தவமது நவிற்றல் பல்லறந்
தானமா தியவெலாஞ் சாற்று மாம்பிர
கானனத் தியற்றினென் றனந்தங் காண்பரே. (௧௭)

ஏனைய தலங்களி லெண்ணில் கற்பகா
லீனமின் மாதவத் தெய்தும் பேறெலா
மானதன் னேணியா றுறினு மக்கணந்
தானுவந் தருள்வது சூத மாதவம். (௧௮)

தன்னுழைப் போந்தறன் மூழ்கிச் சம்புவை
முன்னுநர்க் கன்னமா முளரி யீபல
னென்னுரை யளவுகொ லெண்ணின் மேலையோ
ருன்னுரை யுட்டொகைச் சிகையு முட்படா. (௧௯)

இன்னினி யென்னிசைத் தின்ன மாவன
முன்னியன் னேயைமனு முதலை யென்றும்போற்
றின்னிய தியற்றுநே ரெய்தும் பேறெலா
முன்னுகை முதிகத்தா * வுறழ்வு முற்றிடா. (௨௦)

என்றருணந்திரா ளிறைஞ்சி வேதன்சேய்
பின்றற னீருணர் பெற்றி வேண்டிமு
னின்றன னென்றுபி னிகழ்த்து வான்றனை
முன்பெருமு முனிவர்க்குச் சூத மாமுனி. (௨௧)

வேறு.

ஆத ரத்தினி மாவன
மீ தலத்தினின் மேன்மையை
யோத ஆற்றவர் கேள்வியர்
தீதொ ழித்தருள் சேர்வரே. (௨௨)

தல விசேடச் சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬௧௧.

* உறழ்வு — ஒண்டு எண்ணின் பெருக்கல்

# தீர்த்தவிசேடச் சருக்கம்.

ஏர்த்த மாவன மின்புற வோதினுஞ்
சீர்த்த மாதவ சிந்தைய கேண்மியா
தீர்த்த மான்மிய சிந்தென வோதுமா
ஞர்த்த மாவன நந்திபி ரானரோ. (க)

வேறு.

இத்தல மூன்று குரோசவெல் லையினுளெண்ணிலாப் புவனங்க ளிடை நின்
றுத்தம தீர்த்த முற்றும்வந் திலகு முரைப்பதெங் கிவையெலா முவற்றி
னத்தகு நாம நிகரமே யளவின் முதலா லாருயிர்க் கருண்மா
துத்தமே யனைய சிற்சில தீர்த்தஞ் சோறுமாற் றேறுமா தோன்றல். (உ)

ஆருயிர்க் கருளு மந்திர ராச னுடையத் தங்கியம் பரத்திற்
சாருமோர் சரசு நிருமல மளிக்குந் தன்மையி னிருமல தடமென் [பெரிதுஞ்
பேருமெம் பெருமான் பிறைமுடிப் பிறங்கும் பெரும்புனற் பெருமையிற்
சீருடை மையினன் மணிகரு ணிகையென் றிருப்பெய ரும்பெறீஇத்திக
[ழும். (ங)

அத்துணை நாமத் தால்வள ரேல்லை யாமுரு வாயினு மடைந்து
பத்தியிற் படியும் பண்புடை யவர்தம் பவப்பொருந் தவப்பெரும் பரப்பைத்
துய்த்திர ளாகத் துய்த்திடுந் தூமந் தோயுறுத் தீயெனத் துலங்கு
மித்திற மிதுசேர் மாதிரத் தாலு மிலக்குமா லெனைவர்க்கு மின்றும். (ச)

இம்மணி கன்னி கைப்புன றினந்தோயந் திடக்கிடைப் பரிதருந்தவங்க
ளும்மையாற் றினர்க்கே வாயப்பதா மெனினு முதண்மதி மதிநிறைபருவத்
தம்மணி நீரி லாண்டொரு தினம்வந் தன்பினன் மரபினி லாடுஞ்
செம்மையோர் முந்நூற் றறுபதந்தைந் தினமுஞ் சென்றுதோய் பயன்பெற
[றிண்ணம். (ரு)

இறைதிருத் தளிநேர் வெளியினிற் கீழ்பா லிலங்குமோ ரலந்தையங்கிதன்பே
ரறைகுப வனும குண்டமென் றவன்மு னதிற்படிந் தெண்ணியாங்கடைந்தா
னிறையுமவ் வுறையிற் பௌமவா ரந்தா னிகழ்திர வாரமிவ் விரண்டின்
முறைபுரி நான முக்கிய மென்ப மூதுணர் மேதகு முனிவ. (சு)

சொன்னவா ரத்தின் வாரத்தின் மூழ்குந் தூயர்பன் னேயெலாந்தொலைத்து
வின்னிகழ் திடகாத் திரதயி ரியமா வீரிய மாதியெவ் விழைவு
முன்னியாங் கொருங்கே யுறுவரொக் கலமு முதவுமிவ் வுதகத்தின் கீழ்பாற்,
யன்னருஞ் சிறப்பெண் டிகையினுந் தகையாப் பயிலுமோ ரியலெழிற்பரு
[கர். (எ)

இவணுறு மனைய வுவளக மாதி சேடன்மா தீர்த்தமென் னுமத்
தவிருமவ்வாழி யாழிய சூழி யன்புமிக் கின்புற வடுத்து
நவிலுறு மாக மதியிலங் நாளி ஞனநூன் முறைமையின் மூழ்குந்
இவியரெண் போக மாதிபல் போகச் செறிவெலாம் பிறிவறச் சேர்வார். (௮)

நிலவுபோ கீச தீர்த்தமென் பெயரே நிச்சய மென்றதை நிறுத்து
மலமிலாப் போக நுகர்ச்சியீ தொன்றே வருமறை யாகம மாதி
கலையெலாமுள்ள படியுணர் தெளிவுங் கைவர வுண்மைஞா னத்தாற்
செலவரும்வீடுங் கூடுப சேட தீர்த்தமாண் பெயரிது தேற்றும். (௯)

வளர்திருக் கோயிற் புறம்பிர தீசி வம்பலி னும்பரும் வழுத்து
நளினியொன் றுளது மார்க்கண்ட தீர்த்த நாமமவ் விலஞ்சியை நவில்ப
பளகெலாம் பாற்றும் பவமெலாம் படுக்கும் பாவனம் பவித்திரம் பரமம்
புளகரிக் கருளிவ் வளகம்பல் கோடி புவனமும் போற்றுமா புவனம். (௧௦)

சாதவெப் பாற்றிச் சீதள காண்டங் தைம்மதி தருகுரு பூசத்
தேதறு விதியின் மூழ்குநர் பேற்றை யார்கொலோ விசைப்பரிப் பெரிய
மேதகையாளர் விழிசெலு *முலகின் மேவிய வாவியும் வெருவுங்
கோதற வுலக மெவற்றினு மாவிக் குவால்கவர் தவாத்திறற் கூற்றும். (௧௧)

இன்னினி யிதன்சீ ரிசைப்பதை யெற்றுக் கிவ்வொரு திறத்தினாலேனை
நன்னல் நிகர மென்னவு மின்ன நாரமே தேரமே னவிற்று
முன்னிய வளிக்கும் வகையவிந் தீர முதவிடாப் பல்ன்களொன் றில்லை
யென்னலாம் பொதுவாற் சிறப்புற வகுத்தல் யாவர்க்கு மரிதரிதம்ம. (௧௨)

யாமிய ககுபத் திலங்குமோ ரலங்கை யிதன்பெயர் கௌதம தீர்த்த
மாமிதிற் றோணி பவாம்புதி கடத்து மரும்பெறற் றோணியா மனைய
தேமிகு பாணி நினைப்பெலா மளிக்குந் திறத்தினிற் பாணியா முதமாந்
தோமிலிக் கமல நிமலமிக் கருளுந் தோயமாந் தோயவந் தவர்க்கே.

இன்னன வென்ன வின்னமா வனத்தி லெண்ணிலா வெண்ணிலா வெல்லை
மன்னுமத் தொகையே பகர்வரி தெனிலவ் வாழிய சூழிகள் வழங்கு
நன்னலன் முழுது மாயிரத் திரட்டி நாவுளா னேவுளா னவிற்றற்
கென்னிலா ருரைப்பர் தாலிபு லாகத் திருமொழியொருவகை யிலக்கும்.( )

---

*. உலகு-இசை.

அறந்தரு மருத்த மாதிய திருத்த மருத்துமித் திருத்தங்க ளருத்தி
சிறந்துமூழ் கியமுன் னுரைத்தநா ளலதெத் தினமுழு குறினுமச் செல்வர்
நிறைந்துள விட்ட காமிய சித்தி நிகரகோ டிகளெலா நினைவின்
விறந்தொளிர் தரப்பெற் றிம்பர்வாழ்ந் தீற்றின் வீடுபே றடைகுவர் மெய்
[மை. (கரு)

என்றெறைமை யளிக்கு நந்திவாய் மலர்ந்த வின்னுரை தன்னுளத் திருத்தி,
முன்றொழு தெந்தாய் நின்றனி வாக்க முதந்தெவிட் டுதலிலை யெனமுன்
னின்றுபே ரன்பு நிமிர்சனற் குமர நிறைதவற் கறைதரு நிமல
நன்றிசெய் நந்தி நாதன்மே லென்று நற்றவ சூதன்பி னவிற்றும். (கசு)

வேறு.

தீர்த்த மான்மிய மீதுரை சீரினே
ரார்த்தி தீரவி ஞவின ராதியோர்
கார்த்த மாமலை வாதனை காதுறீஇ
யேர்த்த பேரருள் வாழ்வினி லேறுவார். (கஎ)

தீர்த்தவிசேடச் சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் சஉஅ.

---

# மூர்த்திவிசேடச் சருக்கம்.

மலர்தலை யுலகருண் மறைமக னுதவிய மைந்த தீர்த்தமேல்
விலகரு மகிமையி னொளிர்சில வுணர நவின்று மேற்சொல்வா
மலகிரி வானிறை மனுவிறை யருள்குறி யந்தண் மூர்த்திசீர்
நலனிடை யொருசிறி துளமுற வினவென நந்தி சாற்றுமால். (க)

வேறு.

நிருமலமாய் நிர்க்குணமாய் நிராலம்ப நிர்த்தொந்த நேய மாகி
நிருவிகற்ப நிராதார நிர்த்தோட நிட்களங்க நிருவி கார
அருண்மயமா யகண்டைக சுயம்பிரகா சப்பொருளா யனேக மாகி
யருவுருவா யருவுருவுக் கதீதமா யத்துவி தானந்தமாகி. (உ)

நித்தியமாய் நிறைவதுவாய் நிராமயமாய் நிரஞ்சனமாய் நீளமாகிச்
சத்தியமாய்த் தத்துவமாய்த் தத்துவா தீதமாய்ச் சாந்த மாகிப்
பத்தியமா யத்தமுமாய்ப் பராபரமாய்ப் பாவனமாய்ப் பரம மாகித்
துத்தியமாய்ச் சோபனமாய்ச் சுமங்கலமாய்ச் சூக்குமமாய்த் தூலமாகி. (ங)

சேதனமாய்ச் சிற்பரமாய்ச் சிற்சுகமாய்த் திவ்வியமாய்த் திருத்த மாகிச்
சாதனமாய்ச் சாத்தியமாய்த் தாயகமாய்ச் சமயமுமாய்ச் சமயா தீத
மாதனமாய் வளரமுதாய் மலிசுவையாய் வருமணுவாய் மகத்து வாகி
நூதனமாய்ப் புராதனமாய் நுந்தாத வொண்சுடராய் நொதுமலாகி. (௪)

சமரசமாய்த் தனிமுதலாய்ச் சராசரமாய்த் தருமமுமாய்த் தருமி யாகித்
தமரசமாய்த் தமரமுமாய்ச் சதாகதியாய்த் தருபரிசந் தானாய் ரூப
நிமிரனலா யிரதமுமாய் நீராகிக் கந்தமதாய் நிலனு மாகித்
திமிரமொழித் திடுமெபரஞ் சிவம்பெருக்கும் பரஞானத் தெளிவு மாகி. (௫)

சகலமதாய்க் கேவலமாய்ச் சுத்தமுமா யவத்தையதீ தந்தா னாகி
யகலமதாய் விகலமுமா யாதிநடு வந்தமுமா யனாதி யாகி
யிகலரிதாய்ப் புகலரிதா யெண்ணரிதாய் நண்ணரிதா யெவ்வாற் றானும்
பகலரிதாய்ப் பின்முன்சூழ் பக்கமேல் கீழ்நாசோற் பவமின் றாகி. (௬)

எல்லாமா யல்லதுமா யெவ்வுயிர்க்கு முள்ளுயிரா யெவைக்கும் வித்தாய்ச்
சொல்லாரும் வித்தின்றித் தோன்றுவதாய்ச் சமீபமாய்த் தூரமாகி
வில்லாரு மணிமார்பன் விரிஞ்சனரி முதலாய விபுத ராதிப்
பல்லாரும் பல்புவனம் பல்கோடி யகிலாண்டப் பகுதியாவும். (௭)

அலரிமுனஞ் சுடசமெனத் தன்முனஞ்சேட் டிக்கவம ரசல மாகிக்
குலமறைக டனித்தனியே கோடிகுழாங் கோடியெனக் கூறிக் கூறிப் [துச்
பலமுறையும் பலநெறியிற் படர்ந்துபடர்ந் தெட்டியெட்டிப் பார்த்துப் பார்த்
செலமுடியா திளைத்திளைத்துத் தியங்குறநீண் டொளித்தெங்குந் திகழ்வ
[தாகி. (அ)

ஒன்றாகிப் பலவாகி யொப்பிலதா யெப்பொழுது மொரோப டித்தாய்
நன்றாகி யெவராலு மெவ்விதமு மெவ்விடையு நவிற்றொ ணாதாய்
நின்றாரும் பிரமமென நிகழ்த்துபர சிவஞ்சிவ நிகரம் யாவுந்
தன்றாவி லருளொளிதிற் சார்ந்துய்வான் றிருவுளத்திற் றதும்பி யோங்கி. (௯)

பெருகுதிரு வருளாலிப் பிறங்கமுத சூதவனப் பிரம தேசத்
தருண்மயமா யொளிப்பிழம்பா யமுதசுயம் பிலிங்கவடி வாகி வான்றோய்
தெருண்மலியாம பிரவிருக்கத் திருவடியின் மூளத்தெழுந்து திகழ்ந்தெஞ்
[ஞான்று
மருமலிகூ விளமிதழி மாலதிமுன் புடைமலர்தூய் வழிப்ப மன்னும். (௧0)

தன்னருளாற் சுவேச்சையினாற் றனிமுதலா யெவ்வுலகுந் தழைப்பப்போந்த
தொன்னிலைய வன்னவருட் சுயம்பிலிங்க மூர்த்திபதஞ் சூழ்ந்துபோற்றி
யின்னருள்பெற் றவர்புயங்க விறைவருணன் மார்க்கண்ட னிந்திரேசன்
முன்னரிவர் தொகைதானு மொழிவரிதா லிவ்விலிங்க மூர்த்திநாமம். (௧௧)

வானிறைமார்க் கண்டேசன் வருணேச னனந்தேசன் மந்திரேசன்
மருமலா முதசூத வனநாத னுசாத்தான மாத வேலேசன்
முருகுமல ரமுதலிங்க மூர்த்தியிவை முதலனந்த மொழியு மிந்தத்
திருவருண மங்கனிதேன் றெள்ளமுதா தியவெனத்தித் திப்பமாதோ. (௧௨)

இன்னவரு ளழங்க ளெழுகோடி மகாமனுக்க ளெவற்று மேலாம் [றை
பன்னுமுறை பண்பினுரைப் பவர்முறையே பகிர்மதிவெண் பல்வாய்க் கூற்
வென்னலமே பலரோக வெப்பொழிந்து தட்பநிறை விழுத்தவின்ப
மன்னலமே சகலகலா வல்லபமா வித்தைநலம் வாழி மாதோ. (௧௩)

பூதமகா வேதாளம் பொல்லாத பேய்முதல புரிபல் கோடி
யேதமெலாந் தெறுநலமே யின்னருளாங் குளிர்நிழலூ டிருந்து வாழு
மோதநலந் தனிப்பரம முத்திமுதற் றிருக்கலெளா முன்னு சாவி
யாதரமீ தருநலமே யமிர்தநல முதல்யாவு மடைந்து வாழ்வார். (௧௪)

இத்தகுமந் திரநாதற் கின்னுமள வின்னும மிசைப்ப விந்தச்
சத்தியவா னமுதலிங்கத் தனிமுதலித் தலமொன்றிற் சமட்டி யாகும்
வித்துருவா யுலகமெலாம் விரிந்துமுளைத் தாங்காங்கு வியட்டி யாகு
முத்தமமா வருட்குறியா முதுபுவிகீண் டேகினுநே ரொளிரு மின்றும். ()

திருவமுத லிங்கமெனுந் திறனடைந்தார்க் கருள்செயலாற் றேற்றலன்றி
யுருவமும்வெண் ணிறனேயா யொருவாம லெஞ்ஞான்று முலகர் யாருந்
தெருளியசேற் றுறுமிந்தச் சிவலிங்க மூர்த்தியைப்போற் சிறந்த மூர்த்தி
யிருநிலத்துந் தருநிலத்து மெந்நிலத்து மில்லையென வெரிகை யேற்பாம். ()

நவிலருமிச் சூதவன நாதனடிப் போதிதய நளினப் போதி
லவிர்தரமெய் யன்பொடுமெவ் வாலயநற் காலையினி லடைந்து சூழ்ந்து
பவியமுறத் திருமுன்பு பணிந்தேத்தும் பண்பினர்பாற் பதிநூன் முற்றுந்
திவளறம்பல் கோடிகளுஞ் செறிந்துளகுற் றேவலெலாஞ் செய்து சூழும். ()

பனகமணி மனுவிறைவன் பதப்போது பகற்போது பரவிப் போது
மெனவருமெய் யன்பொடுசென் றேத்துநரெத் தேத்துமுல கேழுஞ் சூழும்
வனநிதிசொன் னவநிதிபொன் மணிநிதிமுற் பொருள்சுகுண வளநீ டாயுள்
புனைபொருள்கண் முதலாய பொருள்களெலாந் தமைச்சூழ்ந்து போற்ற வா
[ழ்வார்.

மதியிதழி மலருமுடி மனுவிறைபொன் மலரடிகண் மாலைக் காலை
யதிகவித துதிபணிமெய் யன்பர்பல வின்பவகை யனைத்துஞ் சூழப்
புதிதுபுதி தாநிறைபல் *போத்திருவா குவாருத்த யாமப் போதில்
விதிமுறைபோற் றுநரமல மெய்வீட்டிற் பேரின்ப மேவி வாழ்வார். ()

மகாமதி குருபூச மதிநிறைநாள் வரனுணர்ந்தம் மந்திரேசன்
பகாரிய பதமுறையிற் பணிந்தேத்தும் பண்பினரெப் பாவ தாவ .
நிகாமும்போய் நிகரரிய நின்மலராய் நினைத்தவெலா நீங்கா தோங்கச்
சிகாமலி தீபமெனத் தேசமெலாஞ் சீர்பரவச் சிறந்து வாழ்வார். (௨௰)

வேறு.

இந்தமா மந்தி ரேச னிம்பரோ டும்பர்க் கின்பந்
தந்தெழுந் தருள்வி ழாக்கொள் சைத்திரோற் சவநாண் முற்றும்
வந்துவந் திறைஞ்சு மன்பர் மணிமகார் செல்வ மாதி
செந்திரு விழாமுற் றெய்திச் சிவகதிச் செல்வ ராவார் (௨௧)

திருவளர் சூத கானஞ் சென்றுநா மந்தி ரேசன்
மருவள ரம்பு சாத மலரடி பணிது மென்று
வருவளர் நெறிச்சென் றுரும் வந்தினி திறைஞ்சி னராய்க்
கருவளர் பௌவ நீந்திக் கதிக்கரை சேர்வர் திண்ணம். (௨௨

கண்டவ ரலக்கண் யாதுங் கண்டிலர் பணிந்தார் தம்மை
யண்டங்க ளெல்லாம் போற்ற வமர்வரா னினைந்து ளாரிம்
மண்டனி லின்னு மோர்கால் வருநினை வடையார் வாய்மை
வண்டரு சூத கான மந்திர நாதன் பாதம். (௨௩)

இன்னவர்க் கெந்தை யீயு மின்னரு ளின்ன வென்னின்
முன்னவ னமுத சூத முளரிவாழ் மந்தி ரேசன்
றன்னடி யம்பு சாதந் தளிபுகுந் தளிமீ தூர
மன்னுநன் னியதி வாய்ப்ப வழிபடூஉ வழுத்துஞ் சீலர். (௨௪)

அலகிடன் மெழுகல் பூக்கொய் தலகிடா வலங்க லாற்ற
னலனிறை காலந் தோறு நல்குத னல்கு வித்தன்
மல்ர்நறுந் தூப தீபம் வயக்கலப் பாச னம்பொற்
கலசமுற் கலமின் னேசைக் கண்டைமுன் னுதவல் செய்வோர். (௨௫)

---

* போத்திரு—போகதுகர் கர்த்தா.

மறைமுத லிறைசி வாக மம்முறை வழாநி பந்தங்
குறையற வளித்து நாளுங் குலவிய நடாத்து மேலோர்
நிறைமணிப் பொற்றே ரூர்ந்து நிமலனெவ் வுலகு முய்வான்
முறைபுரி திருவி ழாவம் முறைபுரி திறமை யாளர். (௨௬)

மந்திர நாத னென்று மகிழ்ந்துவீற் றிருந்து வாழு
மந்திரத் திடைக்கி லங்கண் மருவினுங் குடனோர் வஞ்சு
மந்திரங் குளம்ப தைப்ப மணிபொனு திகளி னாலே
மந்திர மாக மூல மந்திர மெனவ யங்க. (௨௭)

புதுக்கியெவ் வுலகும் போற்றப் பொருவில்பே ரறத்தி னீண்டு
நிதிக்குவை மனைம கார்மு னிறையத்தா மொன்றை வேண்டா
மதிக்குளிர் நிட்கா மத்தான் மலர்திருப் பணிமெய் யன்பான்
முதுக்குறைந் தருணு லாற்றின் முதலிகப் புரிமே தக்கோர். (௨௮)

அணிமணிச் சாத கும்பத் தணிகள்பற் பலவ ளிப்போர்
தணிவிலா னிரைவ ளர்த்துத் தக்கபா றருவோர் நந்த
மணிவனம் பெருக வைத்து வளர்ப்பவ ரிவைமுன் னும்பல்
பணிபுரி பவர்தம் பேறு பகரவோ ரளவிற் றுமோ. (௨௯)

முரிவிலா வளியோ டேனை மூர்த்திகண் முன்ன ராற்றுஞ்
சரியையே கிரியை யாதி சாற்றுபஃ றிருத்தொண் டெல்லா
முரிமையிற் றருபல் பேறு மொப்பிலா வமுத லிங்க
தெரிசன மொன்றே நல்குஞ் செப்பிய துண்மை மன்னே. (௩௰)

மந்திர மெவையு நூலின் வருமுறை பகர்பே றெல்லா
மந்திர வேள்வி யாவ மரபினிற் புரிபே றெல்லா
மந்திர நிரைக ளேவன் மலியுமெண் சித்தி யெல்லா
மந்திர நாதன் பாத வணக்கமே யருளு மாதோ. (௩௧)

இம்பர்வாழ் வனைத்தும் வானத் திந்திர னயன்மா லேனை
யும்பர்வாழ் வனைத்து மேலை யுருத்திரா தியர் புரக்கு
மம்பர்வாழ் வனைத்து மப்பா லமலவாழ் வனைத்து மெல்லா
நம்பர்வாழ் மந்தி ரேசர் நியமபூ சனையே நல்கும். (௩௨)

இன்னருண் மந்தி ரேச னீண்டுசெ யருள்வி லாச
நன்னிலை யுள்ளத் தாலு நாட்டரி தற்ப மேனு
மென்னிலென் னளவோ முற்று மிசைப்பதிங் கிசைத்த வெல்லை
பன்னனு வொன்றிற் கோடி பங்கிலொன் றேனு மின்றால். (௩௩)

என்னவாய் மலர்ந்த நந்தி யெந்தைதாள் சனற்கு மாரன்
முன்னமந் தின்ப வாரி மூழ்கி நீடார்வங் கூர்வ
துன்னுபு பின்னு நந்தி யோதுமென் றேதில் சூத
மன்னருண் முனிவர் கோமான் மாதவர் கேட்ப வோதும். (கூச)

வேறு.

இந்தவருண் மூர்த்திவர னின்பினரி யாற்சொலுநர்
முந்துசெவி வாய்க்கொளுநர் முன்செய்வினை பாற்றிநிறை
யுந்துலக வாழ்க்கைமுழு துண்டருளி னீற்றினர
னந்தண்மலர் தாட்கமல வங்கணிழன் மேற்பொலிவர். (கூரு)

மூர்த்தி விசேடச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் எகூங.

# சூதவனநாமகாரணச்சருக்கம்.

எந்தை தாயமுத தங்கொண் மேனியி லிங்க மேன்மையி சைத்தன
மிந்த மாதல மந்தண் மாவன மென்ற நாமமி சைக்குமுன்
வந்த காரண முந்து காதைவ ழங்கு வாமனெ னத்திரு
நந்தி நாயக னன்பி னேடுந யந்த வாவினவிற்றுமால். (க)

வேறு.

இனிது கேண்மதி முனிவரர் மாநிதி யெனுஞ்சீர்ப்
புனித மாண்சனற் குமரனே பூருவத் தலரோன்
றனைய னாகிய காசிப முனிவரற் றழுவு
மனையர் கத்துரு வினதையென் வனிதைய ரிருவர். (உ)

மனன மர்ந்தன ரோர்வயி னிருந்துழி மகவான்
றனது வானிற வுச்சயிச் சிரவமென் றருபேர்
வனது ரங்கமஞ் சேய்மைகண் டனையமங் கையருண்
முனைய ளாகிய கத்துரு வினதைநேர் மொழியும். (ங)

எங்கை யொப்பரி யிப்பரி யினதிலாங் கூலம்
பொங்கு வான்மைகொ லின்றுகொல் புகல்கென வவடன்
றங்கை வான்மைய தென்னவத் தீமையின்மூத் தவடா
னங்கை நின்சொலெலாவ் வாமணி நிறத்தென நவின்றாள். (ச)

இன்ன வாறவர் மூரணுழி யெம்மிலார் தோற்று
ரன்னர் வென்றவர்க் கடிமையா குகவென வவண்சூள்
பன்னி னூரவர் தம்மிலக் கத்துரு பரந்து
துன்ன னந்தன்முற் பணிச்சிறூர்ப் பார்த்திது சொல்லும். (ரு)

வருக நம்பணி மருப்பணி மைந்தர்காள் வானப்
புரவி வானிற வானிறங் கரிதெனப் புரிதற்
குரிய தெவ்வழி யவ்வழி புரிகென வுரைத்தா
ளரவ மைந்தராங் கடாதென மறுத்தன ரவருள். (சு)

அனைமு னிந்துரை சாபவெம் மொழியினை யஞ்சுந்
தனைய னுயகார்க் கோடகன் றுயடி பணிந்து
முனிய லன்னைநின் கருததினை முடிப்பலென் றதன்வாற்
றுனைபு சென்றிறு குறத்தழீஇக் கரிதெனச் சூழ்ந்தான். (எ)

பின்னை முன்னையள் பின்னைநேர் பின்னைய ளுடனே
யன்ன வான்பரி யுலவுபா லாழியின் புறம்போந
தின்ன வாலதி யெங்கிறத் தெனத்தெரிந் திளையாள்
சொன்ன நீன்மைய தேயுனக் கடிமையான் றேகாய். (அ)

என்று கூறிமுன் னவள்பணி பணிகடா னியற்று
இன்ற நாளவ டனையன்வான் கிளர்சிறைக் கலுழன்
றன்ற னிப்புறத் தருணனுந் தன்முனைத் தாங்கி
யொன்று மெய்ம்மொழிக் கனைதையாம் வினதைபாங் குற்றான். (கூ)

உடன்பி றந்தவச் சத்துரு கத்துரு வுதுகண்
டடங்க லாச்செருக் ககங்கொளீஇ யிளையளை யழைத்தே
தடம்ப ணித்தலம் புகுதநம் முளத்தவாத் தழைத்த
தொடர்ந்துன் மைந்தனுஞ் சிறூர்ச்சுமந் தேகுறத் துனையா. (கo)

நம்மை நீசுமந் தேகுதி யென்னவன் னணமே
யம்ம பின்னவ டன்னிள மகற்பணித் தவளை
யிம்மெ னச்சுவன் மிசைச்சுமந் தரம்புகுந் திறுப்ப
வெம்மை மக்களோ டக்கொடி யவள்விரைந் திழிந்தாள். (கக)

ஆங்க ணிச்சையி னுலாவுறு மப்பணிச் சிறூர்தம்
பாங்க ழைத்தனர் கலுழனை நாமிவண் பலவா
யோங்கு தீவங்கள் காண்வி[illegible]ப் புற்றன மெமைநீ
தாங்கி யேகுதி நம்பணித் தாதிதன் றனைய. (கஉ)

என்ன வோதின ரப்பணி யிழிபுறா யெழுந்திக்
கன்ன பாகத்தைச் சுட்டிடப் பொறுமையக் கலுழ
னன்னை பாலுறீஇ யென்னையிவ் வறிவிலாப் பணிக
ணின்னை யீண்டுதந் தாதியென் றோதிய நிமித்தம். (கங)

உள்ள வாறருள் கென்றடி பணிந்துநின் றுரைப்பக்
கள்ள வாமதுப் பொழிமலர்க் கருங்குழற் கனதை
வள்ள வார்மணி மலைமுலை வழுக்கிலா மனதை
வெள்ள வான்மலர் மதிநிக மதிமுக வினதை. (கச)

அருமை மைந்தகே ளென்முறை ளெனைமுறை ளாகநேர்
திரிய வஞ்சகத் தடிமையாக் கொண்டவச செயலா
லுரிய மைந்தனுந் தாயுமா மிருவரு மொருவர்
புரிய லாவிழி தொழில்புரீஇப் புன்மையே பூண்டேம். (கரு)

என்ன வாய்மொழி தாய்மொழி கேட்டிகற் கலுழ
னன்னை முன்னையள் கத்துரு சத்துரு வாகி
நின்னை யேவல்கொள் கொடுமையா மடிமையி னீங்கற்
கென்னை செயதொழில் சொல்லுதி வல்லையென் றிசைத்தான். ()

தனையன் வாசகந் தனைவினாய்த் தனையிலா வுவகை
யினைய டைந்தனை மைந்தவப் பணிசிறு ரிடையென்
னனைய டைந்தவிவ் வடிமைநீங் கியநுமக் காற்றும்
வினையு ணாத்திராற் றுவலென வினவென விடுத்தாள். (கஎ)

அன்ன பன்னக மைந்தனை வினவின னவ்வா
றுன்னி யன்னரக் ககபதி முகமதித் துரைப்பா
ரின்ன லந்தரு வானமு தெமக்கிவ ணீதி
யென்னி னின்னனை யடிமையை நீக்குது மென்றார். (கஅ)

வியனு லாம்பொறைக் கனதையார் மனதையார் வினதை
வயநி லாவுசேய் வந்தவட் பணிந்தனாய் வானத்
தியலு மாரமு தங்கொணர் வான்வழி யிளைப்பின்
றுயவு ணாவிலொன் றுதவுதி யாலென வுரைத்தான். (ககூ)

ஊதவி னாளவற் குரைக்குமென் னும்பலே யும்பர்
பதவி நீபுக வாற்றுணா விழைவுறிற் படுநீ
ருததி வைகுநர் வேட்டுவ ருண்டிநீ யுணுங்காண்
மதர்கெ டுங்கண்வேட் டுவர்மினை வேட்டொரு மறையோன். (உ0)

ஆங்கு வைகுமா லவனொரீ யெடுத்துரை தைய
வோங்கு வான்புகுந் தமுதுகொண் டுறுதியிங் குறுதி
தேங்கு நின்சிறை மூன்றுறுப் பியாவையுஞ் சிறப்பப்
பாங்கு வாயுமுற் சுரர்புரந் தருள்கெனப் பகர்ந்தாள். (௨௧)

அன்னை பேசிய வாசிய னூர்கலி யணுகித்
துன்னு *சில்லரை யுண்டனன் கண்டமீச் சுடுதீ
யென்ன வேதியன் கனன்றிடக் கான்றன னெழுந்தம்
மன்னர் முன்னனென் பன்னியும் வருக்கருள் வள்ளால். (௨௨)

(வேறு).

என்னலுங் கிராத மாதை விகங்கவேந் தினிது கான்றிம்
மின்னெடிங் கிராது சேறி வேதிய வெனுவி டுத்துப்
பன்னுதன் றாதை காசி பன்னிடம் புகக்கண் டன்றே
னென்னிவட் சேறி மைந்த வென்னமுன் னிகழ்வி சைத்தான். ()

சொல்லுவான் மேலு மெந்தாய் சுடுபசிக் காற்று தாற்றி
னெல்லையில் சில்லர் பல்ல ரென்வயிற் றெல்லை யிட்டும்
வில்லழல் கொளுத்த நொந்து மெலிந்தனன் சிறைக ரிந்த
வொல்லைநல் லுணவொன் றைய வுதவென வுசவு தாதை. (௨௪)

பன்னுவான் விபாவ சுப்பேர்ப் பனவனு மிளவ லான
வுன்னுசுப் பிரதீ கன்று னும்பொருள் குறித்துப் பூச
லுன்னிய விளைத்துத் தம்மிற் சொற்றனர் சாப மற்றுன்
முன்னவன் கமட மானான் முரணிப மானான் பின்னோன். (௨௫)

புகலுமிக் கமடம் வேழம் பூருவ வயிரந் தீரா
திசலியித் தடத்தி னுற்ற விக்கரி யுச்ச மாறு
தருமுடற் பரூஉ வி ரட்டி யோசனை சாற்றுங் கூர்மத்
தகலமோர் பத்தா முச்சத் தளவையோ சனைமூன் றமால். (௨௬)

எகியிங் கிவற்றை யுண்டாங் கெரியழற் பசிதீர்ந் தப்பாற்
போகிநீ போகில் வேந்த போகியூ ரமரி கொண்டு
வேகியாய் மீளு கென்றான் விரைந்தவண் விகங்க ராசன்
றாகியா யவ்வி ரண்டுந் தாளுகி ரிடையே கவ்வி. (௨௭)

விசைகொடு கிளம்பி நூறி யோசனை மேக்கு யர்ந்த
பசையுறோ கிணிநா மத்தொண் பாதவ விடபத் துற்று
னசையுமக் கோட ரந்தா ழ்ற்றொரு திறவப் போதத்
திசைகொண்மா தவத்திண் வாலகில்லிய விருடி கூட்டம். (௨௮)

---

* சில்லர் - வேடர்.

வாவலி னப்பணைக்கண் மன்னுபு தூங்கக் கண்டா
ளுவிவர் வீழ்வர் கிழெழன் றகநெக் குற்றக் கோடு
மேவுற வுடன்ற ழீஇவிண் மீச்செலக் காசி பன்கண்
டோவிலில் விடப மெல்ல வுத்*தரத் தமைய வைத்தி. (௨௯)

ஐயநீ யென்று னவ்வா றுத்தரத் தினிது வைத்து
மையிகல் வேழ மாவுங் கமடமோ தசுமும் வாய்ப்பெய்
தொய்யென வவணை மேலவ் வுவணவேந் தறுங்கா லன்ன
தெய்வநாட் டெற்பா தங்க டிகழமுன் கண்டான் வேந்தன். (௩௰)

அச்சமிக் கண்ணு மெலனனீ தவப்பல காட்டுற் பாத
நிச்சயித் தருள்கென் றுசா னோர்பணிந் தியம்ப வன்னோன்
முச்சகம் பரவு வேத முந்துகா சிபன்று ஞற்று
மெச்சநற் பண்டங் கொண்டாங் கெய்திய வேவச் சென்றார். (௩௧)

வாலகில் லியர்க ளங்கைப் பெருவிரன் மானு மெய்யர்
சாலமன் சுமைசி ரத்திற் றுங்குபு சரிசெல் காலான்
காலுறுங் குரநீர் மூழ்கு காத்திரர் கரையே றிச்செல்
வேலைநீ யசித்தல் கண்டார் விழியெரி சுதுவ னோக்கி. (௩௨)

இவற்கொரு விரோதி தோன்று கென்றவி சொரிந்து நோற்றார்
சிவத்தவர் கறுப்ப நீசெய் தீமையாற் காசி பன்பாற்
றவப்பெருங் குமரன் போந்தான் றன்சிறை யிரண்டி லொன்றாற்
புவிப்பரப் படங்க மூடும் புள்ளர சனைய மைந்தன். (௩௩)

அமரிகொண் டேக விங்ங னணையுமவ் விகங்க நாத
னிமிருமுற் பாத மிற்று னிகழ்ந்தவென் றுரைப்ப வேந்தன்
கமையொலி யழலோ ஞதிக் கடவுளர்க் கூவிக் காமி
னமதுல கமுது புள்ளி ஞதன்வேட் டுறுதிங் கென்றான். (௩௪)

அதுவினு யமரர் யாரு மமர்விழை யணிகளுஞ் சூழ
முதுகய வரவு நீப்பான் முயலுபு முயல்சூழ்ந் தாங்குக்
கதுமெனச் சுதையைச் சூழ்ந்து காத்தனர் வருப தங்க
பதிமுதிர் வரைகள் சாயப்† பங்கனே பலத்தின் வீழ. (௩௫)

---

* தரம் - மலை.

† பம் - விண்மீன்.

அண்டமுங் கிடுகி டென்ன வரிப்பிர ளயமே யென்ன
மண்டொலிச் சிறக ரீற்றின் வளரொலி கிளர வீசிக்
கொண்டிறல் கண்டா ரண்டர் கூறுமாத் திரையொன் றப்போர்க்
கண்டக ரத்திற் கூடக் கைகுலைத் தோடி யெய்த்தார். (கசு)

நின்றவர் சிலரந் தோவெந் நீள்விழி முகிழ்ப்பி லாவூழ்
நன்றல முகிழ்க்கு மேலிந் நடுவற்கு நடுங்கா துள்ள
மென்றினி யோடினலு மிவன்விடா னென்று நின்றார்
வென்றியி னமர்வா ரென்ன வெரிமுனும் விபுத ராங்கே. (கஎ)

ஆற்றல்சால் சகுன வேந்த னவர்க்கப சகுன மென்ன
வேற்றனன் செஞ்ச ரந்தாம் பஞ்சர மெனவி லேகர்
தூற்றின ரவைதன் பக்கத் துணையினு லுக்க பின்னர்ச்
சீற்றமேல் கொடுப தங்கச் செம்மறன் சிறகர் வீசி. (கஅ)

வலனுறக் குவிப்ப வோர்கான் மாதிரத் தளவும் போத
னலிவுற வருதல் பல்கா னண்ணின ரமர ரப்போர்த்
தலையெழுத் திரித லன்னோர் தலையெழுத் தாக வப்போ
தல்குள துண்ட மொன்று லிலாத் துண்டஞ் செய்தான். (கக)

உம்பர்சூ ழுப்ப ரெல்லா மொழிதலு மங்கி நாணல்
வெம்புளந் துரப்பத் தாண்டி வெம்படை யேற்பப் புள்வேந்
தெம்பர்மா நதிக டங்கள் யாவுமுண் டுமிழ்ந்தா னங்கி
யம்பர்மெய் கரிந்கி ருந்தை யாய்ச்செய லற்று நின்றான். (சo)

துணிவினே ரிமையில் வென்று னிமையிலவ் விமையோர்தோற்றார்
கணிதரு மிதற்கு நானே கரியென்பான் போற்க ரிந்து
பிணிமுகத் திறையால் வன்னி பிணிமுக ஞய பின்னர்த்
தணிவிலா ரமுத மன்னுந் தகுமிடம் புகுங்கா லாங்கே. (சக)

பன்னக நாக ளங்கி படிவிடங் காரி ருப்பா
லன்னவா ரமுதைச் சூழு மரணங்க டிரண மாகத்
தன்னல காற்று ணித்துத் தனியுட லொடுக்கித் தீகான்
றென்னலர்த் திசைத கிக்கு நேமிகண் டுண்ணு ழைந்தான். (சஉ)

தருப்பைசூ ழமுத பூரி தக்கன கடங்கைக் கொண்டு
பொருப்புவேர் பறியச் செல்காற் போந்துமா தவனே ரண்ணல்
விருப்பமீக் கூர்ந்தா மீண்டுன் விறலெறீஇ வேண்டிற் றென்கொ
லொருப்பட வளித்து மிற்றென் றுரைத்தியா னுவண னென்றான்.

மாதவநீ நமைச்சுமக்கும் வரந்தருகென் றதுபெற்றச்
சீதரனை நினக்களித்துஞ் செப்புதிநின் வேட்கையென
வோதினனக் ககபதிமா லுதுகேட்டாங் கூர்தியெனக்
காதியென வழுதிதுசென் றளித்தபின ராதுமென. (சச)

தருவரமால் கொண்டிறப்பொற் றருவரமால் வெருவரநெஞ்
சருவரவா னமுதிழத்தற் காற்றுமைத் துணிந்தொருவா
றொருவரும்போர் நனிபுரிந்தங் கொருவகையு முய்வின்றி
வருவயிரப் படையாவி வாங்குகென வெறிந்தார்த்தான். (சரு)

வருகுலிசந் தெரிகலுழன் மகபதிநீ தகைவதிகன்
மருவுநின துயிர்க்குலிசம் வறிதாறன் மாண் பன்றெனது
பொருசிறையி னொன்றொன்று தருதுமெனப் புகன்றுதிர்த்தான்
பெருகொளியெண்டிசைபரம்பப் பிறங்கியதா லிறகாங்கே. (சசு)

ஊழ்த்தவிற கொளிப்பெருமை யுள்ளபடி யுணர்ந்தெவரும்
வாழ்த்தினராற் சுபன்னனென யகபதியக் ககபதியைப்
போழ்த்தவல கிலகுபடைப் புள்ளரசே சொள்ளமுதங்
காழ்த்தமனத் தினர்க்களிப்பக் கைக்கொடுசெல் கின்றனையால். ()

அன்னவருண் டமையடர்ப்பா னதிகரித்தா லுனக்கந்தோ
வென்னவருஞ் சுதையிதையிங் கீதியென விரந்துரைத்தான்
பன்னவருந் திறற்கழலுன் பரிந்துரைக்கும் புரந்தரனே
நின்னவருத் தந்தனைத்தி நிரையமுத கடமிதனை. (சஅ)

யாயடிமைத் தொழிலொழிய யான்கொடுபோய் வைக்குமிடத்
தேயுடனீ கோடியென விசைந்தரியி னசைந்துவரப்
பாயவகன் காயநெறி படர்புதிற லடல்வயின
தேயன்மகி தலமுடுத்த தென்கடன்மீச் செல்கின்றான். (சகூ)

அப்பெரிய திறற்கலுழ னகல்வானத் துறுகாலை
யொப்பருமந் திரநாத னுலவுதிரு வருள்பொழித
லிப்பரிசே யெனவுணர்த்த விருசிறைக்கால் விரைசெலவாற்
றுப்புறுமக் கடத்தமுதத் துளிசிதறி நிலம்வீழ்ந்த. (ருo)

அத்திவலைக் குலவிரிவீழ்ந் தமரிடமுக் குரோசமதா
மெத்திவலை யம்பெறுமவ் வியலிடந்தான் கீட்டிசையி
னத்திவலை யொத்தமுலை நகமகள்பா கன்றொண்டர்
பத்திவலைப் படுபரமன் பயிலுமிடம் பாவனமே. (ருக)

ஆதியருள் கடிக்குளம்வே தாரணிய மமர்ந்திலங்க
வீதிகோத் திரகருப மிசைக்கோடிக் குழகர்தளி
யோதகத்தி யான்பள்ளி யுற்றிலங்க யாமினிய
மாதிரத்திற் றரளநகர் மறிதிரைவா ரிதிதிகழ. (௫௨)

வருநிருதி யம்பரத்தின் மறைபரவுந் தனிச்சேதுத்
திருவிராமேசதலந் திகழ்தரப்பச் சிமவுலகி
லருள்பொழியுங் கொடுங்குன்ற மமர்ந்திலங்க வரியரிதம்
பரிதிரிய மம்பூவ னூர்பயிலக் குபேரதிசை. (௫௩)

பன்னரியபொன்னிநதி பாதாளீச் சுரந்திகழ
மன்னுதிற லீசான வம்பலிடைச் சிற்றேமந்
தன்னிகர்சீ தளகந்த தரபாரி சாதவன
மென்னவளர் திருக்களரென் றியம்புதல மினிதிலங்க. (௫௪)

முத்திதரு திருவருட்பா மொழிதலமிவ் வெண்டிசைசூழ்
மத்தியநா யகமாகி வயங்கருண்மா தலமாமா
லத்தனரு ளனவானின் றுங்குபரம் புறவீழ்ந்த
புத்தமுதத் துளிநின்றும் பொலிசூத முளைத்தெழுந்த. (௫௫)

வாகீசத் திருவடிகள் வாய்மலர்ந்த தமிழ்ச்சுருதி
மீகாண விச்சின்றி நாறுசெய்வா னெனவிதந்த
மாகாசின் மொழிப்பயனோர் வயக்கியவெம் பிரானருளா
லேகாணத் தோற்றினன்கொ லெனவெழுந்த சூதநிரை. (௫௬)

அண்ணலுயிர்க் களிப்பதரு ளனுவெனினு மகண்டமதா
யெண்ணரும்பல் பயனளித்தாங் கிணையிரிய விரிந்திடல்போற்
றண்ணமுதச் சிறுதுளியிற் றழைத்தெழுமாம் பிரநிகரம்
விண்ணரித முற்றளந்து விரிந்தபலன் புரிந்தபல. (௫௭)

எண்ணியவா கலுழனடந் தின்சுதைப்பொற் கடநாகர்
தண்ணெதிர்வைத் தனையடிமை கடிந்தளித்த கடனளித்தான்
விண்ணவர்கோ னன்னவன்சொல் விரகினு லக்கடங்கொண்
டெண்ணிறையு மகிழ்சிறப்ப வுவணபுருந் தினிதமர்ந்தான். (௫௮)

அணுவுதவி செயினுமலை யளவுதவி யவர்க்கருணற்
குணநிதிகள் செயல்காட்டுங் குளிரமுதத் துளியுதவிக்
கிணையிறல மிதுதிரட்டி யின்னமுதம் பருக்களித்தாங்
கணையுநிறை மதிநிகரத் தணிதருசே காநிகரம். (௫௯)

நமதமுதத் துளிபரந்த நறுந்தலமந் திரநாதர்
தமதருளிங் கெளிதெமக்குச் சார்மெனவந் துடற்கண்ணர்
கமமுறல்போன்ம் விரவுசுவா கதமாதி பாதிநுகர்ந்
திமைதருபல் வடுக்கணிறை யிரதமகீ ருகநிகரம். (சுo)

வித்தின்றி முளைத்தெழுந்த வீறுபிர தாபநிறைந்
தெத்திசையும் பரந்ததெனு விளந்தளிர்கான் றெருழிர்மாழை
யத்தனலோர் திமமூக்கி யலவன்மறை யோதிமமே
யொத்தவடிக் குடாவடி *விண் ஞேச்சுமடிக் கடாக்கிடியே. (சுக)

திசைக்கரிய முகக்கவளத் திரள்கொடுக்கும் பாகமென
விசைக்கரிய சுவைக்கனிதூங் கிருஞ்சாகை திகையுரிஞ்சு
மிசைக்கரியன் சூதன்மைமுனம் விரவுகுளிர் நிழல்பரப்பு
நசைக்கரிய முசுக்கலைபன் னலனுகர்தே மாந்துருமம. (சுஉ)

சேதார முகந்தெறிபஃ றிரைத்தடநீர் பருகுபல
சேதார முகந்துதிர்பஃ றீங்கனியா தியநுகர்வ
சேதார முகமுடிவுஞ் சேராத தீர்க்காயுட்
சேதார முகந்துறுமிச் சீர்த்தருமஞ் செப்பரிதால். (சுங)

புன்னைநற வங்கதுபம் பூகமிலாங் கலிகுடசம்
முன்னைவழை வில்வம்விளா முண்டகமா ரஞ்செருந்தி
வன்னிகளா விதழிபலா வகுளநாந தஞ்சரளம்
பன்னிலகு சங்கோங்கு பாடலமுன் னீட்லவண். (சுச)

மாதவிதண் மௌவன்மன மாலதிக மாலதிகள்
போதவிர்வண் சாதிமணம் பொலிமயிலை சண்பகமே
யாதியபைந் தாதவிழு மல்லிமலர் வல்லியெலாம்
பாதவமீப் பிரிவின்றிப் படர்ந்தொளிரு மடந்தையர்போல். (சுரு)

குதுகுலகோ கிலங்காளங் குயிற்றமிரு தங்கமரி
மதுகரம்யா ழிசைப்பமுசு மலர்கரதா ளம்மசைப்பச்
சதிமுறைமை வழாமையயற் றடமஞ்ஞை நடம்புரிய
முதுகனிப்பொற் றிரளையருண் முதவமுத சேகரங்கள். (சுசு)

மாதவர்கை யிளநறும்புன் மடிநுகரு மானிளங்கன்
றோதுடச மலகிடவெ வழுவைநிரை வாலதியாற்
போதகநீர் தெளிப்பவரி பூக்கொய்பணி தருஞ்சரபர்
தீதிலிணைச் சிறைச்சிவிறித் திருத்தொண்டு செயுமாங்கே. (சுஎ)

* விண்ஞேச்சுமடிக் கடாக்கிடி விஷ்ணுவாகிய கிகரிவா வராகம்.

கிளையமர்பைங் கிளைபுணர்தன் கிளைநுகரக் கிளைவானின்
விளைமலர்தூய் விளைதருவின் விரைக்கனிகொ ணுத்தரவஃ
துளைவெறிந்துள் ளுளைவுறவேம் புணக்கொடுத்தாங் கூடன்மிகு
மளையினுமிக் களைதருமா விலைச்சுவையு மிலையதனால். (௬௮)

வேறு.

இன்னதனிச் சூதநிரை யின்சுவையா ரமுதமய மீதுமநத் ரேசன்
றன்னருளா தலின்வானந் தருமமுதி னுடற்குறுதி தருதலன்றி
மன்னுமுயிர்க் குறுதியையும் வளர்ப்பதெனு முளப்பொலிவு மருவுவாஞ்சை
துன்னுதபோ தனர்மலத்தின் றொகைமுனியுந் தகைமுனிவர் சூழ்ந்தாரங்
[கே. (௬௯)

காசிபர்மார்க் கண்டர்கௌ தமர்பிருகு கடயோனி கர்க்க ரேவி
யாசர்சுக ரத்திரிகுற் சகர்புலகர் யஞ்ஞபா லகர்பா ரத்து
வாசர்சனற் றனர்சனகர் வருணர்சனந் தனர்சத்தி வாம தேவர்
கோசிகர்ப ராசரர்க கோளர்புலத் தியர்வசிட்டர் குற்ச ராதி. (௭௦)

சிவமுணர்மா தவமுனிவர் திருவமுத சூதவனந் திகழச் சேர்ந்தே
யுவமனிலா வுவகையரா யொருபோது மொருவாத வுளத்த ராகி
யவனுறைபல் லாச்சிரம மாமுடச மாக்கியினி தமர்ந்தா ரந்தத்
திவியமுனி சிகாமணிகள் சீலகுணச் சிறப்பெவர்வாய் திறக்க வல்லார். (௭௧)

அன்னவர்தா முன்னமர்சீ ரநுட்கைலை மந்தரமே ருவைமுன் னுய
வென்னசிவ தலங்களினு மிலகுசிவ தீர்த்தமெலா மிவண்வந் தென்று
மன்னுகவென் றுன்னினரா மாண்புணர்ந்தாங் கனைத்துலகும் வயங்கு மந்
தப், பன்னரிய தீர்த்தமெலாம் படர்ந்தவண்பஃ றடங்களெனப் பரப்பி
[னின்ற. (௭௨)

களியளியுண் டெட்டெடுப்பக் கமழ்பிரசப் பெருவெள்ளங் கான்று நாளும்
வளர்கமலத் துணைகுமுத மலர்த்துணைகு வளைத்துணைசை வலத்தை யுள்
ளிட், ளெபொருள்கட் குறையுளென வொளிர்தருமவ் வுயர்தடங்க ளுலவா
தென்றும், பளகறவிப் படியிலெவர் படியினுஞ்சூழ் பாவமறப் பல்க ணல்
[கும். (௭௩)

மாதர்வன சம்மனையின் மராளமணம் புரியவன மலிவெண் சங்க
நாதமிசைப் பனகுமுத நற்சுடரேந் துவகீத நறுந்தேன் பாடும்
சீதமா கதக்கலசித் திலநீராஞ் சனந்துளிகள் செறியு மம்பு
சாததமா லம்வலைப்பத் தக்கமுர சொலிப்பனபோ தகங்க ளாங்கே. (௭௪)

வானோகள்*வான் றவரெனவவ் வாவியினும் வாவியெழில் வளர்சூ தத்தின்
றுளதிர மோதுதலுந் தருஞ்சுவைமாண் கனிகள்பல தருவ தாமே
கோளுறுநெஞ் சினர்தீமை குயிற்றிடினும் •பொறுத்ததனைக்குணமாக் கொ
ண்டு, மீளவுநற் பலனுடனே மிக்களிக்குந் தக்கவர்செய் மேன்மை காட்டும்.

வாவிதட மாநிரைசெவ் வனசநிரை மீதயல்வெண் மலர்தண் பூகந்
தூவியதம் மடைநுதியாற் சுரும்பாற்றக் கனிகனிதேன் றூவா நிற்றன்
மேவியவம் முனிவரர்நூல் விதிமநுவோ டொண்பொரிதூய் விளங்கு செம்
பொற், றுவிரிவட் டகைநறுநெய் தகச்சொரிந்தா குதிசெய்மகத் தகுதி காட்
[டும். (எசு)

இத்தகைய பற்பலமா ணெழிற்றடங்க ளிடையுலக மெனைத்து முள்ள
வுத்தமமா தீர்த்தமெலா முவந்தினிய பாவனமா யுற்றெறஞ் ஞான்றுஞ்
சித்திபுத்தி பத்திமுத்திச் சிறப்பெவையு மொருங்கருளுந் திறத்தி னாலு
மெய்த்தகைய புண்ணியமா விருக்கமெலாம் பெருக்கநிலாம் வியப்பி னாலும்.

திருவமுத சூதவனத் திருநாமத் தொருவாத சிறப்பி னாலுந்
தெருளமுத மீட்டியருட் டெள்ளமுத மூட்டிவளர் சிவப்பே றாய
பொருளமுத சிவானந்த போகமடுத் தடுத்தவர்க்கோர் புறத்தின் வெற்பின்
வருபெரிய நாயகிசேர் மந்திரநா யகனருளு மாண்பி னாலும். (எஅ)

கத்துதிரைக் கடலாடைக் காசினியிற் கண்ணுதலோன் கலந்து வாழு
முத்தமமா தலமெவற்று முத்தமமோத் தமதரமென் றலகு போற்று
நித்தியமா தலமிதுவே நிசஞ்சொன்னேன் முகமனென நினையே லென்று
வத்தகைய திருநந்தி யடிகள்சனற் குமரமுனிக் கருளி மேலும். (எகூ)

இவ்வருமை பெருமைதிக ழிருங்காதை யதிகுய்ய மேனோர் தம்பா
லெவ்வகைய வேதுவினு மியம்பேலன் பொழியாத விதய சீல
மெய்வருபக் குவம்பழுத்த வித்தகசங் கமங்களுக்கே விளம்பு கென்று
தெவ்வடுவேற்பணிகொண்டசெவ்வேளிங்கெனக்கருளிச்செய்தான்மன்னோ.

நனித்துணர்வித் தகநினக்கு நுவல்வானேன் விரித்திதென நுதற்க ணந்தி
யினித்ததிரு மான்மியமீ திசைத்தனைகேட் டளவாத வின்புற் றேனைப்
பணித்தவள மதிவேணிப் பரனருள்பெற் றுய்ந்தவர்சீர்ப் பண்பி னோடித்
தனித்தவன மாண்பினுக்கே தனித்தவன முளனின்னுஞ் சாற்றுகென்றாய்.

என்றுசனற் குமரமுனி யெழுந்திறைஞ்சி நின்றனென் றிசைத்த சூ-
வென்றிபுனை மாதவனை விரைக்கமலத் தாள்பணிந்து மேலு மெந்தா
யன்றருணந் தீசனவற் கருளியவா றெமக்கின்னு மருளு கென்று
நன்றுணர்ச்சி யுனகாதி நற்றவர்போற் றியசூத னவில்வான் மன்னோ. ([illegible])

* வான்றவர் - வானவில்.

வேறு.

ஓது சவுனக ராதி முனிவர ரோகை நனிபெற மூதுணர்
சூத முனிமுன மோதி யருளின சூத வனசிப மான்மிய
மீது கனிமன மாத ரவின்மிக யாவர் வினவின ரோதினா
மேத கவர்புவி வாழ்வு முழுவது மேவி யுறுவரொர் வீடரோ. (அரு)

சூதவனநாமகாரணச் சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருசசு.

---

# ஆதிசேடனுபதேசம் பெற்ற சருக்கம்.

தேமிகு மாமனு நாயகன் மேவிய சிவமாதல
மாமிர கானன மாசிப மோதின மகிநாயக
னேமுப தேசமு னேபெற வீதென ரசிதாசல
நாமிகு காவல ஞானசி காமணி நவில்வானரோ. (க)

வேறு.

இந்திரை இந்தி ராணி யீரிரு கோட்டு வால
சிந்துர நினைத்தாங் கீயுஞ் செம்மணி காம தேனு
முந்துமைந் தருககள் வான முதமுதற் பொருளெல் லாம
மைந்தவா கரமாங் கீர சாகரம் வழுததற் பாற்றே. (உ)

தொக்கமு துண்ம தித்தார் மதித்தடி தொழாமைக் காவி
நக்கமுன் னலங் காட்டி நயந்தடி பணிந்த பின்றைத்
தக்கபே ரமுத மீந்து தண்ணருள் புரிந்த நீரா
விக்கட லிபமு கத்தெ மிறைதிரு வருட்செங் கோலே. (ங)

இத்திருப் பாற்க டற்க ணிடைமணித் தீவ மொன்று
புத்திதழ்த் தவள மாவம் புயப்பொகுட் டெனத்து லங்கு
மெய்த்தகத் தீவி னிற்சு வேதமா புரம்பொ குட்டின்
மத்தகத் தமர்வெள் ளோதி மத்தொழில் காட்டு மாதோ. (ச)

வழுத்துறு மச்சு வேத மாபுரச் செம்பொற் கோயின்
முழுத்தவம் மாாள வேந்து முதுகம ரம்பொன் மேனி
பழுத்தகுப் பயினுல் வேதப் பண்ணவ னென்ன மேவும்
விழுத்தகு மனைய செம்பொன் வியன்மணிக் கோயி னுப்பண். (ரு)

உருவளர் தவள மேனி யுரகவேந் துடல்வ ளைத்து
மருவுமெல் லணையவ் வேதன் வயங்குவெண் ணீறு பூத்த
திருமுக மதிய மென்னத் திகழுமா லிதன்பா லன்றே
னிருவிழி மணியின் சோதி யெழுந்தொருங் கிலங்கு மாபோல். (சு)

மாலிசை மாலின் மேனி மாலினி தமரு மாலிக்
காலயில் கால கல்பூங் காலொளிப் பரியங் கத்தின்
மேலறி துயில்கொள் வேலை விண்ணுயர் மைநா கத்தின்
பாலொரு பால பானுப் பான்மையிற் படர்ந்து பல்கி. (எ)

மின்றௌி யுலகம் போர்ப்ப மிளிர்மணிச் செம்பொன் மோலி
சென்னிசேர்ந் திலங்க நீற்றுத் திருநுதல் பரிதி யோடு
துன்னுவெண் பிறையை மானத் தூமணி குண்டல ங்கள்
மன்னுமவ் வென்றா ழின்பால் வருமிரு குழவி மான. (அ)

இருவிழி யப்ப தங்க னெதிரரு ணறவெஞ் ஞான்றும்
பெருகுசெங் கமல மானப் பிறைமுன மலர்செவ் வாம்பல்
பொருவிய திருவா யென்றும் பொலிந்திரு மதகிற் பாய்ந்துங்
கருணைநீ ரணுவுங் குன்றாக் கவின்றிரு வதனங் காட்ட. (கூ)

மைம்மலைக் கிளைத்த நான்கு மாமணிச் சிகரமென்ன
விம்முதிண் டோளி லங்க வெங்கதிர் தன்கி ழத்தி .
யம்முலை மணந்தாங் கோர்கை யரத்தவெம் பரிதி தோன்றச்
செம்மறை மராளத் தாங்கோர் செங்கையிற் சங்கி லங்க. (கo)

வாதநல் லபயம் வாம வலத்திரு வண்கை காட்ட
வரதந முதல மைந்த வங்கத கங்க ணுதி
யுரதந வைசயந்தி யுயர்மணி யார மாதி
சரதந வொளியெங் கெங்குந் தனித்தனி கான்றி மைப்ப. (கக)

கவினிறை மணிவேந் தாருங் கவுத்துவ மணிமா தீப
மவிர்தர வனவ னத்தண் ணணிநிழல் பரப்பு மார்பாங்
கிவியவா தனத்தி னீல மணிமிசைச் செம்பொன் சேர்த்தாங்
குவமனே யுலகெ லாந்தேற் றொருபெருந் திருவி ளங்க. (கஉ)

மறுவெனப் படுவ யாவும் வர்ச்சித மெவர்க ளாலு
முறுமிடத் துயர்வா லன்றே வுலகெலா முணர்ச்சி மேன்மை
பெறுபெருங் கவிக ளெல்லாம் பேணுமா பெறுமி தென்னத்
துறுமெழின் மறுவொன் றம்ம தூயவம் மார்பி லங்க. (கங)

உலகெலா மரபி னோங்க வுற்பவிப் பிக்கு மூல
குலமகப் பசும்பொன் றேசு கூர்மல ருந்தி யோடு
தலமெலாம் போற்று தாமோ தரபதப் பொருளின் வாய்மை
மலர்வட தளிர்மே லாந்தன் மல்கெழி லுதரங் காட்ட. (கச)

மாற்றுயர் சுவண நாக மருங்கொளிர் தரசெங் கேழ்ப்பன்
னூற்றிதழ்க் கமல நீரி னூற்றிதற் கொப்பான் பன்னாட்
சேற்றிரீஇப் பங்கத் தேர்ந்தோர் சிவபுண்ணிய வுலகமெல்லாம்
போற்றிய லெழின்மென் பாதப் போதருட் டேன்ற தும்ப. (கரு)

பரிபுர மாதி யய்பொற் பன்மணிப் பணிய ணிந்தார்க்
கருள்செயல் பன்முன் கூறி யழைத்தென வொலிப்ப நீலத்
திருவுரு நிறனு மேற்கொ டிருவெண்ணீற் றொளியுந் தன்னை
மருவியற் குணனுங் காப்பின் வளை வளை குணனுங் காட்ட. (கசு)

கடிமல ராசா ரத்தின் கதிரொளி படைப்புந் தானே
கடிமலர் மகற்கொண் டாற்றல் காட்டிரா சதம்வி ளக்க
கடிமலத் தவர்பல் லோர்முன் கண்ணருள் விழைந்து போற்றக்
* கடிமல விகங்க ராசன் கைகுவித் தெதிர்நின் றேத்த. (கஎ)

தேனல ரம்பு சாதசு செம்மல ரயன்மா லாதி
வானவர் சென்னி தாழ்த்த மாதவர் சூழ்ந்து வாழ்த்த
வானவர் பன்னி மாராங் காங்குபல் லாண்டு கூறக்
கானவர் நைவ ளத்தின் கைவளத் திசைக ளேற. (கஅ)

இன்னிய முள்ள வெல்லா மெழுந்திசை யெடுப்ப விண்ணிற்
கன்னியர் மரபி னாட்க் கதைவசி சார்ங்க மாதி
பன்னியற் படைக்க லம்பற் பலகுழீஇப் பணியி னிற்பக்
கொன்னியற் சேனைக் கோன்பொற் கோல்கொடு நெருக்கொதுக்க.

மாமறைத் துழனி மல்க மற்றுள கலைகள் பக்க
தேமலர்க் குழற்பூ தேவி தேற்றெழி னீளா தேவி
மாமலர்ப் பூமப தங்கள் வருடியாங் கிருபா லோகை
யாமல ருததி சூழ்க வமர்ந்தரு டிருவோ லக்கம். (உ0)

* கடி - விரைவு. மல - வளப்பமுடைய.

### வேறு.

தன்னுளங் கவர்ந்து கண்ணிறை காட்சித் தக்கபே ருவகைநேர் தரக்கண்
டென்னுடை நாதா விருஞ்செகந் நாதா விந்திரை வந்தித நாதா
மன்னரு ணிதியே வைகுண்ட பதியே மாசிலார் பெறுபெருங் கதியே
யின்னருட் டிதியே யியற்றுதண் மதியே யாவையு முணர்ந்தமா நுதியே. ()

என்றினி தனந்த னனந்தமாண் டுதிக ளிசைத்தினி தெந்தையே யென்றும்
பொன்றுரு நித்தி யானந்த [redacted]போக[redacted]ம் புரிவதாய் விரிவதாய்ப் போத
நன்றிலாச சனன சாகரங் கடத்து நலத்ததாய வலத்தவே தாந்த
முன்றிகழ் சகலா கமங்கள்சம் மதமாய் மொழியுமெய் வழியினை முறையே.

அறிவிலாச சிறியேற் கருள்கென விரப்ப வன்னது தனெனிரு செவியேற்
றிறைவனு மனைய முகுந்தநா யகன்போ கீசசற் குணநிதே யிதுகேண்
முறையினின் விளைவுக் கிறையென வருளு மூற்றுணர் பராபர முதலாய்
நிறைசமு சார வுததிதா ரகமாய் நித்தியா னந்தசின் மலமாய. (௨௩)

ஆதிமத் தியாந்த ரகிதமா யனுதி யாயநுரு விகற்பமா யளவாச
சோதியாயச சமயா தீதமாய்ச் சிவதத துவமுப சாந்தமுன் னுய
நீதியாய வேத முடிவினிற் பிரம நேயமாய நிறைசதா சிவத்தை
யோதியா னுள்ள படியுணர்ந் துபாசித் துறுநிலை பெறுமவ ரெவரோ. (௨௪)

அவர்கணீ வினவு ரகசிய நெறிமுற் றறிவர் சறிந்திலா ரெவர்மற்
றவரொரு சிறிது மன்பிலார் நரரு ளதமரா நவகளே யாவா
தவமிகு மனந்த வாதலா லனைய சதாசிவ மூர்த்திபூ சனையே
தவநின வேட்கை தருமலால் வேறு சாதன மிலையிது சரதம். (௨௫)

யாவரே தீரத் துவம்பெறீஇ யோரைந் திந்திய *புபுட்சுக்க ளாகா
தோவியே நிராசை யொடுபயன் கருதா துத்தம பத்திபெற் றுய்வோ
ராவரே யரிய முமூட்சுக்க ளென்றுங் கருமறை பெருமுறை யறையும்
வாவுறும் விடய நுகர்சசிமுன் னுவ மாற்றுதற் கசத்தரே லவர்தாம். (௨௬)

விதிவழி வழாமன் மதிநதி வேணி விமலனை யமலமா விழைவாற்
றுதிவழி பாட்டிற் பதிமன மாட்டித் துரிசறப் பூசித்த லதுவே
கதிவழி யாமா லிதுதுணிந் தென்றுங் கைவிடா துய்வுறக் காணூஉ
மதிவழி யுடலுள் ளளவிரு வினையின் வருபய னொருவற நுகர்ந்து. (௨௭)

---

* புபுட்சுக்கள் - புசிக்கும் இச்சையுடையார்.

கியதிசெய் பூசோ பாசஞ் பெலத்தா னிமலமெய்ஞ் ஞானமுன் னிகழு
மயர்விலா வாய்மை மலர்சிவ ஞான வலியினுன் மருவுதே காந்தத்
தயர்விலா தென்று மழிவிலா தமரு மத்துவி தானந்த போக
நயனிறை மோக்க நண்ணுப திண்ண நன்குண ரங்கத நாத. (உஅ)

ஆதலாற் சமுசா ரோததி கடந்தே யருளினு னித்தியா னந்த
போதவீ டுறுதற் கேதுவச சிவனைப் புகமொரீஇ நலமரீஇப் புனித
பாதமெய்ச சிவஞா னம்பெறீஇ யுள்ள மழியுணர்ந் திரண்டறப் பயிற்று
மோதபூ சனையே யன்றிவே றிலையான் முடிபெனை றுணரகி முதல்வ. (நக)

செப்பியாங் கனைய தக்துவ முணாந்து சிவததுவம் பெறற்கிடை யூறு
மொப்பரும் பசுத்து வமுயி ரெவற்று மொழிவுறு வழிவிரிந் துளதா
லப்பசுத் துவந்தா னெததவச தாலு மிரிந்திடா திர்சதிடு மிவனே
யப்பர மோக்க விருப்பனிட் களங்க னகமிலா னெனுமறை யநதம். (ந௦)

வேறு

இத்தகைய பசுததுவத்தை யிரிப்பதுதான் பாசுபத தீக்கை யேயா
முத்தமமா மிதுவிரசா வோமமுட னிகழ்வுறச்செ யுண்மைத் தாமாற்
பத்திமையால் விரதநெறி பன்னிருநா ணியமமுறப் பயிற்றல் வேண்டும்
வித்தகவம் மகதீக்கை விதியினைநா முள்ளபடி விளம்பக் கேணீ. (நக)

இன்னவிர சாமகத்துக் கிடுஞ்சமித்துக் கோமயமன் னிதுகொள் காலம்
பன்னுமுவா விருநான்கு பதினுன்கா தினநான்கு பரம மிந்த
மன்னுதினத் தீன்றணிமை வருபிணியீ னுக்கன்னி மலடு மூப்பே
யுன்னுறுகன் றிறப்புமல முண்பதிவை யுறுக்ரைநன் குணாந்துசார்ந்து. (நஉ)

அனையநறுங் கோமயத்தை யவிகருங்காற் பின்மபைசெல் லடையிற் சாத
மனுநவிலபேற் றம்மயமேல் வழும்பகற்றிக் கோசலமவா மசதாற் பெய்து
பினைநவிலு மகோரததாற் பிசைந்துருட்டி யுலர்ததிமுனம் பேணிக் கொண்
டே, முனர்விலோ மநதொடங்கன் முறையாகு மம்முறைமேன் மொழியக்
[கேட்டி. (நங)

அக்கினிகோத் திரமுளரி யரணிசுசி தரணிசிலை யழலிம் மூன்றிற்
புக்கதொரு வசுவெழுப்பிப் புருடத்தான் மயசுட்கம் பொலிய மூட்டிச
சொக்கிரா கியமாகுஞ் சூத்திரத்திற் சொன்முறையித் தூவேள் விக்குத்
தக்கமனு நாலொன்பான் றத்துவா தியசுத்தி தயங்கக்கூறி. (நச)

சொல்லியவான் கிருதத்தாற் சொல்லியவா ருகுதிக லிலங்க வாற்றி
வில்லியலுஞ் சயாதியோ மஞ்செயலு மீற்றின்முறை விளங்க வாற்றி
நல்லியன்முற் றமைந்துபிர திட்டையிலா வோரிலிங்க நாடிக் கொண்டாங்
கெல்லினூல் விதிப்படியே பிரதிட்டைபுரிந்தருச்சித் தினிதுபோற்றி. (நரு)

மேவுபசுத் துவநீக்க விருப்பொடுநன் னெறியொழுகும் வேதி யர்க்குத்
தாவருநால் வகையுண்டி தக்கிணை தாம் பூலாதி தகமு னல்கிச்
சேவுடையான் பாசுபத தீக்கைமுறை யாசிரிநாற் றிணியா மத்துந்
தேவியலவ் வருட்குறியைத் தியானமிடை யருதன்பு திகழப் போற்றி. (நகு)

வேண்டுமுப கரணமெலாம் விருப்பமிக நனியீட்டி விளங்கப் பூசித்
தேண்டருமெம் பெருமானே யிந்துசே கரனேயெம் மிறையே மன்றிற்
றாண்டவருஞ் சிதபாதா தருகிரிசை மகிழ்ந்தா தமியே னிந்நாட்
பூண்டவிர தம்முடித்துப் புனிதபசுத் துவமுழுது மபோகசி மேலும். (நஎ)

உள்ளபடி சிவத்துவப்பேற் றுண்மைதிகழ் சரவருளே யுதவு கெந்தாய்
கள்ளமனத் தேனெனினுங் கைவிடலின் னடிமையெனக் கரைந்திவ்வாறே
தெள்ளுமுளத் தீரா றினங்களுமபூ சனையோமஞ் செயலோ டாற்றி
நள்ளருளாற் பதின்மூன்றா நாளுதய ந்ததியமு நடாத்திப் பின்னர். (நஅ)

நேசனையாப் பூசனையா னிலவியவங் குலவிலிங்க நிமலன் றன்னை
மாசனைவ ருந்தெறவே மதித்ததமைந்த சிவானுபவ மனஞ்சேர்த் தென்று
மீசனையே பசுத்துவநீக் கிடுதிறமை யொடுதிகழு மெழிலா சாற்கு
பாசனையாற் றக்கிணைதாம் பூலமொடு பரிந்தளித்துப் பணிந்துபோற்றி. (நகூ)

பின்பனைய குரவனைநாற் பெருமறையோ ரபினரைப் பேதி யாமைய
யன்புறுமா கேசுரரை யறுசுவைநால் வகையுண்டி யயில்வித் தன்போ
டின்புறுதக் கிணையாதி யினிகளித்தி யங்கிந்திரந் யிவ்வா ருக
முன்புரிய பாசுபத தீக்கையிடை யூறின்றி முடித்தி யாலோ. (சுo)

வேறு.

முறைமையினித தீக்கையினை முடித்திடுவின்றிற் பசுத்துவம்போய்
நிறைவிரசா வோமத்தா னிருமலகாத திரஞ்சி
யறைதருமிச செயன்முடிவி லாசமன மிருமுறைசெய்
திறைவிரசா வோமாந்தத் தெடுத்தொளிர்வெண் ணீறுதல். (சுக)

அங்கிகோத திரமௌபா சனவ்திகோத்திரமத்
துங்கசிவாக் கினியிவற்றின் றூயதிரு நீறுதல்
செங்கையில்யா தொன்றேனுந் திருந்தவமைத் தங்கியெனத்
தங்குபத முதலமைந்த தக்கமநு வோரேழால். (சுஉ)

வலத்தனிக்கை மேன்மூடி மனனுறமும் முறைசெபித்து
வலத்தொடபி மந்திரித்தோ மாபோவென் மனுவாலு
நலத்தகைய * வாபோவா மனுவாலு நறுநீரைச்
செலத்ததிதே வினைநினைந்து தெளித்தனைய திருநீற்றை. (சுங)

* வகரம்-உடம்படு-மெய்.

ஒப்பவொரு மூப்பாக முறப்பகுத்தோர் பாகத்தைச்
செப்பருமீ சானத்தாற் சென்னியிற்றற் புருடத்தாற்
றப்பின்முகத் தகோரத்தாற் சாற்றிதய மகடதோ
டிப்பியவா மத்துந்தி சாதத்தாற் றிரள்சானு. (சச)

இருகாங்க ளாமுறுப்பி னெழிலுறலே பனமாகப்
பெருகுறப்பூ சுபுபின்னர்ப் பிரித்துளமற் றொருபாகத்
திருவருள்காட் டிடுநீற்றைச் சென்னிமுதற் பாதம்வரை
யொருவறமெய்ப் பூசுபுபின் புடனிருகா லாசமித்தே. (சரு)

அனந்தரமற் றொருபாகத் தணிநீற்றைச் சென்னிமுத
லினந்தருமைந் திடத்தாத லெண்ணிரண்டெண் ணான்காதல்
வனந்தருதத் துவவகையின் மருவாறு றிடனுதல்
மனந்தரமுன் மனுமுறையின் மலிதிரிபுண் டரமாக. (சசு)

தரித்திடுதன் மரபாமித் தகுநீறு தரித்தவரே
யிரித்திடுவர் பசுத்துவ'மிவ் விரும்பாசு பததீக்கை
யுரைத்தவிநி வழாதன்பி னுளுற்றினுமுள் ளுயிர்போல
வரத்தகுமாண் புளதொன்று வழங்குதுமற் றதுகேட்டி. (சஎ)

செபமூலம் யாகாதி செயன்மூல மருமுனிவோர்
தபமூல ஞானசா தனமூலஞ் சிதம்பரமா
நபமூல மறைக்குயிரா நன்மூலஞ் சின்மூல
முபமான மிலாதென்று முயர்பஞ்சாக் கரமூலம். (சஅ)

நவிலிஃதேழ் கோடிமனு ராசாதி ராசமனு
திவியமனுப் பாசுபத தீக்கையினும் பலனளித்தற்
கவிர்தருமுக் கியநிபமா மதிகார மிதன்பாலே
கவிதருமிவ் வருட்பஞ்சாக் கரமுறைநீ பெறல்வேண்டும். (சகூ)

பரமசிவப் பிரசாதம் பரிந்தருளிம் மனுவேந்து
வரமிகுமா றக்கரமா மருவுதொகை வகைமலரு
மரனதிக னேயெனேமுன் னுஞ்சுரரு ளெனின்மனுவுட்
டிரனதிக மிதுவென்று செப்புவதென் றெளிமனத்தோய். (ருo)

வேறு.

வேத முடிசொல் கைவலிய விமல மோக்க தாயகமிப்
போத மயமந் திரமேயர்ம் புனித முனிவர் கனிமனத்திற்
பேத மறவீற் றிருக்குமிதிற் பிறங்கோ ரெழுத்தின் பெருமையெனு
மோத லரிதே யுன்னரிதே யும்ப ரெவர்க்கு மயற்கெனக்கும். (ருக)

சகல வேத கோடிகளுஞ் சாற்று சிரங்க ளெல்லாமுஞ்
சகல கலையு மெய்பொருளுந் தன்னு ளமைந்து தனிவிளங்க
வகல மளிக்கு மாதார மாகு மவற்று ளொன்றாகு
மகல வரிய வாருயிரா யவிரு மகாமந் திரமிதுவே. (௫௨)

சத்து சித்தா னந்தவுப சாந்த பரிபூ ரணவிமல
சுத்த முத்த நித்தபர சுத்தாத் துவித பரப்பிரம
வத்து தானென் றுபதேடஞ்சொல் வரத பரம சிவனென்று
முத்தி முதலாய் வீற்றிருக்கு மூல மகாமந் திரமிதுவே. (௫௩)

ஏனை மனுக்கள் குடிலையுஞ்சேர்த் தெண்ணப் பலவ தத்தமெழுத்
தான வளவை சிற்சிலதம் மந்த மருவா தளப்பனவா
மான மநுவீ தக்குடிலை மருவா தந்தம் வரையெண்ணு
மேன திருவைந் தெழுத்தெனவே விளக்கு மியற்சீர் பெறுமனுவாம்.

இதனு லிதுதாரகஞ்சேர்ந்தா றெழுத்தா யெண்ணப்பெறினுமிதை
முதனூ லாதி கலையெல்லா மொழிவ திருவைந் தெழுத் தென்றே
சிதமா முனிவ ரிதுபேணிச் சிவாபி வியத்திப் பேறுற்றா
புதர்பற் பலரு மிதுகொண்டே பொருவில் பதங்கள் பலபெற்றார்.

இன்ன மநுவி னமவென்னு மிரண்டக்கரங்கள்பசுத்துவந்தீர்ந்
துன்னுமான்மாபரசிவத்தோடொன்றிவாழ்மெய்ப்பொருளுணர்த்து
மன்னு நமசி வாயவென வழுத்திம் மனுமா மலபந்தத்
தின்ன லொழிந்துய் வுறவுயிர்கட் கீசன் றனே தருமனுவாம். (௫௬)

யாவ ரிதயத் திம்மனுவீற் றிருக்கு மவருக் குபநிடதத்
தாவில் பொருளா லருந்தவத்தாற் றருநீர்த் தாதி யாகாதி
யோவி லறனூற் றமக்காக வேண்டும் பயன்வே றென்றிலையான்
மேவிம் மனுவோர் முறையேனு மெய்யன் புறவோ தாவிடிலோ. ()

கணிப்பி லபார துக்க பயங்க ரசங் குலவா கரமாய
கணிப்பில் சமுசா ரப்பெருஞ்சா கரதீந் துறவே றுபாயமிலை
தணிப்பில் சகல வுபநிடபூ டணவிம் மனுவே சகலசுகந்
தணிப்பில் பரம சிவஞானோ தயமுக் கியகா ரணமாகும். (௫௮)

தகுகை வலிய சிற்சொருபந் தன்னை விளக்கு மணிவிளக்குத்
தகுபல் குரூர பஞ்சபா தகதா வாங்கி யென்றுரைக்கத்
தகுமிப் பிரண வஞ்சார்பஞ் சாக்க ரம்மே மோக்கம்விழை
தகுநால் வருணர் சங்கரருஞ் சாற்றும் வரோப காரமனு. (௫௯)

தூமந் திரமீதெப்போதுஞ் சத்த மயமேயாதலினு
லோம முதல பூர்வாங்க முசித கால முதல்வேண்டா
தேமமலியக்கொடுத்தல்கொளலிசைத்தலெலவைக்கும்பொருத்தமுள
தாமமிகுமா சுயம்பிரகா சத்து மகாமந் திரமிதுவே. (௬௰)

வேறு.

இம்மாமனு விற்சிவ்வென்னு மிரண்டெழுத்தின்றொகைவகைவிரியிற்றிகழு
மம்மாபொரு ளுண்மைய ளப்பவரா *ரயனுன்முத லுன்மறையாதியெலாஞ்
சும்மாவெனலல்லதென்சொல்லுவதித்துவிதாக்கரமீதருதூயபல [சொல்.()
னெம்மானவிலத்தகுமோவிடர்முற்றிரிதநின்பொருங்கீமெனலாமொரு

மானந்தரு மிம்மனு சற்குருவால் வழங்கப்பெற லன்றியெம் மாதலத்தின்
பானந்தநவ் விஙினு மெண்ணியவெப் பலனும்பெறு கிற்றில ராதலினுற்
சானந்தரு சற்குரு வாலுபதே சம்பெற்றுயா சைவத லத்தினடைந்
தீனந்தவிரசசெபமாற்றினுடனெல்லாமெளிதிற்பெறலுண்மையதே. (௬௨)

எல்லாவுயிர் கட்குமு ளததிலுநதுன் பெண்ணூர்கள்க ளஙகமுன்னோர்சிறிது
மில்லாதவர் காமமுன் றேயதுரி சிரித்தோர்பய னிங்மொழி பொய்ம்மொ
ழிமுன், புல்லாதவர்நூலுணாசீலாகளைம்புலனீத்தவர்போற்றுறுசீடர்கள்பா,
னல்லாதரவாற்புரிதீகைகையினுனைவநீககுமெயஞ்ஞானந லத்தகையோர். ()

இவ்வாய்மைக ளாதிய மைநதவரே யிதவாயமைய சற்குரவோரிவர்பாற்
செவ்வேபெறு மநதிர மேவிளையுந திறனெண்ணிய வாறுட னல்குமெளி
தவ்வாய்மனு வோதுட னேதிடநல் லருண் மாதல ஞகிடி லாஙகவைதா
மிவ்வாழ்கட னீள்புவி வாழ்வுறவே யெழுதாரக மானதி ருக்கைலே. (௬௪)

தனிமேருவி மாசல மநதமஙகே தாரநதிரு வாரண வாசியரு
ளினிதார்பிர யாகைதி ருசசயில மிசைபுட்கர மல்லிகை யர்சசுனமே
முனிவோர்பணி நைமிசங கோகனமே முதுகுன்றரு ணாசலநதில்லையரு
ணனிசேர்திருக்காளத்திகாஞ்சிபுரநவில்பஞ்சநதம்மிடைமாமருதூர். (௬௫)

புலிவாழ்சிவ லோகமெ னும்மதுரா புரிவேதவ னம்புகல் சேதுமுத
லவிர்மாமதி வேணிசு யம்பிலிங்க மமர்மாதல மாவன கூவிரமா
சிவாசவி ருக்கமு தற்பலவாஞ் செப்பும்மிவை கைப்பொரு ளாக்குமூன
நவின்மாமனு வின்செப மெய்ப்பயனை நவின்றும்மிது நிற்குல கின்புறவே.()

---

*அயன் நான் என்று பிரிக்குக.

எனநாரண னோதிய வாய்மையமு திருகட்செவி வாய்நுகர்ந் தேயமுத
நனிகூரகி நாயக னோதுறுமென் னுதாதிரு நாதவெ னக்குயிரி
னினியாரினி யாருளே யல்லதையிங் கெளியேனுயு மாறிரங் காரருளாற்
றனியோதிய யாவுநின் பாற்பெறவே தமியேற்குள மார்வமிக் கூர்வதரோ.

அண்ணலெனை யேன்றுகொண் டின்னருளே யளித்தோயகி லம்முமளித்த
ருளங், கண்ணவருள் கென்றுப ணிந்தடிமேற் கைகூப்பிய சென்னியன்
வீழ்ந்துபணிந், தெண்ணோர்பெற வேண்டலு நீண்டவனும் கிரும்பைப்பதி
யெண்ணமு டித்துமென, வொண்ணுதி பெற்றென முற்றுவகை யுததிப்
|புனன் மூழ்கின னாங்குடனே. (சுஅ)

பின்னேயமொடன்னபணிந்திரனப்பெருமான் றிருக்சந்நிமுன்னுறுமோர்,
மன்னோர்மிகுபுண்ணியநீர்த்தமலர்வாவிப்புனலும்படிந்தாசமியாத், தன்னே
ர்திருநீறணிந்தெல்லைபெறுத்தண்மாமணிமெல்லிலைகோலமுடன், கன்னே
ர்கவிகைத்திருமாலடிக்கீழ்க்காணிக்கையதாகமுன் வைததனனல். (சுகூ)

மேலுந்துதி விண்டுமு னின்றனனவ் வியாளேசனுக் கத்திரு மாதவனெந்
நூலுந்துதி செய்விர சானவ்மார் நுவல்பாசுப தாசிவ தீக்கையுறை
நாலுந்துதிமந்திரமாதியெலாநயப்பப்புரிந் தத்திருநீறளிதமெதக் [மனம். (எ0)
காலுந்துதி செயதிரு வைந்தெழுத்தைக கருதிப்பொருள் வாய்மைகனிந்து

வேறு.

ஏகசிவ மாகத்தனைப் பாவித திரு கண்ணுற்
பாகத்துற நோககித்தரு பார்வைத்திரு வமுதாற்
சேகற்றுப வாசத்தனி விரதசெயல் கோளந
நாகர்க்கிறை தேகத்தினை நானம்புரி வித்தே. (எக)

தன்னேர்முகந் கிழக்காகவுங் கதக்கோவினை யிருத்தி
யன்னோன்சிர மிசையங்கைவைத் தருண்மாசிவரூப
மென்றுவரு திருவைந்தெழுத் துபதேசமு னியற்றி
மன்னோர்சிவ மயமாக்கினன் மகியேந்தகி வேநதை. (எஉ)

உரையாதிக ளாலும்மள வுணராவொளிர் மனுவேந்
துரையாலொரு செவிவாயினு மொருவாத்திரு வமுதாய்
*வரையாமுன மெனமாதவம் வாய்த்தோமென மகிழா
வரையாதமெ யறிவானந்த மயவாரிதி படிந்தான். (எங)

* வரயாம் எனப்பிரிக்குக.

தானென்ெறாரு சிவமென்றிரு வேறின்றெழு தருமெ
யானந்தமம் மாநந்தம ரங்கைப்பெரு மான்றன்
பானன்றருள் காமத்தக பரிசாதிய பயனுன்
மானந்தர வெல்லாஞ்சிவ மயமாய்வயங் கினனுல். (எச)

அகிநாயக னலர்நாயகி யணிநாயக னடியிற்
றகுமாதர மிகவீழ்ந்தீடிக் கடிதாழ்ந்துபஃ றுதிசண்
மிகவோதியவ் வரிதாட்பணி விடைமிக்குளம் விழைந்தா
னிகவாழ்வயன் முதலோர்பத மெல்லாநதுரும் பெனவே. (எரு)

மதியாநதி மதிவேணியன் பதவம்புய மலரே
கதியாமனம் பதியாவொரு கணமும்மற வாதப்
பதியாரருட் குறியாஞ்சுயம் பிலிங்கேசபொற் பதமே
விதியோடருச் சனையேபுரி விழைவேமிக வமர்ந்தான். (எசு)

என்றேதிய நந்தீசனை யிருதாள்சனற் குமர
னன்றாதர விறைஞ்சாநவில் கதைமேலுந யந்தே
நின்றானென வருள்சூதனை நேயம்மிகு முனிவோர்
பின்றானர விறைகாதையென் னெனவாங்கவன் பேசும். (எஎ)

வேறு.

திருவைப்புணர் மாதவ னற்புமிகு திறனுற்றெழு சேட னுளக்களிகூர்
தரமுற்றுப தேசமு ரைத்தகதை தனையற்பின்வி ளுவினர் செப்பினர்தாங்
குருவைப்பெறு வார்கள்ப சுத்துவமிக்குல மெய்ச்சிவ ஞானமுறப்பெறுவார்
பருகுற்றிக வாழ்வுகண் முற்றுமொரு பரமுத்தியு மேவுவர் நிச்சயமே. (எஅ)

ஆதிசேடனுபதேசம்பெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (சுஉச)

# ஆதிசேடன் சிவலிங்கம்பெற்ற சருக்கம்.

---

நிலமுழுவது முடியின்கண் வாழ்தர நிறுவிய பணிபதியன்பு கூர்தர, மலர்மக
டழுவுறுகொண்கனோருள்வருமொழி குருமொழிகொண்டதோ தினங், குலவு
று மணியன விண்பொலொளிர் குளிர்மரகதசிவலிங்க மேலுறு, நலனிறை
செயன்முறையின்ப மேதக நவிலுது மெனவருணந்திகூறுமால். (க)

வேறு.

அருத்திமிகு சனற்குமா வருநந்தவகேண் முருகநந்தனடி யடைவின் பேற்றுற்
றிருத்தகுபாக்கியன்விரசா தீக்கையினைச் செழுத்திறல பேதசீலன்
கருத்தொருமைச் சிவஞானக் கடற்படிந்தா னந்தமுதங் களித்துண் டன்பு
பெருத்தெழநின் றனந்தீனரி பிரசமலர்த் தாள்பணிந்து பேசுகின்றான். (உ)

குவலயமுற் றளித்தருளென் குருநாதா திருநாதா கோதெலாய்போய்ப்
பவலயமா கியபாச பதீக்கை யிதமேற்கொள் பரிவினன்போர்
திவலையள விலையெனினுஞ் சிறியனமை யலைதுகதி தேரு னென்றன்
கவலையற வினிதளித்த கடமையின்மே லருளலுநின் கடமையன்றே. (௩)

ஆதலினு லெளியனெழுத் தைந்துபதே சப்பேற்றிற் கமைய வீசன்
காதலினு லனவரதங் கலந்துறையுஞ் சிவலிங்கங் கைக்கொண் டென்றுஞ்
சாதலினைத் துடைத்தருள்பூ சனைபுரிதற் கேவேட்கை தழைத்தே னென்னை
யீதலினு லுளங்குளிர்வித் தென்னையருள் பின்னையமர் திலங்குமார்ப. (௪)

எனவகிலேசன் திறைஞ்சுபுகன் றினிதிசைத்த வேத்துவைகேட் டிந்திரேசன்
கனியடிய ரெணமுடிக்குங் கருத்துவகை நனிபூப்பக் கருணை கூர்ந்தப்
பனகபதிக் கருள்புரிந்திப் பரிசுரைக்கு மனந்தகேள் பாரிற் சோணுட்
டினிலிறைவ னருட்பெருக்கே யெனப்பொலியுங்காவிரியாற் றினுக்க வாசி.

ஆசையினில் யோசனைமூன் றலர்பாரி சாதவன மதற்குத் தென்மேற்
கோசனையொன் றெனப்பெறுமோருழியமு தாம்பிரகுலங்களுளவாதென் றுந்
தேசுவிரி தரப்பொலிந்துதிகழ்சூத வனமெனும்பேர் சிறப்ப வாய்ந்தாங், கீச
னருண் முழுதடைந்தார்க் கினிதளிப்பித் தமலமதா யிலங்கா நிற்கும். (௬)

வேறு.

கருப்பமந் தாரங் கன்னி காரம்பா டலஞ்செ ருந்தி
வகுளங்கூ விளங்க டுக்கை மராகுரா நாரங் கஞ்சண்
பகநிப நறவ ஞாழல் பன்னிதா தகிப லாச
மகில்வழை லிகுசம் வன்னி யாரமா விலிங்கை புன்னை. (௭)

சாலமா சினியி லந்தை தாத்திரி பாரி சாத
மாலமா துளைய சோக மரசுகர்ச் சூர மாத
மாலமஞ் சாடி நாவன் மதூகஞ்சே வோமை வெள்ளி
வேலமி லவங்கஞ் சாதி யிலாங்கலி பூக நாகம். (அ)

ஆதிய நிரைக ளந்த வாம்பிரா டவிச்செ றிந்து
சாதிதா டிமஞ்சம் பங்கி சண்பக மயிலே சீந்தின்
மாதவி மல்லி முல்லை மதூரமுன் வல்லி தத்த
மீதழீஇப் படர்ந்து பல்க விண்ணெலா மளாந்து மல்கும். (கூ)

வேரிகை நிமிர மாந்தி மிழற்றிசைச் சுரும்ப ராதி
சாரிகை காள கண்டந் தத்தைசா தகஞ்ச கோரங்
காரிகை யோதி மஞ்சி காவளஞ் சிவல்க போதம்
வாரிகை யிசைமுற் றத்த மாண்செயல் வழங்க மல்கும். (கo)

வாவிபல் வலந்த டாக மடுச்சர சேரி கேணி
யாவியு வளக மேல்வை யலந்தைமுன் னுய வென்றுங்
காவிபங் கயங்கல் லாரங் கைரவ மாதி தூநீர்ப்
பூவிரித் துளங்க வர்ந்து பொலிவினெங் கெங்கு மல்கும். (கக)

மிருகண்டு சூனு வாதி விழுத்தவ முனிகு ழாங்க
ளருள்கண்டத் துவித போகத் தமர்ந்துவா முடசந் தோறும்
பொருசுண்ட வேழஞ் சீயம் புண்டரீ காதி யாங்கே
வருதொண்டு பலவுஞ் செய்தே மாறொழிந் தமர்ந்து சூழ்வ. (கஉ)

இன்னன பலவ ளங்க ளெல்லையின் றென்றும் பல்கு
மன்னமா வனத்தி லெங்கு மமுதமுன் னடுத்த தூய்மை
யுன்னியோ வுலகெ லாமுய்ந் துறத்திரு வுளங்கொண் டோகின்
மன்னுபுண் ணியவி சிட்ட மலபரி பாகத் தாலோ. (கங)

தானருண் மறைக ளாலுஞ் சாற்றுமற் றளவை யாலு
ஞானமா முனிவ ராலு மௌனமுன்வா னவர்க ளாலு
மேனவின் மனம்வாக் காதி வேறெவற் றாலு மெட்டா
மானமெய்ச் சிவமே லிங்க வடிவமாய்ச் சுயம்பு வாகி. (கச)

அவ்வன நாப்பட் டோன்றி யாரமு தெனச்சு வேத
மெய்வ்வள ரொளியி னீடி விளங்குமவ் விலிங்க மூர்த்தி
திவ்விய சரண பூசை சிவாகம விதியாற் செய்தி
யிவ்வருட் செயனீ. வேட்ட தின்றுறு புதுமைத் தன்றால். (கரு)

---

* வாரி - இசைக்குழல்.

பதஞ்சலி யாகி முன்னம் பரமனூர் முன்ன மங்கை
முதஞ்சலி கூம்பச் சென்று முறைமுறை யிறைஞ்சிப் பூசை
நிதஞ்சலி யாம லாற்றி நிருத்தநேர் காணப் பெற்றாங்
கிதஞ்சலி லங்கொள் வேணி யிறையருள் செயப்பெற் றாயால். (கசு)

வேறு.

இப்பகலு மப்படியே யாம்புகலிச் சூதவனத்
தொப்பரிய மெய்ப்பொருளை யுமாபதியை யெமாதருமை
வைப்பினை நூல் செப்புநெறி வழாமலருச் சனைபுரிந்
தப்பரம னெப்பொழுது மமரமுத வருட்குறியில். (கள)

பணியரசே சிவார்ச்சனையாம் பணிபுரியப் பணிவொடுநீ
யெண்ணியனைய சூதவன மெய்துமுன மெய்தகுபன்
மணிகனக நிதிவகைகள் வரம்பில்கொண் டருமறைக
ளணிபுணர்த்து சிவாகமமுற் றுரிசறத்தேர்ந் துளந்தெளிந்த. (கஅ)

நீதறுபோ தகராதி சிவமறையோர் வைதிகரை
மூதகுசீர்க் காசியப முதலாய முழுதுணர்ந்த
நேதகுபல் விமாளுதி நிருமிதசா தகசதுர
ரோதுமெல்ல கிகம்வல்லா ருடன்றேவர் கம்மியனை. (கக)

உடனழைத்துக் கொடுவிரைந்தவ் வுத்தமமா வனஞ்சேர்ந்தங்
கடைதினத்திற் கேத்திரபிண் டாதியுப வாசாதி
கடனமைத்து மடனகற்றிக் கதிபுகுத்து மான்மார்த்தத்
திடனிலைத்த சிவலிங்க சிவார்ச்சனைசெய் குதிவிதியால். (உ0)

சகலதல சிவலிங்க வியட்டிபூ சனைப்பயன்முற்
றகல்முற வளித்திடுமான் மார்த்தபூ சனையதனா
லிகலரிய மரகதமா விலிங்கமுனக் களிக்கின்றோம்
புகலருமன் பாலென்றும் பூசைவழா தியற்றுதியால். (உக)

என்றருளி முகுந்தனர விறையிறைஞ்சி யெதிர்நிற்ப
மன்றன்மல ராதிகொடு மரபின்மர கதவிலிங்கத்
தொன்றியபூ சனைபுரிந்தீற் றோமாங்கி வினைநிரப்பித்
தன்றிருமென் கரத்தாலச் சரலிங்கந் தனையளித்தான். (உஉ)

அகியரச னடிவணங்கி யங்கையிணை விரித்தேந்தித்
தகுமலரா தியகொண்டா சானெதிரா னையின்விதியான்
மிகுக்கிரியா தியதெரிப்ப விழைதகுபூ சனைமுடித்து
நெகுமுளத்தாற் குருபூசை நேரியற்றிப் பணிந்தெழுந்தான். (உங)

குரவெதிர்நின் றரவிறைபின் கூறுகின்ற ஞன்மார்த்த
சரவிலிங்க பூசனையே சகலதல சிவலிங்க
பரமபூ சனைப்பயனைப் பாலிக்கு மென்றனையாம்
பிரவணநா யகன்பூசை பேணுகெனப் பணித்ததை யென். (உச)

அடிகளடி யேனுளத்தி னையமொழித் தருளுகென
முடிவணங்கி யெதிர்நின்றான் முகநோக்கி மொழிகின்று
னெடியவனங் கதவேந்த நீகேட்டி நிபந்தெரிப்பாங்
கடிவருமான் மார்த்தநெறிக் காசறுமா பூசனைதான். (உரு)

சுருதிசிவா கமமாதி துதிசருவ சம்மதமே
கருதுமத்து கைக்கொண்டோர் கனிவுறுதா வரலிங்க
பரமசிவ வழிபாடும் பரிவுமிகக் கொளல்வேண்டும்
வரமிகுதா வரலிங்க வகைபலவா மவை கேட்டி. (உசு)

வேறு.

மனுட தாபித லிங்கமே மானுட லிங்க
முனிவர் தானவர் நிருதரான் முளைத்ததா னிடமே
யெனைமு ஞஞ்சுர தாபிதந் தைவிக விலிங்கங்
கனிக ணேசகு காதிதா பிதங்கண லிங்கம். (உஎ)

உலகெ லாமுய வருளிற்று னுதித்ததே சுயம்பு
விலகு மிவ்விய லவகை யொன்றுக்கொன் றேற்றங்
குலவு மாயிர மயுதமி லக்கமே கோடி
நிலவு னந்தமா யடங்குயர்ந் தரும்பய னிகழ்த்தும். (உஅ)

வழுத்து மிவ்வகை யன்றிவே றொருவகை வயங்குங்
குழைத்த மண்சுடு மண்டருச் சிலைகொள்சீ ருணமு
னிழைத்த ரத்தின மொண்மணி வாணமே யிரதம்
பழுத்த மெய்ச்சுயம் பெனவிரண் டைந்தொரு பகுப்பாம். (உகூ)

இன்ன பத்தினுண் முன்னைநான் கொன்றினென் றேற்றந்
துன்னு மொவ்வொரு பதின்மடங் கனையதாச் சைலந்
தன்னி னூறுபங் குலோகமாங் கதினிரத் தினந்தான்
மன்னுமாயிர மதின்மணி யிலக்கமே வாணம். (௩0)

அன்ன தற்கொரு கோடிமே லிரதமாங் கனைத்தே
யின்னா ருட்சுயம் பிலிங்கமாங கதனிலு மேற்ற
மென்ன லாமலா ளவுகண் டிசைப்பரி தெவர்க்கும்
மின்னு பூசையீற் றினில்விடு மிலிங்கமோர் வகைகேள் (௩க)

மண்ணு தண்டுலை மன்னமாற் றுமணல்கோ மயமே
வெண்ணெய் கண்மணி சந்தனங் கூர்ச்சம்பூ விளைத்தார்
நண்ணு சர்க்கரை மாவென நவில்பவா றிரண்டு
ளெண்ணி யாதொன்றிற் புரியினு மிலிங்கபூ சனையே. (௩௨)

போத ருத்திர ராதிய புனிதராற் பூவில்
வேத னாதிய வளப்பிலா விபுதரா லென்னான்
மாத போதனர் தானவர் திருதர்மற் றவராற்
கோத றப்புரி யிலிங்கங்கள் கோடிமா கோடி. (௩௩)

ஆய வெவ்வகை யிலிங்கத்துஞ் சுயம்புவிற் கதிகந்
தூய மெய்வகைப் பயனெலா மெளிதுடன் றுய்த்து
மேய விவ்வியன் மெய்ம்மையா லமுதமா விபினந்
தேயமுய்வுறத் திவ்விய வமுதலிங் கேசன். (௩௪)

அருளி னிற்கள வில்பலப் பிரதனே யாகத்
தெருள்சு யம்புவாய் வீற்றிருந் தருள்பெருஞ் சிறப்பா
லிருளி ரிக்குமச் சேகர வனம்புகு கென்று
மருடு ரத்தகி வேந்தவம் மந்திர நாதன். (௩௫)

அவ்வ னத்தன வரதசா ந்நித்திய னாகித்
திவ்வி யத்தனி யமுதலிங் கத்தினிற் றிகழ்வுற்
றெவ்வு கத்துநீங் குறுதிருந் தருளுமிவ் விறைக்குச்
செவ்வி முற்றநீ முன்புரி திருப்பணித் திறங்கேள். (௩௬)

வேறு.

வரப்புனித தருப்பணம்போற் கருப்பதல மருத்த மண்டபமா மண்டபஞ்
சோ பனமண்ட பாதி, புரப்பகைவிற் பொருப்பெனவிண் பரப்புயர்பற்
பலகோ புரவகையா வரணவகை பொன்னெயில்கண் முன்னா, தரப்புகனூ
ல் பற்பலதேர் சிற்பர்முடி வணக்கந் தருமயனா னிருமிதஞ்செய் வித்தியனை
யசின, கரப்பவனத் தமரமுத மூலலிங்கத் தட்ட கனந்தருபந் தனம்புரிதி
காசறுநூல் விதியால். (௩௭)

கணநாதர் குறப்பிடிதன் மணநாதர் கபாலகரநாதர் பரநாதன் கடைகாவ
னாதர், தணவாத துசம்பீடஞ் சௌராதி சண்டீச சாந்தபரி வாரசுரர் தமை
நிருமித் தாங்காங், கணவாகின் றுவரிப்பத் தாவனைஞ்செய் தரியூ னாயை
மத வெள்ளிபழு னாயனிவ ரவ்வூர், மணவாகின் றனவரதம் புரப்பனிநீஇ
யிமய மலையருணின் மலையுலக மலையறவீன் றருள்வாள். (௩௮)

உம்மையினு மிம்மையினு மம்மையினு மெய்ம்மை யுண்மையுற வண்மையுற வொண்மையுறத் திண்மை, செம்மைசிவத் தன்மையெனு நன்மையருள் வின்மைச் சிவைகௌரி பவைகுமரி பெரியநா யகியெம், மம்மைதிரு வுரு விதியி னிருமிதஞ்செய் தவட்கெ மையனமர் துய்யசின காவிரிபோற் செய்ய கொம்மைதிகழ் கருப்பதல விமானுதி பலவுங் குலவுநிகே தனமெழுப்பிப் பதிட்டைமுறை குயிற்றி. (நக)

பரவுசிவா கமநெறியிற் சிவத்துவிச விசிட்ட பாவனரைக் கொண்டேமுற் பகர்பதிட்டை யாதி, புரிபுசுப தினத்துலகு புகழுமகா சாந்தி புனிதவினை யனுஞ்ஞைமுதற் கும்பாபி டேகம், வரைகிரியை மந்திரம்பா வனைதிரவி யாதி மறந்துமொரு குறைமருவா வகைவயஙகப் புரிவித், தரவிறைநீ யும்ம னைய மனுவிறைவற் பூசித் தந்தணரூண் முதலாய வினைத்துமியற் றுதியால். (சு0)

அனந்தரமக் கனந்தரமா கந்தரற்குப் பன்னீ ராயிரநிட் கம்பொருளொவ் வொருவருடந் தோறு, மினந்தரவந் திடத்தகுபல் வகையவிளை நிலங்க ளிலங்குமா வணத்துடனீந் திதன்மேலு முவகை, மனந்தரமா மணியணிகள் சுவணாசி தாதி மலிதருபா சனவகைமற் றுள்ளவெலாம் வயக்கிக், கனந்தர நித் தியமுதன்மூன் றுஞற்றுசிவத் துவிசர் கனிதரநெஞ் சினிதளவில் கன காதி மனைகள். (சுக)

வளனிறைபல் விளைநிலங்கண் மற்றவெலாஞ் சாசு வதாநுபவ சாதனத்தான் மறுத்திடினு மருத்தி, கொளவினிது புகன்றுதவி யாங்கவரெஞ் ஞான்றுங் குலவியவாழ்தரப்பதிட்டைகுயிற்றியொருவாதே, பளகொழியுநீயுமவணமர்ந்த னையான்மார்த்த[illegible]ரார்த்தமர கதவமுதசிவலிங்க மூர்த்தி, களிநிதமு மளவி லுபகரணவகையெல்லாங்கவினியபூசனைகள்சிவாகமவிதியாற்புரிதி. (சுஉ)

இவ்வியல்பிற் பூசனைநீ புரியமுத லிஙகத் தின்னினிமா தவப்பெருஞ்சீ ரிருடிகணீர்க் கிறைமுற், றிவ்வியபூ சனையாற்றி யிட்டமெலாம் பெறுவர் சென் றினிநா மிரவிகுலோற் பவராம நாமத், தவ்விறையாய்த் தெவ்விறச்செய் மெய்வலிபெற் றுய்வா னவ்வமுத லிஙகசிவார்ச் சனைபுரிந்தின் படைவே. மெவ்வமிலொன் பதுகோளு மெவ்வுலகும் பூசித் தின்பமுழு தும்பெறுவ ரொன்புகல்வதினிநாம். (சுஙு)

ஆதலினற் பணிராச குணிசிகா மணிகே ளத்தகுமா வனத்தமுத லிங்கேச சரணங், காதலினு முறைத்தவிதி கருத்துறவெண் ணீறு கண்மணிமுற் சிவ சின்ன காத்திரனு யார்த்தி, * யோதலினு வரைந்தருளு மனுராச ராச வுத் தமோத் தமசிவ ரத்தினமாய் வேதத், தீதலினூர் வம்பெருகைந் தெழுத்தை முறை யோதி யினிதுதினந் தினம்பூசித் தின்பினமர்ந் திருத்தி. (சுச)

* ஓது அல் இன்னுவெனப் பிரிக்க.

இத்தகுதி யோடுபெரி சுத்தசன்மார்க் கத்தினியைந்துமா கதலிங்க வான்மார்த்த மெனுமவ், வத்தமபூ சனையும்வழா துஞற்றிவரு குதியே லுவ்வாத வினையொப்பு மலபாக மேலுஞ், சத்தினிபா தத்துயர்சுத் தாத்துவிதா னந்த சாந்தபா சிவமாவை பாந்தள்குல வேந்த, துத்தியமன் றிதுவாய்மை யெனமாத வாசான் சூதவனத் துய்த்தனன்கா கோதரேந் திரனை. (சரு)

வேறு.

என்ன வோதிய நந்தி நாதனை யெண்ணி லொருமுறை வந்தி யாவய
னுன்னுகான்முனை பின்ன னர்தன வொண்மை மாவனய்வந்து ளானவி
னன்னர் கேள்வியி னுங்கு மாதர நண்ணி ரேனெதிர் நந்திநாயகன், சொன்ன
வாறுவி ளம்பு வான்விழை தொன்மை மாதவர் முன்பு சூதனே. (சசு)

அமரர் வானமு தன்று சீவர்க ளமிர்த ராய்முழு வின்ப வாழ்வினி
லமர மேவமு தென்று மாதவ ரளியி னீடிய விந்த மான்மிய
மமர வோதின ரொன்று கேள்விய ரகில போகமு முண்டு மாமல
மமர ஞானமெய் கண்ட போதர்பி னழிவில் வீடுற வொன்றி வாழ்வரே. (சஎ)

ஆதிசேடன் சிவலிங்கம் பெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கூஎக.

---

# ஆதிசேடன் சூதவனஞ்சென்ற சருக்கம்.

மதியி லங்கு வேணிமுக்க ணிறலை யங்கி சூரல் கட்க மருவு செங்கை நீன்மி டற்றன் முதுவானவர், துதிவ ழங்க நாதன் முற்செ லருள்பு ரிந்து காதன் முற்று துணைசெய் நந்தி தேச னர்பி னகிகோன்மா, கதவி லிங்க மீது பெற்ற கதைபு கன்று மாலு ரைத்த கவினி லங்கு சேக ரத்தண் மலர் கானன, மதைவி ழைந்து நேயமிக்க மனனின் முந்து போய டுத்த வருமை யன்பி னேது கிற்ப மென வோது மால். (க)

வேறு.

வினவுதி சனற்கு மார வித்தக முனிவ ரேறே
வனசைகோன் புகன்ற வெல்லா மகிழ்மிக வினவு சேடன்
* பனியுரு தவனி மாநதர் பதஞ்சலி யுருவந் தாங்கி
நனிமகிழ்ந் தரிபொற் பாத நளினம்பன் முறையி றைஞ்சி. (உ)

---

* பனி-நடுக்கம்.

விடைபெறீஇச் சென்று வேத வித்தகர் சிவாக மாதி
தடையறத் துணிந்து நான்குஞ் சமைந்தபோ தகர்முன் னோர்று
னடைதரு மயனுள் ளிட்டோர் நவிலுமற் றுள்ளா ரெல்லாம்
புடைவர விலகட் கெட்டாப் புனிதவண் மணிக்கு வால்கள். (௩)

வகைபல வளக்க வொண்ணு மாநிதிப் பொருப்பு மற்று
மிகையெனக் கைக்கொண் டச்சு வேதமா புரத்தி னின்று
வகைமிகப் புறப்பட் டோங்கல் வகையெலாம் பணியு மோங்கற்
சிகைநிரை நிரைடல் கோடித் திருக்கயி லாயம் புக்கான். (௪)

கண்டமர் மொழியோர் பால கண்டனை யெண்டோள் கொண்ட
கண்டனிப் பால நீல கண்டனை முண்டத் திந்து
கண்டசீ கண்ட நாம * கண்டனை மண்டு தொண்டர்
கண்டரு மங்க ளனைக் † கண்டனை கழலி றைஞ்சி. (௫)

அருள்வலி யெண்ணி யெண்ணி யாங்குற வேண்டு கோடற்
பொருண்மலி துதிபு கன்று போந்தவி முத்தஞ் சார்ந்து
தெருள்பொலி கங்கை தோய்ந்து சிவந்திகழ் விசுவ நாதன்
மருணலி யுகள பாத வாரிசந் தொழுது வாழ்ந்தான். (௬)

ஆங்குநின் றரிதி னீங்கி யருட்பருப் பதங்கி ராதர்
தேங்கமலாம்ப கங்கொ டிருப்பதி பொருப்பி லன்னை
கோங்குவண் டினில்வ டுத்த குளிர்பதி யிருவர் நாப்ப
ணோங்கண லோங்க றூய வொண்மணி மூத்தாற் றேறுதி. (௭)

புலிபதஞ் சலியா னித்தம் பொலிபதஞ் சலியா நித்தங்
கலிசிலம் பொலியா நிற்பக் கனியருள் வலியா நிற்ப
மலிசிவ காமி யுள்ளம் வரம்பிலா னந்த வெள்ளம்
பொலிதர வமன்ற மன்றம் புரிந்தருள் கின்ற மன்றம். (௮)

ஆமுத்த மாங்கத் தேந்தி யருச்சனைத் தவத்தின் பேற்றாற்
கோமுத்தி வாய்ப்ப வந்நாட் கொடுத்தரு டிருத்த லம்மா
னேமித்திண் படைக்கி டந்த நேத்திரார்ப் பணபு ரஞ்சேர்க்
காமித்த வாஞ்சை யன்பர் கைக்கொள்சீ வாஞ்சி யந்தான். (௯)

அரியுரத் துச்சு வாச நிச்சுவா சத்தி னுங்கே
புரிதரு மசபா நித்தம் புரிமுசு குந்த வேந்துட்
பரிவெனும் வலையி னீர்க்கப் படுஉப்படி மூலா தாரத்
துரிமையி னொருவா தும்ப ருத்தம னுறைற்றி வாரூர். (௧௦)

* கண்டன் - தலைவன் † கண்டு அல்லை கழல் எனப் பிரிக்க.

ஆதிபஃ றலங்க டேடாறு மடுத்தடுத் தாங்காங் கண்பி
ஞேதுகேத் திரபிண் டாதி யுஞற்றிமா மணிமி டற்று
மாதுபா தியனை வாழ்த்தி வழிக்கொளீஇ மறைக ளுண்கு
நீதியி னருச்சித் தேத்தி நிலவுமா ரணியம் புக்கு. (கக)

வேதநா யகனைப் போற்றி விளம்புமவ் வனத்தின் மேல்பா
லோதிரு யோச னைத்தா யொப்பிலாத் தனது முன்னை
மாதவாங் குரமே சாகை விகைவிரிந் துயர்ந்து விண்ணின்
மீதெழுந் தனைய சூத விபினமே நோக்கிச் செல்வான். (கஉ)

செல்லுழி யகிகு லேசன் றிருக்குநேர் திருக்கி லாத
நல்லன சுபநி மித்த நற்சகு னங்கள் பல்வே
ரெல்லையங் குறிவ கண்டா னுலப்பிலா வுவகை வெள்ளத்
தெல்லைகாண் கில்லான் றற்கு ழெனையரோ டேகு கின்றான். (கங)

நவங்*கடத் துவன்செல் சூத நறுங்கடற் றினிலு மேதப்
பவங்கடத் துறுநா வாயென் பாக்கியன் மார்க்கண் டாதி
தவங்கடத் துவமோர்ந் தாற்று சற்சனர் முன்ன ராங்கே
சிவங்கடத் துருநி மித்தத் திறம்பல திகழ்ந்த மன்னோ. (கச)

தனித்தனி நிமித்தங் கண்ட தகுமகிழ் வலதுந் தம்மு
ளினித்தெழு மின்பந்தேங்க விருகணீ ரருவி தூங்கப்
பனித்துடல் பூரித் தோங்கப் பரவுரோ முஞ்சி லிர்த்த
வுனித்தவ மார்க்கண் டாசா னுடசம்வந் தொருங்கு சூழ்ந்தார். (கரு)

வேறு.

அன்ன மாதவர் யாவரு மெம்முட லகத்தினும் புறத்து
முன்னு நன்னிமித் தம்பல வேககா லத்திலிம் முளரித்
துன்னு நம்மவ ரொவ்வொரு வருக்குமிக் கின்புறத்தோன்றற்
கென்னை யோநிப மென்னயோ சனைபுரிந் திருந்திடு மெல்லை. (கசு)

வான துந்துபி யோவென வழங்குகெம் பீரவான் வாணி
யான தங்கெழுந் தரியருள் சேடனுஞ் சேடன்மெய் யன்பாற்
கான மின்னதில் வாழுநும் புண்ணிய கௌரவ கனத்தான்
மேனி மிர்ந்தெழு சூதமூ லத்தொளி மிளிர்சுயம் பிலிங்கம். (கஎ)

அமிர்த ரூபமாய் மல்லிமுன் வல்லிகள் செறிந்துசூழ்ந் தடர்பு
நிமிர்த ருங்கிரு காந்தரத் திலங்குமந் நிமலமா விலிங்கத்
துமைம ணாளனைத் திருமணு ளன்றனி யருள்பெறீஇ யுவந்திங்
கமைய நேர்தொழற் காதர மீதரப் போதரு மகிகோன். (கஅ)

* கடம்-வழி.

அன்ன சேடனிங் குறுதனு மருந்தவப் பயனென வறிமி
னின்ன காரண மேகிமித் தம்பல நிகழ்ந்தநும் மெதிரே
யென்ன வோதிய வுடலிலாத் திடமொழி யமுதமுண் டிலங்கு
நன்னர் மாதவர் வேறினி யாதுகொ லின்பென நயந்தார். (கக)

அனையர் சூழன்முன் னனந்தர மனந்தனு மனந்தநல் லினந்தன்
றனைய ளாவிய வெதிர்வர முதிர்வர முனிவரர் தாஞ்சென்
றினைய தென்பதி லின்பமெ யன்புற முன்புறீஇ யிம்பர்
வினையை யோவிய மேவிய காவிய நாவியல் வேந்த. (உ0)

இந்த மாவனத் தெல்லையில் வரத்தினோ டினிதுவீற் றிருக்கு
மந்தி ரேசன தருட்பெருந் தரத்தினோ மறுதமர்ந் தீண்டு
வந்தி யாம்புரி யருந்தவ வுரத்தினோ மற்றெறனோ வமையு
மெந்த வாய்மையு மின்னநின் வரத்துயர் விசைப்பதை யெவனும். (உக)

என்ன வின்னன வின்னுரை முன்னுரைத் தெதிர்தழீஇ நமந்தா
ரன்னர் யாரையு முன்னமந் தடிக்கடி யருந்தவப் பெரியீர்
பொன்னை நாதனைப் பல்லுகம் வெரிந்மிசைப் பொறுத்தபுண் ணியமோ
பின்ன ராங்கவ னருள்பொழி கருவொழி குருமொழிப் பேறே. (உஉ)

எத்த லங்களும் பத்தியான் மிக்கிறைஞ் சத்தகு மிருஞ்சி
ரித்த லத்தெலை புகப்பெறீஇ யெளிதுட னித்தவப் பேற்றால்
வித்த கத்திரு * மும்மையா லருளுல காட்சி செய் விமல
வுத்த மத்தவ குலதரி சனத்தனிப் பேறுபெற் றுவந்தேன். (உங)

இனிப்பெ றற்கரும் பேறுமற் றுண்டுகொ லெனக்கென விசைத்தாங்
கினிப்பு றக்கலந் தழைத்துறு குலந்தழைத் தெழுமுனி வரர்தாந்
தனிப்ப ரன்கரு ணைகரன் மிருகண்டு தனயனுச் சிரமந்
தனிற்பு கப்புகுந் தருந்தவ விருத்திக டமில்வினு யமர்கால். (உச)

நான மாதிகட் கெவருமிக் கன்புற நயப்பது நலமிக்
கான மார்க்கண்ட தீர்த்தமென் றவர்சொல வினவியவ் வகீசன்
ஞான மாதவ ரோடுறீஇ யங்குமா சங்கற்ப நவின்றவ்
வான நீர்குடைந் தவட்புரி நியதிகண் மரபினுல் வயக்கி. (உரு)

வேறு.

கோதான முதலாய குலதானம் பலதானங் குளிர்வ தான
மேதாந முனிவோர்கள் வெறுக்கையுறு வகைவேண்டி வெறுக்கையோடு
மீதானத் தருவாதி விருதாநந் தானமென வெள்க நல்கி
யாதானம் புரிந்தனல்வேட் டருந்தானந் தம்முனிவர்க் கார்வஞ் செய்தான்.

* மும்மை-விபூதி ருத்திராக்ஷம் சடை.

இவ்வாறு செவ்வாறற் றியன்முனிவர் பயன்முனிவர் தேற்ப நல்கு
மவ்வாதி சேடன்மதித் தமுதாதி நாளளித்த வாசான் சொன்ன
மைவாழுங் களத்தமுத மயலிலிங்க தரிசனத்தின் வாஞ்சை கூர்ந்திங்
கெவ்வாயின் னமுதசுயம் பிலிங்கம்வீற் றிருந்தருளு மியம்பீ ரென்றான். ()

அகியரசு புகலுறுமவ் வாசைமொழி நேசமொழி யறவி ளைய
தகுமுனிவ ரகநெகிழ்பு சாற்றுகின்றார் முன்னாகோ தரகு லேச
முகமுருவங் காண்மோவ முதலிங்க தரிசனநிம் முளரி யிற்பல்
லுகமுறினு மெமக்கெவணு முற்றெமது கண்ணுக வுணர்த்திலாயேல். (௨௮)

இங்குநினைக் கொண்டினிய விலிங்கதரி சனப்பெரும்பே றெய்த லாலே
எங்களிரு கண்ணீமெய் யேமுகய னன்றுகரி யினிவே றென்னே
தங்கியும்பன் னெடுநாளித் தலச்சிறப்பு நினதருமைத் தவாங்கு ரம்மே
யொங்கியெழுந் தனவிலிங்கத் துயர்வேது முணர்ந்திடும்பே றுற்றிலேமால்.

என்றனைய முனிவருவந் தினிதிசைப்ப வவரோடு மனைய ரோடு, மன்றி
னிய சூதவனத் தமுதமய சுயம்பிலிங்க வருமருந்தை, நன்றுதுரீஇ யெங்
கெங்கு நடந்துறுங்கான் மார்க்கண்ட நளினி தீரத், தென்றுதய திசையணித்
தா யிசைப்பரும்பல் வளஞ் செறிந்தோ ரிடந்தோன்றிற்றால். (௩௦)

ஆங்கதுகண் டுறும்பொழுதா ரமு தினினித் துளங்களிவித் தருள்வந்தீர்த்தாங்
கோங்கியெழு மின்னிசைகேட் டிவ்விடமோ வெவ்விடமுண் டும்ப ராவி
தாங்குகளத் தமலனமர் தானமவ னமுதவுருத் தவரு தென்றுந்
தேங்கமுதம் பொழிதிறனே*சீரிதுவென் றுளங்களிப்பச் செல்லா நின்றான்.

வரவரவவ் வொலியெழுத்தின் வடிவாக மாதேவா மணிகண் டாசங்
கரவரவு மாகாந்தா கைலாசா சைலேசா கங்கை நேசா
பரவரத பூதேசா பாசுபதே சாசுவதா பரமே சாபூ
தரவரபூ டணசாம்ப சதாசிவமந் திரநாதா தாணு சம்போ. (௩௨)

சந்திரசே கரவாம தாண்டவமுற் றுண்டவபஞ் சாக்க ரேசா
சந்திரகாத் திரவிலோ சனாத்திரைய வினத்துயர்மா சரும வேகா
சந்திரளம் புயதரகோ சராசனபல் சுராதிபனே சருவே சாநெஞ்
சந்திரமா மன்பருளத் தனிக்கோவி றனக்கோவில் சாந்த வாழ்வே. (௩௩)

என்பனவா தியநாமத் திலங்கொலியா யெழீஇச்சுகமா யினித்த லான்மெ
யன்புநிறை சுகவொலியீ தாமெனவுட் காமுறவாங் கணுகுங்காலவ் [கன்
வின்பவொலி பன்னிறத்த விருஞ்சிறைப்பைஞ் சுகவொலியா யினிது மல்
முன்புதெரீஇ யிங்கிமித்த முன்னியது முடிக்குமென†முடிந்துகொண்டான்.

---

* சீர் = ஒலி.
† முடிதல் = எண்டுமுன்றனையின் முடிதல்.

அனந்தரமா தவர்சூழ வாங்கணுகி மாங்குயில்க ளழைக்குமோசை
கனந்தருசா ரிகைசுவா கதங்கிலவென் பனவாதி கழறு மோசை
நினைந்துருகி மயினடமுன் னிலைநினைப்பித் துலைமெழுகி னெகிழ்ச்சி காட்ட
வினந்தருவண் டிசையாதி யேத்துறுமங் கடனுங்க மெனமுன் கண்டான்.()

சாதிமா லதிமயிலை தளவுமுத லளவில்கொடி ததைந்து மல்கி
மீதுபடர்ந் தலர்துறும்பல் விருக்கமுள முருக்கமுத விமல லிங்க
பாததரி சனநிமித்தம் பகிரண்ட நிரைகளினும் பயிலா நின்ற
வாதிதிருக் கயிலைநிரை யடைந்தவண்சூழ்ந் தனவெனுமா றமையக் கண்டான்.

சேகரபூ ருகநிகரஞ் செறிதளிரின் றிருவர்முனந் தேட நீடுஞ், சேகரவெற்
பொன்றலபஃ றிரள்கொலென நின்றொளிரச் சேய்மைகண்டான்
சேகரவா திவர்பரமன் றிருவருளிற் பெருகருவித் தெளிதேங் கண்டான்
சேகரண மிறக்குனித்த செம்மலைக ளெனவிதழிச் செறிவு கண்டான்.(௩௭)

இத்தலத்தோ ரணுவளவா கினுமீகை மலையளவா மிரும்ப யன்க
டத்தமகை யுறனிதரி சனமெனவே யிலாங்கலிக டமக்குச் சின்னீர்
துய்த்திடமுன் னல்கியவச் சுநாசியமர் சுதன்மைமுனங் துலங்கப் போந்து
பத்தியினல் விளநீர்கள் பற்பலதந தலங்கரிக்கும் பரிசு கண்டான். (௩௮)

உத்தமர்நூற்கவிசுலபத்துணர்வரிதாய்வெற்றென்னுதூரனதாகி, மெய்த்தகு
சொற்றொடருடைத்தாய்விழுப்பொருளாழ்ந்தினிபபுறவுள்விளங்கல்போற்க
வித்தமிதற்கெதிர்மறையாவினைநாவல்பலத்தோடுமெதிர்வகண்டான்,மொய்
த்தெழுமுக்கனித்தொகைகண்மூவகைநூற்றிறத்திலகுமுறைமைகண்டான்

சம்பீர மிலிகுசமென் றன்பெயர்க்கேற் றிடக்கன்னித் தைய லார்தஞ்
சம்பீர மிலிகுசமாத் தனிகாட்டுங் கனிகாட்டித்தான்யோ கிக்குஞ்
சம்பீர நிரைகளைச்சா மீகரப்பஃ றிரளைகளைத் தங்கைநீட்டிச்
சம்பீர வடியருக்கீ தரவெதிர்பார்த் துறுங்கொடைஞர் தாமாக்கண்டான்.(௪௦)

நீடுபல பொருள்களெலா நிறைந்திருந்துந் தாழ்ந்தடங்கு நிலைமை வாய்ந்து
பீடுபெறுமணித்தொகையாய்ப்பெருமுடிப்பாயருள்கொடைஞர் பெற்றிகாட்
டுந், தாடிமமும் பெயராலுந் தானிழிந்து முளபீசந் தனைமுன் காட்டி
யீடிலிடம் பனைப்போன்றங் கிலங்குறுமுந் திரிவிருக்கத் தியல்புங்கண்டான்.

இவ்வகையின் மற்றுமவ ணிலங்குபல நலங்களெலா மிதயானந்தச்
செவ்விமிகக் கண்டுகண்டு செலுஞ்சேட னெதிரவண்விசேடமேன்மைத்
திவ்வியதேத் துயர்விருக்க சேகரமாய்த் தோன்றிடவோர் சேக ரந்தா
னவ்வியன்மா வணித்திதழி யருண்மலிகூ விளம்பாரி சாத மாதி. (௪௨)

சூழுபுவா னிவந்துறவத் துருமங்கண் மீப்படர்ந்து துவன்றி யெங்கும்
வாழியன்மா லதியாதி வல்லிகள்பே ரில்லிதெனு மாண்பிற் சூழ
வேழிசைய பிரமரங்க ளிருஞ்சாம கீதமினி திசைப்ப மல்குங்
கேழிசைய வொருசூழல் கெழுமுதல்கண் டுழுவலன்பின் கிழமைகூர்ந்தான்.

அளிகிளர வாங்குறுங்கா லச்சூழ லுட்சார்ந்தங் கரிது நீங்கி
யொளிகிளரு மடிமடைவிண் டுறுகாலின் மறுகாலி னுயர்பால் வெள்ளங்
களிகிளரப் பிரவகிப்பக் கற்றினங்க ளுடன்பல்வலங் * கண்டு தாழ்ந்து
தளிகிளரப் புறம்போந்து தன்னெதிரே பன்னிரைகள் சார்வ கண்டான்.

பாற்கடலின் மேற்படப்பெய் பசுக்கடம வசுக்களுடன் பரவி முன்செல்
காற்கடவு ளருள்வெள்ளங் கைம்மேல்வந் துய்ம்மேன்மைக் கனம்பெற்றாங்கு
நூற்கடனீத் திலகனந்த னுவலரிய சிவானந்தா னுபவி லாச
மேற்கடவச் சென்றாங்கு விதப்பருமற் புதப்பரம விளைவு கண்டான். (௬௫)

தோற்றுறுமச் சூழலிற்சார்த் தூலகுலம் வாலதியாற் சோத னித்தொண்
டாற்றமுய லிரலைகுடா வடிகிளைசூழ்ந் திறைஞ்சுபுயோ காதிதொண்டு
போற்றியதா மும்பணிந்து புரியோகத் தினிதமரப் புழைக்கை நீர்தூ
யேற்றபணி கயஞ்செயக்கண் டரவம்பாங் குபசாந்தத் திறைஞ்சிச் சூழ.(௬௬)

இன்னனபல் விலங்கினமு மிருங்ககமுற் குலங்களுமவ் வெல்லை யாற்று
முன்னருமற் புதச்செயல்கண் டலைவாத வானந்த வுததி மூழ்கி
யென்னையுடை யானமுத விலிங்கேச னெழுந்தருளி யினிது வாழுந்
தன்னிகர்மா தலமிதுவோ தகும்பணிசெ யிவரெம்மா தவர்க ளேயோ.(௬௭)

என்றுவினாந் தன்புறமு னேகியெதி ரடிக்கடிவீழ்ந் திறைஞ்சி யெம்மான்
முன்றிலரும் பணிநாளு முயல்கின்றீர் திருத்தொண்டீர் முன்னு ளென்னு
லின்றுநும தரிசனப்பேற் றினுக்கியன்மா தவமென்னோ வெளிய னேனைக்
கொன்றைமுடி யானேன்று கோடலுநுஞ் சங்கமத்தின் குணமே யென்னு.

அன்புறாபற் பலபுகன்றாங் கருளீர்ப்ப வுட்புகுந்தா னமுத மாண்பே
ரின்பமய சுயம்பிலிங்க வின்னருண்மந் திரநாத னெழிற்கோ லந்தன்
முன்பிலகு முறைகண்டான் முதமகோ ததிமூழ்கி முன்ன மாதி
தன்பழைய கரணமெலாந் தணந்தொழிய மணந்தசிவந் தானே யானுன். ()

சீவகுண சேட்டிதமோர் சிறிதுமிலான் றிருமுனந்தான் செய்த†லோதல்
யாவதுமோர் வரிதாய்ப்பற் றிலாததொரு தம்பமென வெதிரிற் றாழ்ந்தா
னேவரிய சிவானந்த வுததியினுங் கரையிலா தொன்றி வாழ்ந்தான்
றேவர்பிரா னருளெடுப்பத் திரையூடு கரையேறித் திருமு னின்றான். ()

* கண்டு-செய்து. வசு-பசுக்கன்று.

† ஓதல்-நீங்கல்.

அருண்மேனி யமுதவொளி யழகெறிப்ப வணித்ததுகண் டண்ணு லிந்தத்
திருமேனி திகழ்தரவிச் செகமுழுதும் புகழ்தரஈ திவிய லிங்க
வுருவாகி வுதித்தெழுந்திங் கொருவாம லுலகமெலா முலவா வின்பப்
பெருவாழ்வு பெறவமர்ந்த பேரருளிப் பேதையுணர் பெற்றித் தேயோ.

உமையாலு முளத்தாலு முணர்வாலு மொருநான்கி னுச்சி யாலும் [தே
வமையாகின் னருட்பெருக்கெவ் வகையாலு மணுத்துணையும் வழுத்தொணு
புமையோடு தமையோடு புன்மொழிலே துன்றியலிப்புழுத்தநாயேன்,கமையா
வன் மனத்தெளியேன் கருதுவதோ விதிர்விதிர்க்குங் கடையேனுள்ளம்.()

அகிலேசா சுயம்புலிங்க வமுதேசா முழுதருளம் பாநே சாவிவ்
வகிலேசா யினுமளியு ருதெனு தெளேயுமளித் தருள்சு ரேசா
முகிலேசா முடித்தூசா மூதேசா பூதேசா முன்னு ளன்னே
நகிலேசாத் தியவடுக்கொ ணடநேசா படனேசா நானூல்வாசா. (ருங)

என்றினைய துதிகள்பல வெடுத்திசைக்குந் தொடுத்திசைக்கு மிடையேயின்
பந், துன்றிருக ணீர்மாரி சொரிந்திடுநாத் தழுதழுப்பச் சொற்கள் சோரு
மூன்றிலடிக் கடியிறைஞ்சு மொழிகுழறும் பினுந்துதிக்கு மூகமாகு
மன்றகிவேந் துற்றுளவா ராமையெவ ரளக்குநர்முற் றறிதேயம்மா. (ருச)

இவன்செயலிங் கிதுவாக வினிதுடன்சா ரிருடிகுழாமெல்லாங் கண்டாங்
குவந்தனர்பன் முறை யிறைஞ்சி யுருகினரிவ் வமுதேச னுருவங் காணுஞ்
சிவந்தரவந் தருளியவிச் சேடனே விசேடகுல தெய்வ மென்பார்
பவந்தெறுநங் குருவென்பார் பரகதிக்கு வித்தென்பார் பரமனென்பார். ()

பன்னுளிங் கமர்ந்துளநாம் பரிந்துபுரி யருந்தவமெய்ப் பலனே வென்பா
ரன்னேவிப் பணியரசுக் காற்றுறுகைம் மாறெம்மா லாமோ வென்பார்
முன்னுளிங் குளதெனிவிம் முளரிமுழு துலாவியவெம் முற்ப டாதோ
வின்னுகர்கோனன்பே யிவ்விலிங்க வுருவாகி யெழுந்த தென்பார். (ருசு)

அன்னேவென் புகன்றவா றமுதசுயம் பிலிங்கமிஃ தநாதி யேக
முன்னுதற் கென்னதவ முற்றினமுற் படவெளிதோ முளரி வாழ்க்கை
மின்னுத குரவனருள் வியனுபதே சப்பேற்றின் மெய்ம்மை தேர்ந்த
வின்னேன்வந் திலனேலிவ் விலிங்கமதி தூரமக் கின்னு மென்பார். (ருஎ)

இவ்வகைபற் பலபுகன்றுங் கின்புறுமெ யன்பினமு தேசபாத
திவ்வியசரோருகம்பன் முறையிறைஞ்சிச் சிவானந்தந் திளைத்து வாழ்ந்தா
ரவ்விருடி குழாம்பணிவேந் தமுதலிங்க தரிசனம்பெற் றடுத்த வந்நாட்
டைவருபூ சங்குருவா ரம்பருவ மாயவதி சயத்தை யோர்ந்தான். (ருஅ)

வேறு.

முன்னுந் தில்லை மூளரியின் மாநடந்
தன்னை நாந்தரி சிப்பத் தருந்தின
மின்ன மாவனத் தீசனைக் காட்டிற்று
லென்னை யோவிதற் கீயுங்கைம் மாறியாம். (௫௯)

யாதீ நல்கினு மின்னதற் கோரணு
வாத லொப்பரி தாதலி னித்தகு
மூதி னத்திம் மூளரியி லீசனைப்
பாத சேவை பரிந்து புரிந்தவர். (௬0)

ஆச ரத்தபி டேக மருச்சனை
மாத ருற்சவ மாதி வயக்கினோர்
காதன் முற்றுமுன் பெற்றருள் காட்டுமா
மோத வுத்தம மோக்கமு மேற்கொள்வார். (௬௧)

என்ன மாண்பல வாசக மீதுரைத்
தன்ன வாரமு தேசனை யாசையிற்
பன்னு மாமலர் பைங்கனி யாதிகொண்
டுன்னு பூசை முறையி னுஞற்றினன். (௬௨)

என்று நந்தி யியம்ப வெதிர்தொழா
நின்ற வம்புய னும்பல்பி னேயமிக்
கொன்றி மேற்பன்ன கேச னுஞற்றிய
நன்றி யெந்தை நவின்றருள் கென்றனன். (௬௩)

சனற்கு மார னுவகை தழைப்பமேன்
மனக்கு லாவுநந் தீசன் வழங்கியாங்
கினக்கு மூங்கொ ளிருடிகள் கேண்மினீ
ரெனக்கு ணுகர சூத னியம்புமால். (௬௪)

வேறு.

இனைய காதையி சைத்துளா ரினிது கேள்விம டுத்துளார்
வினைகள் யாவும்வி டுத்துமேல் விளைபல் போகநு கர்ச்சியார்
பனக கோவின்மு டிக்கணீள் படியி னுயுண்மி குத்துவாழ்ந்
தனக பாதநி ழற்கணே யமல யோகினி லைப்பரே. (௬௫)

சூதவனஞ்சென்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-எ௩௬.

---

# ஆதிசேடன் றிருப்பணிச் சருக்கம்.

அன்பேறு சேடன மாவன மன்றேகு காதையிதோதினம்
பின்பாதி சேதிம மாதிய பின்றுத நீள்பணி பீடுயர்
கும்பாபி டேகமு ஞயசெய் கொன்பேசு வாமினி மேலென
நம்பாவ நாசசு போதக நந்தீச ஞதர வோதுறும். (க)

வேறு.

தாதை மைந்தனென் றோது தபோநிதே
* போத னந்தன னந்தரம் போற்றுமா
நாத னெந்தை நயந்தமர் கோயில்செய்
காத லுந்து கருத்தனி தாற்றுமால். (உ)

பாங்கி னின்ற சுரத பதியைநீ
யோங்கு சேதிம மோது முறுப்பெலாந்
தாங்கு வானவ ருருஞ் சமழ்ப்புற
வீங்கெ மீசற் கியற்றுகென் றேவினுன். (ந)

பின்னு மெந்தை பிரானடி யர்ச்சனை
யுன்னி யாற்றற் குழுவலன் புந்திய
வன்ன பூசைமா சாந்திகட் காம்பொரு
ளென்ன வுங்கொணர் மின்னென வேவினுன். (ச)

உழைய ராங்கவ் வுரைசிரங் கொண்டுசென்
றுழிவி லாவவ் வுபகர ணம்மெலாங்
குழுவின் மல்கக் கொணர்தரு முன்னவட்
செழிய புற்கொடி யாதிய சித்தரோ. (ரு)

பாலு யாய்மருந் தாய தேனும்படி
கோல முற்றுஞ் சுராதிகொள் கோக்களன்
பால ருந்த வருச்சித் தருத்துபு
சாலு மெய்ப்பயன் பற்பல சார்ந்தனன். (சு)

பளிக்கு மேனிப் பரனமு தேசனுட்
களிக்கு மப்பிர தேசங்கண் ணுடிபோ
லொளிக்கு லாவிய வொப்பச் சமன்செயாத்
தெளிக்கும் போழ்தத் தினகரன் றன்கரம். (எ)

* போதனந்தன்-சென்ற அனந்தன்.

சிறிது மெல்லெனத் தீண்டுறக் காண்டலு
மிறை யிலிங்க முடித்தனி ருகரம்
பொறைசெய் வெண்குடை பொற்ப நிழற்றும் வாழ்
வுறநி னேந்திர கேசன்மு னுற்றனன். (அ)

அதற்கு முன்ன ரமரர் தபதியங்
கிதற்கு நேரிலை யெந்தவண் டத்துமென்
பதற்றி ணங்கொரு பைம்பொன் மணிக்குல
விதத்தொ ளிச்செய் விமான நிறீஇயினன். (கூ)

யாமி யத்தொ ரிலங்குபொன் மேருவிப்
பூமி யுற்றது கொல்லெனும் பொற்பது
தேமி குத்தெழு திண்கயத் தெண்குல
நாமி கப்பொறை யாற்று நலத்தது. (கo)

அனந்தன் கூர்மன் முன் னுயவ ரண்மிபாங்
கினந்தி கழ்ந்துற வேண்டு மிடந்தொறுங்
கனந்த ரப்பொலிந் தோது கவின்மிக
மனந்த ருக்கி வகுத்துறு மாண்பது. (கக)

பானு வான்செல் பரிசுகோர் பார்த்துமப்
பானு வொன்றிவட் பற்பல் பசுங்கதிர்ப்
பானு நின்றொளிர் பான்மையி தென்னையென்
பானு றும்பொற் கலசம் பரிப்பது. (கஉ)

வானி ராசியு மல்லவிம் மண்ணுலா
மானு மல்லவக் கோபுரத் தானல
வேனை யாண்டைய வென்னப்பல் லேற்றின
மேனி லைத்தெழில் செய்ய மிளிர்வது. (கங)

ஐந்தி லிங்கத்தி னொன்றதி தாலமா
முந்தி லிங்க மெனவின் முடிநிறை
யிந்த ணிந்த தெனநித் திலத்தினத்
தூந்து மொண்குடை சென்னி யொளிர்வது. (கச)

அன்ன தற்கிரு பான்முத் தவிர்மணி
யின்னி யற்றிரண் டேழையர் சாமர
முன்னர் வீசுபு நிற்றலம் மொய்திரை
மன்னு கங்கையின் னுரொன வாய்ந்தது. (கரு)

மாற்று யர்ந்தவட் டாபத மாமணி
யாற்றி கழ்ந்து சிவாகம யுத்தமாய்த்
தேற்றி யெங்குஞ் சிவனே பரமென
வீற்று வீற்ருெளிர் விம்பங்கண் மேயது. (௧௬)

நித்தி லத்தொடை சூழ நிரைஇ நவ
ரத்தி னத்தினு நாற்புறஞ் சித்திர
பத்தி மிக்கெழச் செம்பது மத்தணி
மத்தி வைத்த விதானமுள் வாய்ப்பது. (௧௭)

புத்தி சற்றுமில் புன்மைய ரோதுத
ரத்த தாங்கொ னவிற்றரி தோர்ந்துண
ருத்த மப்புல வோர்க்கு முறுப்பெலாஞ்
சுத்த யோகருட் டோன்றவ் விமானமே. (௧௮)

இனைய மான விமான மிலங்கமேற்
புனைக ருப்பக் கிரகம் பொலியுமவ்
வனைக னைம்முக ஞதலி ஞற்றிசை
யினிலுங் கண்ணடி யேநிரைத் தாலென. (௧௯)

நாற்பு றத்து நலந்திகழ் பித்திகை
யேற்பு றப்பளிங் காலுறப் பியாவையு
மேற்ப டுத்தி வியன்மணிச் சாளரம்
யாப்பு றுத்தெழின் மல்க வியற்றினன். (௨0)

வேறு.

இவ்வகையி னமுதசுயம் பிலிங்கசதா சிவார்ச்சனைக்கவ் விறைவ னைந்து
தெய்வமுகோற் பனமுனிக டிருக்குலத்தார் சிவசாதிச் செல்வ ராதி
சைவசிவ சமக்கார சர்வாதி காரரெனந் தணரே யல்லா
லவ்விடையுட் புகுதும்விதி யார்க்குமிலாக் கருவின்முடித் தமைத்த பின்னர்.

அரனரியம் புயன்மகவா னுமிவர்நாற் சாதியரென் ருரணஞ்சொன்
மரபினில்லை சியவயன்றன் வத்திரோற் பவமுனிவர் மரபிலங்க
வருமறையோர் புகுமருத்த மண்டபஞ்சத் திரியமனர் வணிகர் சற்சூத்
திரர்புகுமா மண்டபமுன் றிகழாறு காற்பீடஞ் சேரச் செய்தான். (௨௨)

அடுக்குமா ளிகைநிரைவிண் ணகமேபோழ்ந் துவனைதா னமைத்த வேணி
கடுக்குமா றெழீஇச்சூழ்ந்து கவினமுதற் பிரகாரங் கண்டான் மேன்மேற்
றொடுக்கும்வா னகருமிவட் டென்னுறப்பல் லேணிவைத்த தோற்ற மென்ன
வடுக்குறுமைந்தாவரண மதில்களின்மேன்மேலுயர்கோபுரங்கள் வைத்தான்.

ஆவரண மைந்தினுமாங் காங்குபரி வாரகுல வமரர் வாழ
மாவரண வுறையுள்பல மணிபொன்னாற் புரீஇப்பளிங்கு மணிச்சி லாதி
யாவிரிபன் னிலங்களுமொப் பமைத்தனைய குட்டிமஞ்சந் தரும்பொ னுற்றிச்
சேவினமுஞ் சிவகணமுந் திருமதில்க டொறுந்திகழச் செறிவித் தானால். ()

முரணிடப நந்தியபி முகவாயி லொருமருவ முதிய செம்பொ
னரதநமா தியதிகழ்மண் டபங்கள்புரீஇ முதல்வாயி லங்க ணீசா
பரதலமேற் பொன்னூலம் பரதலமே னிமிர்துசத்தம் பங்கி றீஇமா
திரமிருநான் கிலுமனைய சேவேறு கொடித்தம்பத் திறந்தா பித்தான். (௨௫)

அனகன்விழாக் கொண்டருளு மணிவசந்த மண்டபஞ்சி வாக மாதி
புனிததமிழ் வேதசிவ புராணாதி திருமுறையைப் பூசித்தென்றுங
கனிதருமன் பருண்முனூறீஇக் களங்கறமுற் றுணர்ஞானக் கனுவ லோர்பு
வனமுய்சிவப் பிரசங்கம் வயங்குறசெய் வித்தியா மண்டபந்தான். (௨௬)

ஆயிரவிற் காணிறுவு மணிமணிமண் டபஞ்சததம் பாதி சேய
மாயிருமண் டபம்யாக மண்டபமா மறைநீத மண்ட பாதி
தூயபல வங்கமெலாந் துதைந்திலங்க வமுதலிங்க சுயம்பு நாதற்
கேயமகா சிவலோக மிதுவேயென் றெடுத்தோத வியற்றி னானால். (௨௭)

இம்முறையே மும்மையினு மெய்ம்மையுண் மெய்ம்மையுல கெல்லா மீன்ற
வம்மையமர் செம்பொன்மணி யாலயமு மாலயன்முன் னமர ராதி
மும்மையுல கமும் வியப்ப மூதண்ட பகிரண்ட முழுதும் வாழ்த்தச்
செம்மையபல் லங்கமெலாஞ் சிறந்தோங்க சிறந்தோங்கச் செய்து மேலும். ()

தூய்மையதாய்த் திண்ணியதாயத் தொழிற்கினிதா யிழுக்கிலதாய்த் தொன்
னூல்சொல்லும், வாய்மையதா யொண்மையதாய் வயங்கெழின்மாண் சிலையி
னிபமாமுகத்தோன்,றூய்மயிலூர்பரன்மூவர்சௌராதிசண்டாந்தசபரிவாரச்,
சேய்மையரமருமுருவத்திருவுருவோவெனாவியப்பச்செய்துமேலும். (௨௯)

அண்ணறனக் காவிடையா வருட்சத்தி பீடமுஞ்செய் தாங்குக் கண்டோர்
கண்ணடியோ மரகதமோ கருஞ்சிலையோ வன்றெனவே கழறி முற்று
மெண்ணரிதாயிறுவரையுமீதலவென்றேமறைகளிறையையோதும், வண்ண
மெனத்துணிந்துரைக்கும்வகையெவர்க்குமரிதாகுமாண்பிற்றந்தான். (௩௦)

திருவிழாக் கொண்டருள்சோ மாக்கந்தர் மதிமௌலி சிற்ச பேசர்
கருவிழா தெமையருளுங் கணேசர்வான் பிடிகுறமின் களிக்கு நேசர்
மருவிழா விதழிமுடி வாங்கினரத் திரதேவர் முதலோர் வண்சீ
ருருவி*ழா விருதசாம் பூநதத்தா னிருமித்தாங் கொளிர்வித் தானால். (௩௧)

* ழகரம் - எதுகைநோக்கி ழகரமாயிற்று; உழ்கியென்றாயதுபோல.

இருமணியி னிருமிதஞ்செ யிருவகையிம் மூர்த்திகளுக் கெல்லாஞ்செம்பொ
னருமணியின் வருமணிக ளளப்பிலசெய் தழுதேசர்க் கைந்து சென்னிக்
குருமணிய சுடிகைதிகழ் கோளபாப் படங்கவிக்குங் கோள காதி
திருமணிய வுபவீதத் திருவணிமு னெல்லாமுந் திருந்தச் செய்தான். (௩௨)

இப்பரிசெல் லாம்புரிந்தாங் கெதிர்நின்ற மயனுடல மிறுகப் புல்லி
யொப்பரிதாய் நீயிவண்செ யுதவியுரை யளவைகளி னுணர்தொ ணாதா
லெப்பெரியவருக்குமெனில்யான்கொலனு வெனுங்கைம்மா றியற்றவல்லே
னப்பரம னருள்வீடு மதற்கிணையோ வன்றேமற் றறியே னம்மா. (௩௩)

என்றுபல புகன்றிணையொன் றின்றெனினு மரபிஃதங் கீக ரிப்பா
யென்றுபல பலபொருளி னிருங்குவைக ளரும்பணிமு னெல்லாந் தந்தாங்
கென்றுறழ்மா மணிப்பணிவே தின்புறுமெ யன்பினமு தேசன் பாதத்
தென்றுணையேகும்பாபிடேகமினிக்கொண்டருள்கென் றிறைஞ்சிப்போந்து

முனிவர்நிக மாகமநூன் முற்றுணருஞ் சிவத்துவிச ரூதக் கோர்மற்
றெனையரொடுஞ் சூழ்ந்தனுஞை யெழுவாயமா கும்பாபி டேக மீறு
மணியசிவ மகாயாக மகாசாந்தி புரியோரை மாசொன் றின்றாய்ப்
புனிதமதாய்ப் பொன்மதிமுற் புணர்சுபநோக் கணவுநலம் பொலிவ தாகி.

திரிகோணங் கேந்திரமா தியநலன்பல் பயன்மலிந்து சிறப்பத் தீககோண்
மருவாது துனித்துநிறை மதிநாணிச சயித்தனைய மாசு ணேசன்
பெருகார்வத் தழுதேசன் பேணுதளிப் பூர்வதிசை பிறங்கப் போந்தாங்
கொருவாதொன் றிலஞ்சிதன்பே ருறப்புரிந்து மயனலவ் வுயர்த டாகம். ()

மேற்றிசைமார்க் கண்டமுனி வியன்றடமிவ் விரண்டினுக்கு மிளிர்சோ பான
நாற்றிசைமா மதிலாதி நயப்புறுத்தி வியப்புறுமெயஞ் ஞானம் வாய்ந்து
போற்றிசையுஞ் சிவத்துவிசர் புந்திமகிழ்ந் தனவரதம் பொலிந்து வாழ
வேற்றிசைவான்றொடுகுடுமியெழின்மணிமாளிகைபலவோங்கியற்றுவித்தான்.

முற்பெறவச் சகருடும்ப முதியசிவ மறையவரை முழுத்த நன்று
ளிற்பரவு பற்பல்பொரு ளெல்லாமு நனிநிறைத்தவ் வில்லந் தோறும்
பொற்புறுமா பிரதிட்டை புரிந் தமைத்தாங் கேனையவும் புரிந்து செய்யு
மற்புமிகு மகிவேந்த னந்நாட்டு மகிவேந்தா மபயர் கோமான். (௩௮)

சாற்றுறுபே ரிராசசூ டாமணியென் பான்றனையித் தலத்தி ளும்போந்
தாற்றுசெய லுளைத்தழைமி னந்தணர்கா ளெனவிடுத்தா னவர்ங் கேகித்
தேற்றினர்கேட் டன்புவகை யிளைப்பவளப் பரியகிதித் திரளி ளேடும்
போற்றுபரி வர்க்கமெலாம் புடைசூழ மாவனத்துட் பொருக்கென் றுற்றான்.

அத்தகைய னிராசசூ டாமணிபோந் தகிவேந்த னடிதாழ்ந் திந்த
வுத்தமமா தலமிதுவோ வெப்புயர்வில் சிவபுரமென் றுவகை யுள்ளம்
பொத்தநடந் தனந்தனெனும் பொன்மணியா திகடிகழும் புனிதன் கோயி
லெத்தலமுஞ் சிவத்துவிச ரிருக்கைகளுந் தனித்தனிகண் டின்புற் றானால்.

என்னுரைக்கே னின்னருமை யெப்பெரிய புலவோர்க்கு மெடுத்துக் காட்டா
முன்னுமாக்குமரிதேசீ யுவந்துபுரி திருப்பணியி னுயர்வென் றானின்
முன்னுரைக்கு மாறேறை முன்னுகினு முற்றுவதோ மூதக் கோயென்
றின்னுரைக்குஞ்சென்னிதனையெதிர்தழுவிப்பணியரசோரிருக்கையீந்தான்.

வேறு.

அத்தலத்தமர்ந்தர சனந்த னேடவ
ணெத்தகு செயலுங்கண் டிருப்ப வவ்விடை
மொய்த்தபல் பொருளெலா முன்கொண் டேகுவா
னுய்த்துள வேவல ருவைகொண் டெற்றனர். (சஉ)

அரிசனப் பெருங்குவா லாங்கொர் பாஙகரப்
புரியிடி யரிசிமாப் புலர்ந்த தாத்திரி
விரியிடி குங்குமம் வியன்மி டாக்களிற்
றெரியொரு பாங்கரிற் செறித்து வைத்தனர். (சங)

அல்கில்பன் மிடாக்களெட் டைல மார்த்தனர்
பொலியும்*வற் சலங்கிளை வேண்டும் போதெலா
மிலகுதோ சனமுற யாத்திட் டாரவைக்
குலவில்பல் லுணங்கிறைந் தொளிர்பல் சாலையில். (சச)

அப்பொழு தப்பொழு தாங்கு வேண்டுபால்
பொற்புறு தயிர்மிடா நிரைகள் பூரித்தா
ரொப்பறு சுகந்தமெட் டிலகுஞ் சூழ்பசுத்
திப்பிய நெய்க்குட மனேகஞ் சேர்த்தனர். (சரு)

நெக்கெழ வின்சுவை நிமிருந் தைவிக
முக்கனித் தொகுதிபன் மூரி வெற்பின்வான்
மிக்கெழச் செறித்தன ரேனை மேதகு
மெக்கனிக் குவாலுமங் கெய்த வைத்தனர். (சசா)

மதுக்குடம் பற்பல மலிபல் லாயிர
முதுக்கழை ரசகண்ட முழுத்த சர்க்கரைப்
பொதிக்குல மனேகமுப் புடையி லாங்கலிக்
கதிர்க்குலை கோடிமேற் கவினச் சேர்த்தனர். (சஎ)

---
* வற்சலம் - இளங்கன்றுப்பசு.

திணியகாழ் நறுங்குற டுரிஞ்சு தேங்கமழ்
தணியபூந் தேய்வைப்பொற் றசும்ப னேகமாங்
கெணியவில் வாதியின் வடித்தி மோதக
மணிகட மளப்பில வாக்கி வைத்தனர். (௪அ)

பன்னிறப் பல்வகைப் பளகில் சாலிக
ளொன்னவு மனேகவெற் பெனக்கு வித்தனர்
தன்னிக ரின்னியற் றூய தண்டுலெ
மன்னவற் றெண்மடங் கதிக மீட்டினூர். (௪௯)

வாடக வொவ்வொரு வகையு மாசுதீர்த்
தாடக மாடமூர்க் கந்தி லாதிய
பீடகத் தானியம் பிறங்கு பற்பல
*நீடக மெனகிரை நிறைத்த மைத்தனர். (௫0)

வில்லுவம் பாடலம் பலாசம் வேணுமா
சொல்லுதும் பரஞ்சமி யித்தி தார்வையம்
புல்லர சால்பலாப் போற்று சந்தன
மொல்லைவெள் ளெருக்குநா யுருவி மூவைந்தும். (௫௧)

திகழ்கருங் காலியே தேவ தாருவே
யகருவா மலகஞ்செஞ் சந்த ஞதிய
பகர்சமித் தெலாந்தனித் தனிபற் பல்கிரி
வகையெனத் துணித்தவண் மலிவித் தாரரோ. (௫௨)

மலிபசுந் தருப்பைகண் மரபிற் கொய்து கொய்
தலகில்பன் முடிகொணர்ந் தாங்குப் பைம்மணி
மலையென வுயர்த்தினர் வகைபற் பன்னவ
கலசமுன் னடுக்கினர் கணக்கி லாதன. (௫௩)

அறிவரும் பொன்னினுல் வெள்ளி யாதியாற்
சிறியன பெரியபஃ றிறத்த பாசன
மிறைசிவ யாகபூ சாதிக் கேய்வகை
யறிமய னிருமித்தாங் களிப்பச் சேர்த்தனர். (௫௪)

கூவிரம் வாரிசங் குமுதங் கொன்றையிந்
தீவரஞ் செங்கழு நீர்முற் சீரிய
பூவின மீனினம் புவன கூர்மமுன்
னூவன பொன்மணி யால மைத்தனர். (௫௫)

* அகம்-மலை.

சூதபத் திரங்கண்மும் மூன்றிற் சொல்லுப
வீதபத் திகண்முடி விளங்கு கூர்ச்சங்க
*னாதபத் திரத்ததேங் காய்க ளாதிய
பூதபத் தியின்மணி பொன்னிற் சேர்த்தனர். (௫௬)

பொன்னினும் பட்டினும் பொருவி லாமணி
தன்னினுங் கவிகைவெண் சாம ராதிகண்
மின்னுமிழ் சுருட்டியா லவட்டம் வீசன
முன்னிவை யளப்பில முற்றி னார்களால். (௫௭)

விலைசெல்காற் பாசமெல் வாசம் வீற்றுவீற்
றலகில்பன் னிறத்தபட் டாடை காம்பரங்
குலவுமொவ் வோர்வகை கோடி கோடியாக்
கலைகளி னளவுறுக் கலைக ளார்த்தனர். (௫௮)

மதிப்பரும் வின்னவ மணிக்கு வால்பல
கதிர்த்தெழு வனகன கக்கு வால்பல
நிதித்தொகை பற்பல் நிமிர்த ரக்கொணு
விதிர்ப்புற வளைகையு மிகக்கு வித்தனர். (௫௯)

வேறு.

கற்பமுறை யமைத்துவடித் தெடுத்துத் தூய கமழ்தருசீ தளவிரைப்பூங் கலவை சேர்த்துப், பொற்புறவாய் தூத்துகிலி னிறுகச் சூழ்ந்த பூரிதவெண் டிருநீற்றுப் புனைபொற் கும்பம், பற்பலசேர்த் தனர்நானங் குங்கு மப்பூப் பாளிதங்கோ ரோசனைவெண் பசுங்கர்ப் பூரம், விற்பெறுதண் புழுகுமுத லளப்பிலாத விரைவருக்க நிரை நிரையா விளங்கச் சேர்த்தார். (௬௦)

விரைகமழு நறுந்தூபம் விரித சாங்கம் விரவுறுபூம் பொடியேல விதந்தக்கோலம், வரமிகுசா திக்காய்பத் திரில வங்கம் வான்மிளகு முதல்வாச வருக்க மெல்லாம், பெருகநிரைத் தனர்யாகத் திரவி யங்கள் பெட்புறவொவ் வொன்றுகப் பேணி யாராய்ந், தரியவெலா மிகச்சுலப மாக வாங்க ளாப்பரிதாம் படிநிறைய வமைத்துப் பின்னும். (௬௧)

அரம்பைநெடுங் குருத்தலரும் பருவம் வாய்ப்பவரிந்துசுமை சுமையாக வனேகஞ் சேர்த்தார், வரம்பிலகாய் வகைமூல வகைக ளுக வல்லிபழுக் காய்வகைகண் மற்றுஞ் சேர்த்தார், விரும்புதளிர் வுகைதுவர்ப்பூ ருகத்த தொக்கின் விதமிருத்தி கைவகைவா லுகவி தங்க, ணிரம்புசிவ நீர்த்தவகைப் பொற்குடங்க ணிகழ்த்து மிவை முதல்யாவு நிறையச் சேர்த்தார். (௬௨)

* சூரியகிரணம் போலும் ஒளியைச் செய்யுந் தேங்காய்.

இவ்வகையே யலர்வேண்டும் பொருளெ லாமவ் வெல்லையெலாஞ் செறிதரச்
சேர்த் திடுங்காற் சேட, னவ்வமுத லிங்கேசற் குளரி ரம்ப வருண்மேனி
குளிர்தரமா வபிடே காதி, திவ்வியபூ சனைபுரிந்து மேற்செ டங்குந் திருத்
தகுமா கும்பாபி டேகச் செய்கை, யெவ்வமுறு தியலுறக்கொண் டருள்க
வென்று வேத்திறைஞ்சி வேண்டுபுமே விதனைச் செய்யும். (௬௩)

சிவத்துவிசர் முகமாக மயனைக், கொண்டு திருத்திரண்டாம் பிராகாரத் தீசா
னத்தி, னவத்தகுமா குண்டங்கள் வேதி காதி நாலிருமங் கலந்தசா யுதங்க
ளூட்டி, சிவத்தகுநாற் றுவாரங்கூர் மாத ளுதி நீடுறு மேல் விமானமே நிக
ழ்வி தான, முவத்தகுபல் லுறுப்பெலா மணிபொ னாற்கொண் டொளிர்
யாக சாலைகளாங் குளுற்று விப்பான். (௬௪)

ஒருகோட்டு முதிர்வேழ மலகில் கோட்டு மிருகோட்டு வான்பிடியோ டொலி
யாருந், திருகோட்டு மாறுமுகங் கண்டெட் கோட்டந் தீரவருண் மதவேழம்
வேதன் சென்னி, யருகோட்டு வண்கைவடு கேசன் மற்று மருக்கன்முதற்
சண்டேச னந்த மாக, வருகோட்டு பரிவாரர் விமான மாதி வகைக்கெல்லாந்
தனித்தனிமா மகப்பொற் சாலை. (௬௫)

அருண்மலரும் பிரகந்நா யகியெம் மன்னை யமுதேச னிருவருக்கு மருமை
வாய்ப்பத், திருமலரும் பிரதான யாக சாலை திகழ்தரச்செய் வித்தரம்பை
கழைதிண் பூக, மருமலரும் பஃறொடை பொன் னரிய மாலை வளரொளிப்
பன் மணிமாலை மணிப்பொற் குச்ச, முருமலருந் தோரணமுன் னணிக
ளெல்லா மொப்புயர்வி லாவகையாங் கொளிர்வித் தானல். (௬௬)

இன்னனபற் பலமுன்ன ரமைய வேண்டு மிருந்தொழில்க டிருந்தநயந்
தெல்லாஞ் செய்தாங், குன்னிநிக மாகமமுன் னோதிக் கைவந் துறுமனுப்பா
வனைசெயறந் திரமுன் னோர்ந்து, சொன்னமரா பங்கக்கீ ளுதி குற்றந் தோயாம
லகம்புறமுந் தூயோ ராகி, மன்னுசபத் தினிகசிவத் துவிசர் நான்கும் வாய்ந்
தவரை யாய்ந்து தெரீஇ மாபிற் போற்றி. (௬௭)

சிவமாகும் பெருவாழ்வு பெற்று வாழுஞ் சிவத்துவிச மகத்துவமான் செல்
வர் காளிப், பவமாகந் தவமாகும் பாபி டேக பரமமகா சாந்தி செயும் பணி
மேற் கொண்டே, னவமாவ தணுவுமுறு வண்ண மன்ன தாற்றியரும் பய
னெனக்கு மளிப்ப தும்பா, னவமாவ தன்றிதுமேற் கொண்டு நீரே நடத்தி
முடித் தருள்கவென நமந்து பின்னர். (௬௮)

அத்தகைய சிவத்துவிசர் தமையெம் பெம்மா னமுதேசன் பெரியநா யகி
யைங் கையோன், சத்திதரன் முதலானோர் வேள்விக் கெல்லாந் தனித்தனி
யே நவநவமாச் சாருங் குண்ட, மெத்தொகையத் தொகையமல போத
கேச ரிருத்துவொடு சாதகரொன் றெண்ணி யின்று, ரித்தகுகுண் டத்தோ
மம் புரிக வென்று வெல்லையுற நியமித்தா னிரும்பை வேந்தன். (௬௯)

அங்கதன்மே லங்கதவேந் துரைக்கி சைந்தாங் கருத்திமிகு குருத்துவப்போ திகா ரச்சீர்ப், புங்கவர்தாஞ் செய்விக்கு மிறைவ னுமைப் புயங்கபதி யிடைராச வனுஞ்ஞை பூணுந், துங்கவினைமுறைமையிற்செய்தந்நாண் முன்னுத் தொ டங்குபுசென் மானசித்தி தொகைகண் முற்றும்,பங்குபதி னொன்றுகப் பரப் பித் தூய்மை பணுஞ்செயலாந் சனபூசை பாங்கிற் செய்தார். (எ0)

பின்னுரிய பிராமணர்த மனுஞ்ஞை பெற்றுர் பெருகுசித்தி தக்கிணைமுன் பேணி யீந்தா, ரன்னையரு ளமுதீசர் தமைமெ யன்பா லபிடேகா திகணி கழ வருச்சித் தேத்தி, யுன்னுதிரு வருள்வேண்டி யனுஞ்ஞை பெற்றுங்குறு செயலெல் லாமிடையூ றென்று மின்றி, மன்னிமுடி வுறவேண்டி விக்கினே சன் மலரடிக்கு மாபூசை வயங்க வாற்றி. (எக)

நேர்ந்துபராய்ப்போந்தமுதநாதனுர்சந் நியின்மகாசங்கற்பஞ்சுழ்த்தி வாழ்த்து, சாந்திபிர வேசபலி கிராமசாந்தி சாற்றிரட்சோக்கனஞ்சீல தயைமீக்கூரத், தேர்ந்துளபூ சினிக்காய்முன் னுவ கொண்டு செய்திளம்புன் முதணிரைத் தான் றிரட்கு லங்க, ளார்ந்ததிருக் கோயிலிட மெங்கு மல்கி யமர்தருகோ கிவாசமுறை யாற்றி னுரால். (எஉ)

அனந்தரம்பூ ருவபுண்ணி யாகவாச னஞ்செய்தரு மறையாக மாதியாய்ந்த, கனதருவிப் பிரவுண்டிமரபிற் செய்தார் கவினுறவுத்தரபுண்ணி யாகங் கண் டார், தனந்தருமா கிருகமகம் புரிந்தார் சங்கி தாவோமந்திசாவோமஞ் சாந்தி யோமம், வனந்தருமா வருணிறையு மூர்த்தி யோம மலிதராவாங் காங்குவிதி வயங்கச் செய்தார். (எந)

வேறு.

இருசேய்க ளொருதாயெம் மமுதேசன் விறைசண் டேசனிவ ருற்சவங்கொண் டெழுந்தருண்மூர்த் திகளை, வருதேச கிரிசூல வஸ்திரமா தேவை பலியுமபி டேகாதி வயங்குறப்பூ சித்தாங், கொருவாவெள் விடையாதி களிலாரோ கணிப்பித் தொளிர்வீதி விழவுறச்செய் துடன்போந்து வில்வத், தருமூலத் தெழுந்தருள்வித் தறுமரபி லினைய தருமூல மிருத்திகைபொற் றட்டதனிற் கவர்ந்தே. (எச)

மாற்றுயர்பீ தாம்பரமேல் வயங்கவிரித் தினைய மண்கவர்ந்த வண்கனக பாத் திரத்தை மரபி, னேற்றிவர்பாங் கமர்ந்தருளு மமுதேசா தியரோ டெழுந் தருள்வித் தாலயம்புக் கெழில்யாக சாலைப், பாற்றிகழச் சோமகட தாபன முன் னிகழப் பாலிகைபூ சனைபுரிந்தப் பாவனமிர்த் திகையை, வீற்றுவீற் றுளபாலி கையினிறீஇ யான்பால் விராயபல தானியங்கண் மீது தெளித் தமைத்தார். (எரு)

அவிர்தரும்பஃ வகைமிருச்சங் கிரகணத்தோ டங்குரார்ப்பணஞ்செய் தனைய
சிவத் துவிசரோலா மன்பா, லிவர்தருபொன் ஞாணிரட்சா பந்தனங்கைக்
கொண்டாங் கெமதிறைவ னமுதசுயம் பிலிங்கேச னிமயூ, நவிரம்வள ரனை
சேய்மு னெவர்க்கு முயர் செம்பொன் ஞாண்காப்பு யாப்புமுறை புரிந்தபி
டேகாதி, திவியபிர சன்னபூ சனைபுரிந்தாங் கனைய தேவேசன் முதலா
னோர் திருத்தகுசந் நிதியில். (எசு)

தூயதுகி லான்வடித்து மணங்கள்பல தொகுத்த தூநீர்பூ ரித்துளபொற்
குடங்கள்பிர தான, மேயவருத தனியட்ட வித்தியே சாதி விதமுற்றத்தா
பனம்புரிந்தாங் கமுதேச விபுவை, யேயதனிச சுயம்பிலிங்க விம்பரின்றிக
கும்பத் தெந்தையே வந்தருளகென் றிரந்திரா சின்னு, ளாயிதனி லெமர்ந்
தெளியே மட்டபந்த னந்தா னமைந்தபினமீண் டெழுந்தருளியமர்ந்தருள்
க வண்ணல். (எஎ)

ஒருவாத தனியமுத லிங்கவுரு விதுநா மொருவரிதென் றமர்ந்தருளேல்
பொற்குடமீ தனது, திருமேனி மலாசிகைபொற் றேங்காயமா விலைசூழ்
செறிநூலா தியவேனைத் திருவுறுப்பாத் திகழ்வ, வருணீரிற் குளிர்ந்துமண
நிறைந்துபூ ரிதமா யமர்திருதந் திருதகுயட் டகததினிலொன றாமே,
பெருமானே திருமானோ வருமானோ பாகப் பெம்மானே யம்மானேந
தியகாரத்தெம் பிரானே. (எஅ)

வேண்டுவார் வேண்டுவதே யருளுமது தொழிலென விபவமெடுத் திருஞ்
சுருதி விரிப்பதையுன றனையே, யாண்டருளு மணாளோ வண்ணலோ
வெனவே யடுத்தடுத்தாங் கிரப்புமொழி யளப்பில சொற் றழைக்கு, மாண்
டருமந் திரங்களெடுத் தோதினியா சாதி மாபினிற்செய தனையருடத் தாவா
கித் தேனை, யேண்டருபொற் குடங்களினுங் கவாவர்நூ தனமா யேயந்தரு
ள வம்முறையா வாகனமுன் னியற்றி. (எகூ)

அருளுருவா யமாந்தருளெம் பெருமானை யுருகு மன்புருவாய நின்றிரந்து
வேண்டியவிர் குடத்தின், வருதன்முனந் தெரிதலென்ப் பரிகலினால் வயக்
கி மற்றனைய பொற்றசும்பை யருசசித்தாங் கேனை, யொருவில்கடங் களும்
பூசித் துடன்யாத்தி ராதி யுயர்தானம் புரிந்துதனித் தனியுட்டி னீட, சிர
மேலச் சிவத்துவிச ருயிர்மேலும் வகித்துச செல்லடிமே லடிதுவன் றமெல்ல
நடக் கின்றார். (அ0)

முத்தாரா விருதமுழுக் குடைகள்சா மரங்கண் மூரிவிடைக் கொடியாதி
வரிசையெலா மொய்ப்ப, வித்தார மாகதர்வந் தியர்சூதர் வீர மேதகுமங்
கலம்புகழ்கள் விதந்தெடுத்துப் பாடப், புத்தேளிர் கற்பகப்பூ மாரிநனி பொ
ழியப் பூதேவ ரக்கதைது யாசிமொழி புகலச், சுத்தோத கம்பனிநீர் பஊா
நறுந் தோயஞ் சுவர்ணமணி காலிபொரி பூமழைமுன் றார்ப்ப. (அக)

வேதியர்கள் சிலரொதிரட் டாங்கமுற வீழ்ந்து வீழ்ந்திறைஞ்சிப் பின்காட்டா
விதஞ்செலச்சிற் சிலவர், மாதகுதேங் காய்சிதறப் பக்குவஞ்செய் மூர்க்க வர்
க்கமது வர்க்கநறும் பானகநறு நீர்மோர், மேதகிள நீர்வருக்க வோதனம்பல்
கனிகள் விழைபசுப்பால் பாயசந்தாம் பூலமுக வாச, மாதியன வளப்பிலண
வடுத்தடுத்து நிவேதித் தாதிசைவ குலமறையோ ரணிமைவிடா தொழுக.

இருபாலு * மிருமறைக ளெடுத்திசைப்பார் போற்ற வெதிர்நின்று பலம
றையோர் சுவத்துகமாங் கிசைப்ப, வொருவாம லெப்பாலுஞ் சிவாகமங்கண்
முழங்க வுருத்திரமா நமகசம கங்களினி தோதப், பெருவாழ்வு தருபஞ்சாக்
கரசடங்க பஞ்சப் பிரமசநத தாமனுக்கண் முதலாய பெருகத், திருவாருஞ்
சிவநாம கீர்த்தனங்கள் பொலியத் திருந்திசையா ருருத்திரவீ ணைதியிசை
மலிய. (அ௩)

மாமுனிவர் போற்றெடுப்பப் பன்னியர்கள் வாழ்த்த மனநகசிந்து நெக்குரு
குந் தக்கதிருத் தொண்டர், தாமருவி விழிபொழிநது சார்ந்துவர வேணைச்
சாற்றரிய பற்பலவுந தழைந்துவர வெல்லா, மேமுறக்கண் டிதுவன்றே
யான்செய்தவப் பேறென் றெயயாத வானநத மெயவாழ்வு திளைத்தே,
தூமுனிவர் போற்றுபதஞ் சலியாமெ யனநதன் றொடர்ந்துவர விராசகு
டாமணியின் றொடர. (அச)

கண்டவர்நற் றின்றவர்க ளொன்றுரைப்ப மெல்லங் காதநிரத்தி னைசவுமறி
வரிதாகிக் கவின, மண்டுமொ பரப்புதிருப் பாவாடை மேற்றம் மலரடிவைத்
தொருங்கேகி மகாயாக சாலைத், தண்டருபச சிமவாயி லபிமுகமாப் போந
தத் தகும்பினங்கள் வீற்றிருப்பத் தனித்தனியாங் கமைத்த, வெண்டருவே
திகைகடமிற் சென்னியினின் றெடுத்தாங் கிருத்திரவே தனமுதல வினிது
புரிந்து மகிழ்ந்தார். (அரு)

பரிவார கலசமொரோர் மகசசாலை தோறும் பண்புறவாங் காங்குநிறீஇப் பூச
னையோ மாதி, மரயோடாற் றியதொடங்கி நிகழ்காநதோறம் மகச்சாலை
யிடைப்புண்ணி யாகவா சனமான், றருச்சரைங கவியபூ சனைமுனஞ்செய்தம்
பொற்றகும்புகளி னமர்நதருளம் மூர்த்திகளுக் கெல்லா, மருளார வபிடே
கம் பாவனையிற் புரிவா ரணிமத ஞங்கிவிதி திகழவெடுத் தமைப்பார்.

அன்னதனி வன்னியினைப் பிரதான குண்டத் தாமுறைதா பனம்புரிந்தா
ரதினின்று மெடுத்தே, பின்னுளவே னையகுண்டங் களினுந்தா பித்தார்
பிறங்குவரி சைக்கிரமப் படியோமச செயல்கள், பன்னரிய வித்தார மாக
மவி சமித்தின் பகுதிகள்சுத் தான்னநிறை யவிசுகோ கிருத, மூன்னுயல
கோக்கடரு சுத்தநிறை துத்த முதிர்சுவைய வதியாடைத் ததிசாவி லாசம்.

* இருமறை-ஆரியவேதம், தமிழ்வேதம்.

திலமதுவா னெல்லெலைவரீ வாரகிறை சாலித் திரள்வகையக் குதைசாமை
தினைமூங்கி லரிசி, யிலகுமவல் சத்துமா மூர்க்கமா மாட மிராசமா டஞ்சணை
கங் கோதுமையா டகமுற், குலவுறுதா னியவகைபல் கரும்புசருக் கரையின்
குளரீலோற் பலங்கழுநீர் குமுதாதி மூல, நலகருணை பலவள்ளி சகுடாதி
பூலா நறுங்கிழங்கு முதலான கிழங்கின்வகை யெல்லாம். (அஅ)

மாதுளைநா ரங்கமரம் பாதியொன்றென் றினும்பல் வகையநறுங் கனிகண்
முதிர் வருக்கைநறுங் கனிகள், சூதநறுங் கனிகள்கொடி முந்திரிகற் குரஞ்
சுவணலிகு சாதிவகை தூயரச கண்ட, மோதனநற் பாகநூற் புலவர்நுனித்
தோர்ந்தோர்ந் துஞற்றுவபல் வருக்கவகை யுலப்பிலன வெல்லா, மோதகமா
டாபூபஞ் சூபபூ ரணமே முதிர்சுவைநா ஞகோணஞ் சட்குலியே *மூர்க்கம்.

பாயசமெள் ளுண்டைமனோ கரநொலைய றிரட்டுப் பாணிறைசந் திராபூபங்
கனூப முதலா, மேயவளப் பரும்வகைய பண்ணியங்க ளெல்லாம் வெட்டி
வே ரிலாமிச்சம் வேர்பனிநீர் புழுகு, தூயசுகோ ரோசனைகுங் குமப்பூக்கத்
தூரி தூநறுங்கர்ப் பூராதி கத்தூரி மஞ்சள், பாயநறுங் குங்குலியஞ் சடா
மஞ்சி மட்டிப் பால்கோட்ட நெரியரிசிப் பான்முந்நீர்ப் பச்சை. (கூ0)

எலநறுஞ் சாதிக்காய் பத்திரிதக் கோல மிலவங்கம் வான்மிளகு முதல்வாச
மெல்லாஞ், சாலநறை தாம்பூல முகவாசஞ் சீநதித் தண்கொடிவெற் றிலைக்
கொடிமுன் னுயநறுங் கொடிக, ணீலமலர் கல்லாரந் துவயபது மாதி நீர்ப்பூ
மந் தாரம்பா டலங்கன்னி, காரந, கோலநறும் புன்னுகம் பாரிசா தம்பூங்
கொன்றைநிபஞ் செருந்திமகிழ் கூவிளஞ்சண் பகமே. (கூக)

பன்னிதா டியஞ்சுவே தார்க்கங்கே தகைதண் பலாசுகுரா வடம்புநுண பலா
வலரி நறவம், வன்னிதாத் திரிலிகுச நாரங்கஞ் செச்சை மாவிலிங்கை குருந்
துவிளா மாநாவன் மருது, பொன்னினு விரைகிளுவை சநதுமுதற் கோட்
டுப் பூவகைமென் றளிர்வகைகள் புனிதவலம் புரியே, துன்னுநறுஞ் செவ்
வந்தி சொக்கிறகு பச்சை தும்பைமருக் கொழுந்துசிவ கரந்தைகதிர்த் துள
[பம. (கூஉ)

முதலாய நிலப்பூமா தவிமயிலை மல்லி முல்லைநறுஞ் சம்பங்கி சாதிமுதற்
கொடிப்பூ, விதமாதி பற்பலவுஞ்* சண்ணவதி யென்ன விளம்பளவின்
மேனுநனி மிக்கதிர வியமற், புதமாக மனுமுறையா குதிசெய்தீற் றினிற்
றும் பூலமுக வாசமுதிர் புதியநறுந் தேங்காய், பதமாரின் சுவைக்கனிக
ளெலமுத லாய பட்டினம்பொற் பூலிகுச பலமுதற்பல் பொருள்கள். (கூங)

* மூர்க்கம் சுண்டு நிவேதனருகமாப்பக்குவஞ்செய்யப்பெற்றது.

* சண்ணவதி=தொண்ணூற்றாறு.

இனியசுகோ கிருதமுதற் சுருக்கினிறைத் ததன்மே லிருஞ்சுருவ மூடியெ
டுத் தெழுந்துமனு வெடுத்தே, பனிவனிகண் முற்றுமே லெழுந்துவலஞ்
சுழித்தூண் பாரித்த நிறையுணவின் பான்மையுணர்த் தேப்ப, நனிபுரித
லெனவொலிப்ப வின்னியங்க ளொருங்கே நரன்றெழமா பூரணா குதிசெய்து
நயந்தாங், கனககட நிவாசவமு தேசர்முத லோரை யவரவர்தங் கடங்களிற்பூ
சனையாற்று கிற்பார். (கச)

மணங்கமழுந் தூபநறு நெய்த்தீபங் காட்டி மலிசுவைப்பால் வருக்கவோ த
னமாதி யூட்டி, வணங்கவைபின் னருந்தட்டி மாதீப நீட்டி மலிநாறுன்
குபசாரம் வயங்குவழி பாட்டின், குணங்கனிமெ யன்பின்மனுக் கிரியாதி
கூட்டிக் குலமறைசொ றிரிசுபன்னங் கொன்றைமுதற் சூட்டிக், கணங்கெ
ழுநா மாவளிநா வெடுத்தினிதி ஞட்டிக் கர்ப்பூர மாதீபங் குடிலைவரை காட்டி.

அனந்தரமஞ் சலிசிரமே லினந்தரநேர் நின்றுந காரியமுஞ் செந்தமிழு மாய
பானுவந்த, கனந்தருமா ரியவேத மின்சுவைமா துரிய கவின்றருசீ ரியவேத
மிரண்டுமெடுத்தோதி, யினந்தருமா தெரிசனத்தின் பெரும்பேறு பெற்றுங்
கெதிர்நிற்பா ரெவர்க்குமிரும் பூதிபிர சாத, தனந்தருவர் தினந்தொறுமிவ்
வகையிருகா லமுநூல் சாற்றுபூ சனைபுரிந்து போற்றுவருண் மகிழ்வார். (கசு)

இத்தகையின் மகாயாக பூசனைநா டொறுஞ்செய் திடையிடைநூ தனவிம்ப
நயனோன்மீ லனமே, சுத்தசல நிவாசநகர்ப் * பதக்கணந்தா னியமேற்றேய்
வாசஞ் சயனாரோ கணமாதி புரிவார், பொத்தசலம் புரியட்ட பந்தனபூ சனை
மன் புரீஇவிம்ப சூத்திரவீட் சணநேர்வா லுகமே; ரத்தினமா நியாசமே
யந்திரதா பனமே நாலிருபந் தனமேலுஞ் சுவணபந்த னாதி. (கஎ)

நவநீத லேபனமே தைலாப்பி யங்க நவிற்றுறுமத் தகசெபமே விம்பால
யாதி, யவிர்தருசஞ் சோதனமே விம்பசுத்து யாதி யவைபுரிவார் புவியுயமு
னுனித்தசுப தினத்தி, லுவமனிலா விம்பரட்சா பந்தனஞ்செய் துவப்பா
ருரைபரிசா குதிநியா சார்ச்சனைசெய் தெழுவார், திவியமகா பூரணா குதிகள்
பூசனையாத் திராதான மகாதான மாதிபுரீஇச் சிறப்பார். (கஅ)

பின்புசிவத் துவிசசிவா சாரியர்க டாமே பிறங்குமமு தேசகட முதற்கடங்க
ளெல்லா, மன்புநறை தரவுட்டி ணீடசிர மேற்கொண் டாலயஞ்சூழ் பதக்
கணந்தம் மடியுரிஞ்ச வடிபோர்த், தின்புயலி தரப்புதுப்பூம் பாவாடை யிடை
வைத் தியங்கியிணைக் கவிகைநிரை கடங்களின்மே லிலக, முன்புவருங்காணி
கழ்ந்த வுபசாரத் தெண்கான் முதிர்தருபற் பலவகைய வுபசார மொய்ப்ப.

* பதக்கணம்=பிரதக்கணம்.

## வேறு.

ஆர்வமிக வுடலசையா வழகுமிகத் திருக்கோயிற்
பூர்வதிசை தனிற்றிகழ்கோ புரவாயி னெறிய்புகுந்து
நேர்வருமக் கடங்கடமை நிகழ்த்துமுறை யாகசாலைத்
தார்வளரவ் விம்பகுல சமீபமுறத் தாபித்தார். (௪௦௦)

அாதிகயார் சாதகும்பத் தவிர்குய்பங் களினமரு
யந்திரமா மயமூர்த்தி மானவிம்பங் களிற்பிரம
ரந்திரமார்க் கத்திதய நளினமுற்றீஇ வீற்றிருப்பத்
தந்திரமா மனுவினியா சம்புரிந்து யன்புருவாய். (௪௦௧)

இரந்திரந்தி யாசகமுத் திரைகாட்டி யினிதேததி
நிரந்தரசா நித்தியமா நிலையுறவந் நிறைகும்ப
* துரந்தமிரு கரந்தனின்மேற் றூக்கியெடுத் தாககமொடு
வரந்தருமா கும்பாபி டேகமுறை வயககினர். (௪௦௨)

பதஞ்சலியா தாங்காங்குப் படர்ந்துபடர்ந் துவகைமிகும்
பதஞ்சலியாம் பணிவேந்து பார்வைகளி கூர்வகையன்
பிதஞ்சலியா நிமிர்ந்துளநன் றிருமதகிற் பெருகியெழு
விதஞ்சலியா யாசகமா வெனக்குவித்து விரித்திருகை. (௪௦௩)

எதிர்தொழுதின் புறவபய னிராசசூ டாமணிவேந்
ததிமகிழ்வுற் றுடன்சார வுபதேச னுமையாதி
புதிதொளிர்பல் விம்பாதி புத்தேளிர் தமக்கெல்லாங்
கதிதருகும் பாபிடே கம்முழுதும் புரிந்துவந்தார். (௪௦௪)

ஆங்குடனே நவவாச மணிந்தருசித் தமுதருத்திப்
பாங்குறுபா லிததீபம் பணிமாறப் பணியெவர்க்கு5
தேங்கொளிவெண் டிருநீறு திருப்பாதோ தகமளித்தா
ரோங்குறுமித் திருப்பணிமுற் றுனுற்றுவித்த வொருசேடன். (௪௦௫)

உடனேயச் சிவமறையோ ருவந்துமகா வபிடேகந்
தொடர்பாய பொருளயுத நியுதமெனுந் தொகைபெருகத்
திடனோடு செயவளித்துச் செய்வித்தாங் கவர்புரியு
மடனோடு மாபூசா வகைகண்டு வகைகூர்ந்தான். (௪௦௬)

---

* துரம் — பாரத்தை யென்னும் பொருட்டு

அப்பெரிய சிவத்துவிச ரனைவரையு மவர் * வசதி
யிற்பிரிய முற்றுகர்வித் திருந்தளியிற் றிருந்தவழைத்
தொப்பரிய பெருவாழ்விங் குவந்தளித்தீ ருமக்கெளியே
னெப்பெரிய வகையெல்லா மீந்தாலு மெதிராமோ. (௧௦௭)

நிகர்வரிய பேருதவி நீர்செய்தீர் நுமக்கேழை
பகர்வரிய தென்னினுநூல் பகர்முறையேற் றருள்கவெனப்
புகர்வரிய சந்தனதாம் பூவாதி மேலோரு
மிகவரிய கண்டிகைமா ணிழைசுவணும் பரவைகள். (௧௦௮)

பற்பலமுற் கிரியாரம் பத்தளித்த தன்றியுமே
லற்பமல வாயிரமா யிரமாக வள்ளியள்ளிப்
பொற்புறுதக் கிணைகணனி புனிதமுற வினிதளித்தான்
பிற்பரவி யவர்நிறைந்த பெருந்திருக்கூட் டம்பணிந்தான். (௧௦௯)

முற்றினமே முதலாக மூதகுசீ ரருளுனோர்க
தற்றவருக் கற்றசிவ னருள்பெருகு சிவதீக்கை
பெற்றான்பூ சனை†யினிமை பெறுவேத சிரவணமு
னுற்றமகே சுரபூசை யுத்தமவிப் பிரவுண்டி. (௧௧௦)

முதலியபல் வகைநிதமு முறைமையிற்செய் வித்துவந்த
வதனினுமும் மடிபெருக வந்நாட்செய் வித்தனையோர்க்
கிதமலிதக் கிணையாதி யினிதளித்தா னேனையபல்
விதமலிபற் பலர்க்குமவர் விழைவினுமே தகவளித்தான். (௧௧௧)

இவ்வகையே கும்பாபி டேகதினத் தெனையவெபா
மெவ்வமறப் புரிந்தன்றே யிபமுகனசே யிறையிறைவி
யைவருஞ்சண் டேசனோ டவனியுயப் பவனிவரு
திவ்வியநன மகோற்சவம்பல் சீர்பெருகச் செய்வித்தான். (௧௧௨)

வழிநாளுங் கலியாண மகோற்சவஞ்செய் வித்தன்பின்
மொழிஞான சிவத்துவிச மோதசிவா சிரியர்குழாஞ்
செழிநீறு கண்டிகைமுற் சிவவேட மினிதிலங்க
விழிநேர்கண் டவருருக மிளிர்மணிப்பொற் சிவிகைகளில். (௧௧௩)

வீற்றிருந்து நகர்வலஞ்செய் மேதகைய வுற்சவமும்
போற்றுமுறை மையிற்புரிந்தப் போதசிவத் துவிசர்தின
மாற்றியன்மண் டலநியம வபிடேகார்ச் சனையாதிக்
கேற்றபொருள் பலநாளு மினிதளித்து நடத்துகிற்பான். (௧௧௪)

* வசதி=வாசஸ்தானம்.
† இனிமைபெறுவேதம்=தமிழ்வேதம்.

இவ்வியல்பி னாடொறுமவ் விறையமுத சுயம்பிலிங்க
மைவருமா மணிமிடற்றெம் மாதேவன் மாதேவிக்
கெவ்வரிய பொருள்களுங்கொண் டிருமூன்று காலநிகழ்
திவ்வியபூ சனையென்றுந் திகழ்வுறுமா நியமித்தான். (ககரு)

நித்தியநை மித்திககா மியமெனநா னிகழ்த்துமிய
லுத்தமபூ சனைவகைக ளொருவாது தினம்வாரம்
பத்திநிறை பக்கமதி பரவுவரு டோற்சவமுன்
னெத்துணையுஞ் சிறப்பநடத் தியலுறுமா நியமித்தான். (ககசு)

எல்லாரு மெந்நாளு மிடைதளரா தியலுறுமா
வில்லாரு நிதிகோடி மேலுமமு தேசன்முதற்
பல்லொரு மணிகலன்பற் பலவகையு நிறைத்தெல்லாம்
வல்லான்மந் திரநாதன் மலிபொருளாம் படிவகுத்தான் (ககஎ)

பின்னனைய வமுதேசன் பெரியநா யகிதனிக்குப்
பன்னிரண்டா யிரநிட்கம் பல்குபொரு ளோரோர்வருடந்
தன்னிலுமாங் குறுவிளைவாற் றப்பாது தரற்குரிய
நன்னிலமவ் விராசகுடா மணியா நரேந்திரனால். (ககஅ)

ஆவணத்தன் பாலளிப்பித் தானயுத நிரையோடும்
பாவணத்த சிவத்துவிசர் பல்லோர்க்கும் பரம்பரையா
மாவணத்த வனுபவத்தின் வருசருவ மானியமாப்
பூவணத்த நிலம்பலவப் புரவலனா லளிப்பித்தான். (கககூ)

இன்னனமற் றென்னெனநன் றினிதாய்ந்தத் திருக்கோயிற்
கென்னவுமேன் மேனிறைய வெல்லாமும் வகுத்தமைத்தான்
பின்னனைய சூதவனப் பிரதேச பாலகராத்
தன்னிகரெண் வடுகேசர் சாத்தாசண் டிகையிவரை. (கஉo)

விதிவழிமுன் றனித்தனியவ் வியனகரி னாங்காங்கு
வதிதருவான் பதிட்டைவினை வயக்கியநாண் முதலனையோர்
மதிதருபூ சனைவகையு மனுநாத னிமாசலவாழ்
முதிர்மணிப்பொற்கோயில்களின் முறைபுரிபூ சனைவகையும். (கஉக)

தன்னாலந் நகரிடைமுன் றாபனஞ்செய் சிவத்துவிசர்
மன்னாகின் றெந்நாளும் வழிவழியா மரபின்வழா
தின்னாமுற் றொழிந்தன்போ டின்போங்க வியற்றிவரு
தென்னாகின் றெதிர்வேண்டி யியைவித்தா னியமித்தான். (கஉஉ)

இப்படியிப் படியுய்வா னியாவமியற் றியசேடன்
மைப்படிவ னளித்தருளான் மார்த்தமர கதவிலிங்கத்
தப்படியர்ச் சனைபுரிந்தெ மன்னையிடத் தமுதேசன்
றப்படிக டினந்தோறுந் தொழுதுவந்தங் கின்புறுநாள். (கஉ௩)

வேறு.

மாபினி லேயொன் பானுண் மண்டலம் வபிடே காதி
தாமிக முடிப்பித் தோகைத் தழைத்தன னுடனின் றெல்லா
நாபதி தரிசித் தின்ப நாலேயுட் படிந்து வாழ்ந்து
பாவியப் பன்ன கேசற் பணிந்தரி தகன்றூர் புக்கான். (கஉ௪)

மகியா சிராச சூடா மணியவ ணகன்ற பின்ன
ரகியா சனைய கான மகலரி தாகி யுள்ளம்
பகிர்மதி வேணி யண்ணல் பதமல ரருட்டே னுண்டு
சுகிதரு பமர மாகச் சூழவாங் கமர்ந்தா னென்னு. (கஉ௫)

வேத்திர மலர்க்கை யெம்மான் விளம்பவே தியன்சே யெந்தாய்
நேத்திர சோத்தி ரன்பின் னிகழ்வருள் கெனவவ் வேனைக்
கேத்திரத் தவன்பின் செய்கை கிளத்தியாங் குரைத்து மென்னுச்
சாத்திர முனிவர்க் கன்பு தவாதவச் சூதனோதும். (கஉ௬)

வேறு.

உரைத்தவர் வினவினர் திருப்பணி பணிபதி யுஞற்றிய சரிதமி தொருவாத
வரத்திரு மனைமக நிதிக்குவை நிறைசுக மடுத்திக நிலன்முழு துறவாழ்பு
பரத்தினு நுகருபு முழுச்சுக வகைபல பவத்தொடர் பறவரு பலபோக
விரத்திய ரரனடி மலர்த்துணை நிழன்மரு வியத்துவி தநிலேபி னுறுவாரோ.

ஆதிசேடன் திருப்பணிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் அகூ௩.

---

# ஆதிசேடன் சிவார்ச்சவணச் சருக்கம்.

---

அனந்தனி யற்றிய திருப்பணி யரன்கொடி றத்தினை யுரைத்தனம்
பினந்தனு ளற்பெழு தரத்தனி பிறங்கும ருச்சனை நவிற்றிய
தனந்தருமிக்கதையினித்துறுகவின்பெறு பொறிபுள தெனச்சொலு
மினந்தரு மச்சிவ கணத்திறை யென்றிம னத்தனி யிருந்தரோ. ()

வேறு.

அனந்தரஞ் சனற்கு மார வனந்தனுங் கமர்ந்து நாளுந்
தனந்தர காத்தி னேடார்ச் சனைதிகழ் கால மெல்லா
முனந்தர விமலை கோயின் முறைபுகுந் திறைஞ்சிப் பின்னர்
வனந்தரன் றளியுட் சென்று வழிபடு நியதி பூண்டான். (௨)

போற்றுமிப் படியான் மார்த்த பூசனை பரார்த்த சேவை
யேற்றமோ டென்றும் பல்கு மிருந்தவந் திருந்த வங்கட்
டேற்றமிக் கெழுமு ளத்திற் றிகழுமெய் யன்பின் மல்க
வாற்றிவா ழனைய சேடற் காண்மெழுன் றகன்ற தாங்கே. (௩)

சினகர நியமத் தேகித் தெரிசனு னந்த மீக்கூ
ரினகர மணிசெய் சூடத் திரும்பைவேந் தொருநாண் முக்கட்
டினகர விமக ராங்கிச் சிவார்ச்சனை சிவாக மத்தாற்
றனகரத் தியற்று மார்வந் தழைத்துப கரண மெல்லாம். (௪)

பெருகிய வமைப்பித் தாங்குப் பிறங்கிய தன்பேர் வாவிப்
பருகிய னீரி னுற்றிற் படிந்தணித் திருந்து கூலந்
திருகிய வொழிக்கு நீறு திருமணி கண்டி பூண்டு
ளுருகிய சைவ சந்தி யுறுமுறை யுளுற்றி யேகி. (௫)

பெரியநா யகிதாள் போற்றிப் பேணிநின் றிறைஞ்சி வேண்டிப்
பிரியநா யகன்பொற் கோயில் பெரிதுவந் தடைந்தைங் கையோன்
றுரியனு யதீத னுருந் தூயமா முகனைப் பூசித்
துரியனு யிரவி யாதி பூசனை யுளுற்றிப் போந்து. (௬)

வேறு.

திருவமு தேசன் றிருமுனம் வடாது திசைமுக னுகவாங் கமர்ந்தா
னொருவருந் திக்கு பந்தன மவகுண் டனமனு வொடும்புரிந் துவற்றுன்
மருவுபூ சனைசெ யிடத்திட ரொன்றும் வராவகை காவலா வயக்கி
யிருகர நியாசஞ் செய்துமே விருகா விருபெருவிர லினின்றெழுந்தே. (௭)

வான்றனி மூலா தாரமட் டிரண்டு வடிவதா யுச்சிமட் டொன்றாய்த்
தோன்றுவ தாகி யுட்டுளைத் தாய சுழுமுனு நாடியின் கொடியே
போன்றொளிர்ந் திதயங் கண்டநா வடியே புருவப் பிரமரந் திரமைந்
தேன்றிடத் திடைபிங் கலையெனு நாடியிரண்டொடும்பின்னியதாகி. (௮)

கருதுமவ் விருத யாதியைந் திடத்துங் கமலவைந் தரும்பதோ முகமா
யொருவரந் தன்பாற் கொண்டது வாகி யுட்புறம் பமுதநற் றுளை
[illegible] மமா ரூப சத்தியாய்ப் பத்தியாய்த் தியானித்
[illegible] ராத்தனிப் பீட மாயவூங் காரமா மனுவை. (௯)

இருதய கமல நடுவினிற் றீப மெனச்சொலிக் கின்றதாப் பாவித்
தொருமையின் வளியைப் பூரகத் திடமூக்குட்புகவேற்றிக்கும்பகத்தாற்
பிரிவற நிறுத்தி யனையவூங் கார பீசத்தின் மனத்தைவைத் துடன்மூன்
மருவுகா றுவாத சாந்தமேற் சுழுனை வழியுகைத் தும்படி மனுவை. (கO)

துரிசற வைங்கா லடுக்கியுச் சரித்துச் சோடிகா முத்திரை யதனால்
விரிவுறீஇ யதோமு காம்புய முகுள மேனிமிர்ந் திலகுறப் புரீஇமூன்
மருவுகா லடங்கிப் பிங்கலை வழியின் வருமிரே சகம்புரிந் ததன்மேற்
பொருவளி பின்னும் பூரகம் புரிந்தப் பூரக வளியினுன் மனமாம். (கக)

தனிவன சத்தி லமர்ந்திருப் பவனாய்த் * தாரகா காரம்போன் றவனா
யினிதுறு சாந்த பீசமா மயனாயி தயசம் புடிதசே சனாய
முனிபுரி யட்ட கத்தினின் றெரீஇய முத்தனாய்ச் சூக்கும னாகிப்
புனிதவூங்கார முடியனாய்ப் பிந்து பூதனாய்த் தனிநிரா மயனாய். (கஉ)

நிலவுமான் மாவைப் பாவனை புரீஇமுன் னிறுத்துமவ் வளியைமே லேற்றி
யிலகுசங் கார முத்திரை யதனு லிதயசின் றனையசீ வனையக்
குலவுபல் பீச சகிதமந் திரத்தைக் கூறியாங் கெடுத்துமேற் கொடுபோய்ச்
செலுமுறை துவாத சாந்தவம் புயமேற் றிகழ்பர சிவனிடைச் சேர்த்தி. ()

அயனிடைச் சத்தம் பரிசமே ரசமா லவனிடை ரூபகந் தங்கள்
வயவுருத் திரன்பாற் புத்தியாங் கார மகேசன்பான் மனமும்விந் துவுமே
யுமைசதா சிவன்பா லொடுக்கியித் தொகைசேர்ந் தொன்றிய சூக்கும தேகச்
செயலறு சுத்தி செய்துபின் றூல தேகசுத் தியுமுறை செய்வான். (கசு)

பொன்னிற நிவிர்த்தி கலாமயங் கடினம் புகலுநாற் கோணமுன் னாவ
மன்னுறு மியல்பிற் பிருதிவி பூத மயத்ததாத் தன்னுட றனையோர்ந்
துன்னுபூ ரகங்கும் பகத்தினம் பீசத் துடனிவிர்த் தியின்கலா மனுவைத்
துன்னுமும் படந்தத் தைம்முறை கூறித் துறுவளி துவாதசாந் தம்மேல்.

ஏறிய வைங்கா லேற்றிப்பின் வன்மூக் கிரேசகத் தாற்கழித் திதனோ
டூறில்கந் தாதி பிருதிவிக் குரித்தா யியைகுண மைந்தைநீத் தினைய
வீறுமண் ணனில மயமதா யொழிபு மேவின பாவனை புரீஇப்பின்
மாறில்வெண் ணிறமே பிரதிட்டா கலையின் மயநெகிழ் பான்மதி வடிவம்.

ஆதிய வியல்பி னப்புபூ தந்தா னுகத்தன் றேகத்தைப் பாவித்
தேதற முன்போ லிடையினால் வளியை யிலங்குநாற் பீசத்தோ டியைய
வோதுறு பிரதிட் டாகலா மனுவை யும்படி ருகநான் முறைசொற் *
றூதிவாழ் துவாத சாந்தமட் டேற்றி யதனைப்பின் பிங்கலை நாடி. (கஎ)

* தாரகைஆகாரம் எனப்பிரித்துப் பொருள் கொள்க.

வழியிரே சகத்தாற் கழித்திர தாதி மலிகுண நான்குநீத் தனைய
பொழிதரு மப்பு பூதந்தீ மயமாப் புக்கொழிந் தெனநினைந் ததன்பி
னொழிவில்செந் நிறமே வித்தியா கலையி னுருவமுட் டிணந்திரி கோணந்
தழுவிய லங்கி பூதம தாசத் தன்னுட றன்னைப்பா வித்தே. (௧௮)

தேசமுப் பீச வித்தியா கலாமந் திரமும்ப டீற்றுறச் செபித்தே
யேசற முன்போல் வளியைமே லேற்றி யிரேசித்து ரூபமுன் னையந்
நேசமுக் குணநீத் தவ்வனற் பூத நீர் மயத் தொழிந்ததா நினைந்து
காசறப் பின்பு கருநிறஞ் சாந்தி கலாமயஞ் சலித்தல்சட் கோணம். (௧௯)

முதலியல் வாயு மயமதாத் தனது மூர்த்தியை நினைந்துமுன் போலக்
கதுவிரு பீச சகிதமச் சாந்தி கலாமனு வும்படி ரூக
வித்முற விருகாற் புகன்றுறு காலை யிடையினூற் பூரக மியற்றி
மூதுசுழு முனையா லிருமுறை யேற்றி மூதகு துவாதசாந் தத்தில். (௨௦)

பின்னிரே சகஞ்செய் தப்பரி சாதி பேசிரு குணங்களு நீக்கி
யுன்னுமவ் வளியப் பிருதிவி மயமா யொழிந்தெனப் பாவித்தாங் கதன்மேற்
கன்னவில் படிகஞ் சாந்திய தீத கலாமய மிடந்தால் வட்ட
முன்னிய னபமாத் தன்னுட றன்னை முன்னிமேற் பீசமொன் றடனே. ()

சாந்திய தீத கலாமனு வம்ப டந்தமா வொருமுறை சாற்றித்
தோய்ந்திடு வளியை யிடையிற்பூ ரித்துச் சுழுனையா லோர்முறை யேற்றி
யேய்ந்தபிங் கலையா லிரேசித்தா காயத் தியைகுண சத்தமொன் றினையுங
காய்ந்துபின் னனைய சாயமேற் பரமா காயமாம் விந்துவிற் கலந்து. (௨௨)

இத்தகு விந்து மயமதா யொழிந்த தெனநினைந் திவ்வகை தூல
சுத்திசெய் தனைய பிராரத்த தேகத் தொடர்புறு துரிசெலாந்தொலைய
வத்திர மனுவை யும்படி ரூக வறைந்துகால் வலப்பெரு விரலிற்
சித்திர பானு வெழுப்பியவ் வெல்லாந் தீந்துறத் தகித்ததா நினைத்து. (௨௩)

ஆயபின் சிவாய வௌசடென் றோதி யரியநற் றுவாதசாந் தத்தின்
மேயமாண் பரவிந் துவினெழு மமுத வெள்ளிய தாரைக ளாலக
காயமுட் புறம்பு நனைந்ததா நினைந்து கருதிய விருதய நடுவி
லேயதண் டிலைபொற் கருணிகை முதல வியைதரு சலசமென் மலரை. ()

ஆதன மாக முக்கலைக் குடிலை யால்மைத் ததன்கரு ணிகையிற்
சேதன கிரியா ரூபசூக் குமமெய் திகழுநாற் கலைப்பிர ணவத்தான்
மேதக வந்த தாநினைந் தனைய மிளிர்தரு சூக்கும வுடலி
லோதுறு துவாதசாந்தத்திற் சிவமா யுடனமர்ந் தொளிருமான் மாவை. (௨௫)

அனையசீ வான்ம மனுவுரைத் தெடுத்தாங் கவிரொளி யுருவுடை யவனு
யினிதுதா பித்தே சத்திமந் திரத்தை யியம்பியாங் கதனினுற் கலக்குண்
டனகமாய்ப் புருவ நடுவினின் றெழுகு மமுதவெள் ளத்தபி டேக
நனிபுரிந் தங்க நியாசமே வியற்றி நாடுறு மிவ்வெலா மமைந்த. (உகூ)

விரவுமைம் பூத சுத்திமுற் றியபின் விசுத்ததே கத்தனுய் விழைந்து
பரவுமன் பொடுமங் ஙாயியந் தடத்திற் பதிகிழுங் கிடைமுளைத் திருநான்
மருவுமங் குலத்தோர் நாளநீண் டிதய வரையுற வதனிலெட் டிதழோ
டொருதனிச் சுவேதாம் புயமிரு தயமே லொளிர்தர வுரைத்திடுமதன்மேல்.

இனியவங் குலநான் கிரண்டுயர் படிக விலிங்கமொன் றிருப்பதா நினைந்து
புனிதபூ சோப காணங்கண் மனத்தாற் பொலிவுற வமைத்துளக் கமலத்
தனிமல ரிடையே விசேடவர்க் கியமுன் றுபன முறையமைத் தனைய
பனிமலர்க் குரிய கந்தநா ளங்கள் பத்திர கருணிகா திகளில். (உஅ)

சாற்றுமா தார சத்திமுற் குடிலா சத்தியீ றுயவா தனமிட்
டேற்றவப் படிக விலிங்கச்சுற் றிடையே யெழிற்சிவ மூர்த்தியை நிவேசித்
தாற்றுதண் டபங்கி முண்டபங் கிரியா சம்புரிந் தவ்விலிங சத்திற்
றேற்றுறு நெடுமை மூர்த்தியின் வித்யா தேகத்தை நியசித்தாங் குடனே.()

நேத்திர நியாசம் புரிந்துபி னந்த நகரிலாப் படிகமா விலிங்க
மூர்த்திதன் பிரம ரந்திர நெறியின் முதுபர சிவத்தைமேற் கொணர்ந்து
ஈர்த்துவா வாக னுதியர்க் கியங்க ணவிற்றித யாதிய நியாசம்
பாத்தியா சமனுர்க் கியமலர்த் தானம் பயிற்றின்ன் மாலியங் கழித்தே.(௩0)

நவமல ரணிந்து தைலமுன் னுவ நனிமிக மனுமுறை யாட்டித்
தவளவொற் றுடை சாத்திவெண் ணீறு சாந்தமுன் னணிந்தில யாங்கந்
திவியபோ காங்க பூசனை யாற்றித் திருவமு தாதிய நிவேதித்
தவிர்செப நிவேத னம்புரிந் திமுக்கா லஞ்சலி நிறைமல ரளித்தே. (௩க)

துதிபுரிந் திநாபி குண்டத்தி லோமந் தொடங்கிமே னின்றெழு கமுதே
புதியகோ கிருத மாமுடித் தனைய புண்ணிய மண்ணல்கைக் கொடுத்தே
ததியுறு மட்ட புட்பமுஞ் சாத்திச் சத்தியோ சாதமுன் னுகப்
பதியருண் மூல மனுமலர் புனைந்து பராமுகார்க் கியங்கொடுத் ததன்மேல்.

முன்னுபோ காங்க தேவர்க்கு மளித்தம் முதியமந் திரர்களை யெழுப்பித்
தன்னிகர் சிவமூர்த் தியினிலுஞ் சிவாஅ சனமனுக் குலங்களை யெழுப்பி
யுன்னுமவ் விலிங்க பீடத்தும் யோசித் தொண்சிவ மூலமந் திரத்தாற்
பின்னருச் சித்துத் திக்குபந் தனமும் பிறங்கவ குண்டனந் தானும். (௩௩)

தேனுமுத் திரையும் புரீஇப்பர சிவனைத் திகழ்புரு நவமர்ந் தொளிரும்
வானிமிர் தார காவடி வாக மன்னுற நினைந்தினிப் புறத்து
மீனமில் பூசை புரிதா வருள்கென் றிரந்தனு மதிபெறீஇ யுவந்திம்
மானமார் வகைய வந்தரி யாக மாண்புறப் புரிந்துபின் மாதோ. (௩௪)

அத்திர மனுத்தா ளத்திர யத்தா லாங்குறு விக்கின மகற்றிப்
பத்துவா திக்கு பந்தனம் பூரிந்தப் பணியினு லொளிர்தழன் மதிலு
முத்தகு மகழ்தர்ச் சணிவலச் சூழ்மும் முறைபுரீஇக் கவசத்தி னால
மைத்துறு தேனு முத்திரை சத்தி மனுப்புகன் றுனுற்றியம் மாண்பால். ()

தாவிலாச் சத்தி சமூகமேல் கீழிற் சார்ந்துசூழ் சாலமா நினைந்து
மாவருக் கியவட் டகையையத் திரமா மனுவினிற் கழீஇயபி டேக
பாவன செலபூ ரிதமணிக் கலசம் பயில்புரு நடுவணை யுயர்த்து
யோவிலவ் விந்துத் தானசின் னெழுக்கு மொள்ளமு தக்கல சத்தின். (௩௬)

உள்ளுறக் கொண்டு மெல்லென விழித்தவ் வுதகத்தை யிதயமந் திரத்தவ்
வள்ளவட் டகையிற் பூரித்துச் சாந்த மலரறு கக்கதை வில்வ
நள்ளுறப் பெய்து சிவாசன மூர்த்தி நவிற்றுறு பிரமபஞ் சகமே
யொள்ளிய வித்யா தேகநேத் திரமே யொண்சிவ மூலநேத் திரமில். (௩௭)

அங்கபஞ் சகமே மூலமீ ரெட்டா லருச்சித்துச் சங்கிதா மனுவாற்
கொங்குற வபியந் திரித்திரட் டாவ குண்டன மத்திர கவச
முங்குறைத் தியற்றித் தேனுமுத் திரைதந் துறுசிவ மூலத்தவ் வுதகந்
தங்குதன் றலைமேற் புரோட்சித்தத் திரத்தாற் றகுதிர வியசமூ கத்தும். ()

அதுபுரீஇக் கவசத் தப்பியுட் சணஞ்செய் தவற்றையாங் கிருதய மனுவாற்
றிதமுற வபிமந் திரித்தவ குண்ட தேனுமுத் திரைகொடுத் தவைய
முதமய மாக்கி யருக்கிய சலத்தோர் முழுமலர் தோய்த்துமஞ் சனஞ்சா
ரிதகடத் தமைத்துத் தேனுமுத் திரைதந் தின்னமு தாக்கியிவ் வகையே.

திருத்தகு தான சுத்திபின் விசேட சிவார்க்கிய தாபனச் செய்கை
கருத்துற நிறைத்த திரவிய சுத்தி கண்டபி னமுதநா யகனை
யுருத்திரு மேனி நீண்டபூ சனைதா னைத்தசா தியனுளுற் றுதலே
யருத்திசால் விதியென் றச்சிவ சாதி யாகத்தா னஞ்செயல் புரியும். (௪௦)

நலனுறு தனதா சனத்தினிற் சிவாச னம்மனுப் புகன்றல ரிட்டு
மலர்தன இதயத் தனிற்சிவ மூர்த்தி மனுமலர் புரிந்துசந் தனத்தின்
றிலகநெற் றியினேத் திரம்புகன் றணிந்து சிரத்தினின் மூலத்தாற்சேர்த்தி
யலர்சிவ சாதி யாகவே தனைக்கண் டதன்பின்மந் திரசுத்தி யாற்றும். (௪௧)

கரமிரண் டிதயத் தஞ்சலி யாக்கிக் கவினுற மௌனியா யிருந்து
வாமிகு மூலா தாரமுற் புருவ மத்தியாம் விந்திடம் வரையும்
பிரமபஞ் சகமேற் பிரமரந் த்ராந்தம் பேசுறு சடங்கமென் றிருபாற்
றமிகு சங்கி தாமனுப் பிராசா தம்மனு வோடுமுச் சரித்தே. (சஉ)

மந்திர சுத்தி யிம்முறை முடித்து மார்புற வஞ்சலி காங்கண்
மந்திர நாதா தேவதே வேசா வள்ளலே யெள்ளலே யாதிம்
மந்திரத் தமர்ந்தோ யாசையா லேழை வழிபட வேலற்றருள் செனநு
மந்திரந் தன்பி னகநெகிழ்ந் துருக மரபினின் வேண்டுகொண் டதன்மேல்.

அரியநற் சிவகா யத்திரி மனுவா லட்டபுட் பாதியர்ச் சித்தே
பரவுமைஞ் சிரத்து மருக்கியங் கொடுத்துப் பரிமள தூபதீ பாதி
புரிபுகின் மாலி யங்களைந் ததனைப் புனிதபாத் திரத்தினீ சானத்
துரியசண் டேசார்த் தம்மிரு தயஞ்சொற் றுவப்புற வைத்தனன் மாதோ.

பன்னுமத் திரமந் திரத்திலிங் கத்தைப் பாசுப தாத்திர மனுவா
லன்னபிண் டிகையை யலம்பியர்க் கியநீ ரத்திரத் தாட்டியட் டகப்பூப்
பின்னரும் புனைந்து தூபதீ பம்முன் பேணிகின் மாலிய நீத்தோர்
துன்னல ருடனே யிலிங்கமீ தணிந்து தூயநீ ராட்டிமூ லத்தால். (சரு)

தரமிகு சுகந்த தைலமே யெவைநெற் றண்டுல சூரணந் தைநீ
ரரிசனப் பொடிநீர் தாத்திரி மாநீ ரவிர்தரு பஞ்சகவ் வியமே
யிரதஞ்சுவந் தமுதம் பலபஞ்சா முதமா னிலகுபா னிறைதயிர் புதுநெய்
விரவிள வெந்நீர் தேன்சருக் கரைநீர் வியன்கழைச் சாறுசம் பீரம். (சசு)

பலவகை நரந்தந் தாடிம மாதி பல்கனிச் சாறிள நீரிவ்
வலகில் வாக விடையிடைத் தூய வரும்புன லொடுஞ்சுவா காந்த
குலமனு மூலத் தாலபி டேகங் குயிற்றிப்பி னம்மனுத் தூய
சலமிக வாட்டிப் பின்னரச் சங்கி தாமனு வொருமுறை யாட்டி. (சஎ)

பின்னரு மெண்பத் தொருபத மனுவாற் பிறங்கிய வாயிரந் துவாரந்
துன்னுபொற் கலத்தின் றுரைமுன் றூவ துலங்குசீ ருத்திர நமகம்
பன்னுறு சமக மாதிமா மனுவாற் பண்புற வாட்டிமேற் சுகந்த
மன்னுறு சந்த னோதக மிமநீர் மணமலர்ப் புனன்மணி யுதகம். (சஅ)

உவமனில் வில்வோ தகம்விசே டார்க்கி யோதக மேதக வாட்டித்
தவளவண் டிருவொற் றுடைதான் கவசத் தனிமனுப் புகன்றுமென் மெல்ல
வவிர்தரத் துடைத்தக் கணத்தினத் திரத்தா லாமல ரணிந்துவெண் ணீறு
திவ்வியசந் தனமக் கதையுறு கரிய திருத்தகு வில்வம்புட் பாதி. (சகூ)

திருத்தகச் சிவமூ லத்தினு லணிந்து சிவாசன பூசனை முறையா
தாத்தினு தார சத்திமுற் குடிலா சத்தியீ ருகவொவ் வொன்றுங்
கருத்துற வவ்வம் மனுக்களால் யாவுங் கரிசற விரிவுறப் புரிபு
வரத்தபன் மலர்க ணிறைகாஞ் சலியை மருவிய விருதயத் தமைத்து. ()

அறிவொளித் தண்டா கிருதியே யுருவா யச்சிவ மூர்த்தியை நினைந்தந்
நறைமலர் நிறையஞ் சலிமெலப புருவ நவெவரை மூர்த்திமந் திரத்தான்
முறைமையி னுயர்த்தி யஞ்சலி தனிலம் மூர்த்திவந் தெனநினைந் திறக்கி
யிறையிரு தயத்தின் மெல்லென வமுத விலிங்கச்சூழ் வுறநிவே சித்தே. ()

சிரமுக மிதய நாபிசா னுவெனத் திருத்தகு மைந்துறுப் பமையத்
திரமிகு பஞ்சப் பிரமத்தா னியாசஞ் செய்யுமத் தண்டபங் கிம்மேற்
பரவுமூர்த் தாய நமாந்தமாப் பிரம பஞ்சநி யாசமைஞ் சிரத்தும்
புரிதரு முண்ட பங்கியைம் முகத்தப் புகன்மனு வத்திர பங்கி. (௫௨)

விதிபுரீஇப் புட்பாஞ் சலியிரு தயத்தின் விரலவைத் திதழியிந் தாதி [த்த
பொதிசடா முடியைந் திலங்கெழிற் பளிங்கு பொன்கரி தருணவெண் ணிற
வதனமைந் தைம்மூன் றம்பக மொருபான் யலர்க்கர மாதிய மருவுங
கதிர்பளிக் குருவாண் டெண்ணிரு வயச்சு காசன மாதிய கவினும். (௫௩)

வித்தியா தேகந் தனைநினைந் தனைய மெய்ம்மனு நமாந்தமா விளம்பி
யத்தகஞ் சலியை யுச்சிமட் டுயர்த்தி யதனுளாங் கத்தனு மின்றே
சொத்துவந் தெனவோர்ந் திலிங்கவா கார மூன்னுரு தஞ்சலிப் புகுந்த
வித்தகு முருவே நினைந்திலிங் கத்தி னியைபுற நியாசஞ்செய் தாங்கே. ()

வதனமைந் தினிலு கேத்திர நியாசம் வயக்கிமேற் புட்பவஞ் சலியை
யிதயமே னிறுத்தி மூலமந் திரத்தை யிசைத்துமேற் றுவாதசாந் தத்தம்
முதுமனுப் பொருளே யாம்பர சிவனை மோதமெய்ப் போதநிட் களவ
நிதவியா பகனுத் தியானித்தஞ் சலியை நீட்டிமேற் றுவாதசாந் தத்தில். ()

ஊங்குநின் றனைய பரசிவ னிரவி யொளியனுய்ப் புருநடு வணையுற்
றுங்குமென் மெலநின் றிறக்கிவந் திதயத் தமைத்தபுட் பாஞ்சலி யதனுட்
டேங்குபல் கோடி யிந்தொளி யினனுயத் திகழுமப் புருநடு நின்றும்
பூங்குமிழ் வலமூக் கிரேசக வழியாற் புறத்துறீஇப் புகுந்ததா நினைந்தே.

அகளநின்மலவிவ்விலிங்கமூர்த்தியின்வந்தமர்ந்தருள்கென்றுவேண்டழைப்பு
திகழ்புவி முதலுன் மனவரை வியாப்த சிவபரி பூரண வியல்பை [த்
தகவிரி யறிவி லழுத்துமா வாக னம்மித யம்மனு நவின்றே
தருமுறை யாவா கனியிலச் சினையாற் சாற்றுமச் சதாசிவ மூர்த்தி. (௫௭)

பிரமரந் திரத்தா லுட்புகுந் திதயப் பிரசலம் புயத்துவீற் றிருப்பப்
புரிபுதா பனிமுத் திரையின்முன் னழைத்த புனிதனை யிருத்துத லாகி
மரபின்முன் னழுத்து மதுகிலை பெறுத்தல் வயக்குதா பனமுமப் பானை
வரமுறத் தனக்கு நேர்முக மாக்கு மாண்பதாய்ப் பான்வியா பகத்தில் (ருஅ)

தனதுபே ரறிவு மதில்வியா பகமுந் தங்கியொன் றொன்றை யாசரிக்கும்
புனிதமாய்ச் சங்கி தானமுத் திரையாற் புரிதரு சங்கிதா னமுமே
லனகவர்ச் சனைமுற் றளவுவே றகலா தமர்கென வேண்டுபு தகையும்
வினையதாய்த் தன்பால் வியாபக போதம் விலகுறுத் தகைவிளக் குவதாய்.

சாற்றுநிட் டூர முத்திரை யாற்செய் சங்ரோ தனமுமென் றிவையு
மேற்றிரு தயமா மனுப்புகன் றியற்றி யிமாசலை யுமாபதே யாவுந்
தேற்றுமா தேவ சுவாகதந் கிலையென் றிருநதுவிண் ணப்பமுன் புரிநது
போற்றரு மைந்த நன்குவந் தனமென் பொன்மொழி புகன்றதா சிணைநது

வேறு.

நமசு வாயிந சர்வசெகந் நாதா நீதா போதாவிவ்
வமுத விலிஙகத் தேசைபுரி யர்ச்சனுவ சானவரை
கமல பிரீதி மிகவெளியே னேர்கின் றருளு கெனமீட்டும்
விமல னெதிர்விண் ணப்பமுறை விளங்கப் புரிந்துகளங்கமற. (சுக)

மொழியைஞ் சிரத்துஞ் சுவாகாந்த மூல மனுவா லருக்கியமும்
வழுவில் கான கன்னிலிங்க மருவஞ் சலிமுத் திரைதந்து
தழுவு மிதயா தியங்கியாது சங்க ளவ்வம் மனுவாற்செய்
தொழிலி லைக்கி யம்மூலத் துனுற்றி யிரட்சை யத்திரத்தால். (சுஉ)

அவகுண் டனம்பின் கவசத்தா லாற்றித் தேனு முத்திரையுந்
திவளு மகாமுத் திரையுமுடன் சிவமூ லத்தாற் றநதுநம
சுவத சுவாகாந் தம்மூலத் தூய மனுவாற் பதங்கண்முக
மவிர்சென் னியினு முறைபாத்தி யாச மனார்க்கி யம்புரிநதே. (சுங)

விரைசெய் மலரக் கதைதூர்வை மிளிர்கூ விளமென் னிவையிருகை
தாமு னிறைத்தாங் கருள்புட்ப தானம் புரிநது கண்டையிடக்
கரனின் றொலிப்ப நறுந்துாபங் கதிர்செய்த் தீப மூலத்தால்
வரதன் முகங்க ளுசிகள மார்பு பதநேர் தனிசுழற்றி. (சுச)

தொகுத்துப் பிரண வாகார தூல மிதுவோ வெனமுக்கால்
வகுத்துக் கோட்டி மலவலியை மடித்து ஞானப் பிரகாச
மிகுத்து விளங்க வருளுகென வேண்டு குறியா முறைவிளக்கி
முகத்துஞ்சிரத்துமுன்போலமொழியாசமனார்க்கியமளித்தே. (சுரு)

பாவ ஞபி டேகமுறை பயில மீட்டுக் தைலாதி
தாவில் சந்த ஞந்தமுறத் தக்க வரிசை யாலாட்டித்
தூவி சேடார்க் கியமனுமா தோய மாட்டித் தூயநிறத்
தேவில் விலகு மெல்லியவண் டிருவொற் றுடை கவசமனு. (சுசு)

புகன்று சாத்தி மூலத்தாற் புனித நீறு விளக்கலவைச்
சுகந்த படீர மக்கதைபங் தூர்வை வில்வம் புட்பாதி
யுகந்து சாத்திப் பொன்னணைஞா னெளிருஞ் சுவண கௌபீனந்
திகந்தமிலகுவிசித்திரவத்திரம்பொற்பூணூன் மணிக்குழைகள்.(சுஎ)

ஆதி புனைஇப்புட் பாஞ்சலிமூன் றளித்து மூலத் திண்டைமுதற்
கோதை புனைந்து புகைசுடர்முன் கோட்டி யாச மனர்க்கியந்தந்
தோது மனேர தங்காட்டி யுயர்சங் கிதையா லியாங்கங்
காதல் வேண்டல் போகாங்கங் கவினப் பூசித் தருக்கியங்கள் (சுஅ)

செறிய வனைய போகாங்க தேவர் பலர்க்குந் திகழவளித்
திறையீ சான முதன்முகமைந் தினிலு முறைதே னுப்பதுமந்
திறன்முச் சூலந் திகழ்மகரஞ் சிருங்க மெனுமுத் திரைகாட்டி
முறையஞ் சலிக டனித்தனியம் முகாங்க தேவர்க் கவர்மனுவால்.

இதயத் தையப் புரீஇமூலத் தினிது புட்பாஞ் சலிசாத்தி
யெதிரின் பகாமுத் திரைகாட்டி யினைய சுரரா தியரெல்லாம்
விதியி னிமல சதாசிவன்பான் மேவு மேக பாவனைசெய்
ததன்மேற் றூப தீபமளித் தாச மனர்க்கி யங்கொடுத்தே. (எ0)

ஆங்கு நினைத்த நிவேதனங்க ளனைத்தும் புரோக்கித் தத்திரத்தா
லோங்கு சமக்கா ராட்டகங்க ளுஞற்றி மிருத்திஞ் சயமனுவாற்
பாங்கி னடிமந் திரித்தாசு பாற்றி யமுத மயமாக்கித்
தேங்கு சபரி வாராய சிவாய நைவேத் தியஞ் * சுவகா. (எக)

எனவவ் வெற்றின் பெயரிடைவைத் தியம்பி நிவேதித்திம்மனுவாற்
புனித பானீ யங்கொடுத்துப் புகலா சமன மாத்திரந்தந்
தனகன் கரங்கள் சந்தனத்தா லாமே கவசத் தாற்றுவட்டி
யினமெல் லிலைகாய் முகவாச மினிதீந் தருக்கி யம்மளித்தே. (எஉ)

பூசித் தொருகான் மூலத்தாற் புகையுஞ் சுடரும் பினுங்கோட்டி
நேசித் தாச மனர்க்கியமு நேர்ந்து மலரக் கதை தூர்வை
தேசிற் சிறந்த வில்வாதி திகழ்கைந் நிறைத்தஞ் சலியாவு
பாசித் தகில தத்வாதி பதயே சிவாய நமவென்ன. (எ௩)

* சுவாகா என்பாலது இசைநோக்கிக் குறுகின்றது.

புகன்று பவித்தி ரஞ்சாத்திப் பொருவின் மாதீ பாதியெலாந்
திகழ்ந்து பரம சிவஞான தேசு நிறைக வெனக்கோட்டிச்
சுகந்த நீறு சாத்திமுறை தூய தருப்ப ணங்கவிகை
தொகுந்த கவரி சிவிறிமுதற் சோட சோப சாரமெலாம். (௭௪)

யரபிற் புரிந்து சிவத்துவமே வயங்க வேண்டற் கறிகுறியாப்
பரவு பளித மாதீபம் பகரும் விதியிநீ பணிமாறப்
புரிபா சமனுர்க் கியமளித்துப் புட்பாஞ் சலிதூய்ப் பினமாமுத்
திரைபஞ் சமுகி முத்திரைக டிருந்த வளித்தா யிரநாமம். (௭௫)

சாற்றி யரியா னிறைவில்வார்ச் சனைசெய் துருத்தி ராக்கவடம்
போற்றி யெடுத்து வலக்கரத்தாற் புட்ப மமைத்து வாமகரத்
தாற்று செபநூற் றெட்டுருச்செய் தருக்கி யோத கம்வலக்கை
யேற்றம் மலரு முடன்வாங்கி யினிதுற் பவமுத் திரையாலே. (௭௬)

அனைய செபமே கன்மமே யான்மா வேயென் றிம்மூன்றும்
புனிதன் வரத கரத்தின்மனுப் புகன்று நிவேதித் துறுதத்த
வினைசெய் தனைய மலர்சாத்தி மீட்டுஞ் சங்கி தாமனுவை
நினைபோர்பதின்காற்செபித்தளித்தந்நிமலவிலிங்கத்தென்கீழ்பால்.

அனக சிவாச னதியமைத் தருச்சித் தேத்தித் தன்குருவைப்
பினர்மேற் றிசையிற் சிவயோக பீட மேல்வித் தியாபீடந்
தனையர்ச் சித்தே சிவாகமமேற் றயங்கப் பூசித் திவையாதி
வினைகண் மனுப்பா வனைமுதல விதியோர் சிறிதும் வழுவாமே. ()

அருமை பெருமை பாராட்டி யன்பு பெருகி நம்பெருமான்
கருணைப் பயோத திநதியாய்க் கலந்தாங் கிருகண் ணருவியெழ
வுருக வுளமு மிருகரங்க ளொளிர்சென் னியின்மேற் குவிந்தேறத்
திருமு னமுத சுயம்பிலிங்க தேவோத் தமன்பொற் றிருக்கோலம்.

கண்கள் குளிர மெய்குளிரக் கருத்துங் குளிரக் கண்டிமையா
தெண்கள் குளிர்சீ ருத்திரமு மெல்லாங் குளிரு மிருந்துதிகள்
பண்கள் குளிர வெடுத்தோதிப் பணிந்து பணிந்து பலமுறையு
மண்கள் குளிர வாய்குளிர வழுத்தி மீட்டும் பெருகன்பால். (௮௰)

வேறு.

திருமுனம் பணிந்தெ ழுந்து திருவருட் சலதி மூழ்கி
யொருவரி தாகி நின்ற னுடனம்பு தேச னந்த
வருவுருச் சுயம்பு லிங்கத் தருளுரு வாயெழுந்து
பொருவில்சுந் தரப்பொற் கோலம் புயங்கர்கோன் காண நின்றான்.

மலவிரு ணெிக்குந் தேசு மலிதிரு வேணிகண்டா
னிலவுறு மதனிற் ருனே நிகழ்பிர ணவசொ ரூபி
பலரிலை யென்று தேற்றும் பைங்கொன்றை மாலை கண்டான்.
குலவுபஞ் சாக்க ரத்தின் குறியுமத் தாரிற் கண்டான். (அஉ)

கங்கையு மதியுந் தானே சணக்கிலாச் சீவர்க் கெல்லாம்
வெங்கொடும் பிறவி வெப்பம் வீட்டிமெய்ஞ் ஞான நல்குந்
துங்கமிங் கெவருங் காணத் துலங்குமக் கவினோர் கண்டா
னங்கதம் பல்வு யிங்கோ டளாவுநண் பருமை கண்டான். (அங)

பிறைமதி யொன்ற லாலெம் பிரானரை மதியு மென்று
நிறைமதி யமும்பூண் டாங்கு நிகழ்நுதன் முகமுங் கண்டான்
முறையின்மும் மலமுக் குற்ற முக்குண மூப்பு ராதி
மறையநன் றருள ரேற்று பாலபுண் டரநேர் கண்டான். (அச)

உலகெலா நிறைவி யட்டி யொளிக்கெலா மொளிதந் தென்று
நிலவுறு சுசிச்ச மட்டி நேத்திரத் திரயங் கண்டான்
குலமறை சிவாக மாதி குழாங்கள்வீற் றிருந்தெஞ் ஞான்றும்
விலகுரு தமர்ந்து வாழும் விமலமென் றிருவாய் கண்டான். (அரு)

பொதுமறை யரிமுன் னோர்க்கும் புகல்பாத் துவங்க ளேனே
ரதிகரி யாமைக் கெம்மா னருளுப சாரமேயப்
புதர்பிறந் திறும்பூ சுக்கள் புகல்பசு பதியே யீச
னிதுமுடி பென்று தேற்று மெழின்மணி கண்டங் கண்டான்.(அசு)

மிடற்றெழு மோசை மூன்று விதமெனுங் குறிப்போ சீறும்
விடத்தினும் புரந்த தோர்மூன் றுலகெனுங் குறிப்போ வீயா
துடற்றுமும் மலவி ருட்டை யொறுத்திடுங் குறிப்போ வென்ன
விடத்துறு மிரேகை மூன்றவ் விருங்களத் திலங்கக் கண்டான். ()

அருளுதும் வருக வென்றுங் கழைத்தலி னெலியா நிற்கு
மிருகமு நிசமென் றேந்து மிளிர்தழன் மழுவு முற்றோர்
வெருவுறு வயய மும்பின் வினைகவர்ந் தளிக்கு மாண்பு
மருவுறு மம்பு சாத மலர்க்கர சதுர்த்தங் கண்டான். (அஎ)

உலகெலா முறைறயிற் றம்பா லொடுங்குறத் தனையொ டுக்கி
நிலவுமேற் பொருளொன் றில்லா நித்தியன் றத்வா தீதன்
மலர்பர சிவனே யென்ன மறைமுடி யறையும் வாய்மை
யிலகுநேர் காட்டும் வெண்ணீ றிலங்கெழின் மார்புகண்டான். (அகூ)

அண்டகோ டிகளெ லாமாங் கமர்புவ னேச ரெல்லா
மண்பெல் பொருளெ லாந்தன் மனைகசுவ ரியலே சம்மென்
றெண்டகு மறையெ லாஞ்சொ லீசனே யெவற்றும் வாஞ்சை
விண்டமர் திருத்த னென்ன விளங்குபல் *லணிகள் கண்டான் (௬0)

புரத்தலின் ஒருறுத்தா லொன்றும் போதுமென் றுபநி டஞ்சொல்
கருத்தினை யெனக் கொம்பு கமடவோ டிலகு மீன்கண்
ணரத்தனி மடங்க லங்கோ னைகதரு கபால மாதி
திருத்தகு முறுப்பிற் றுங்குந் திறமினி துணர்த்தக் கண்டான் (௬௧)

தானலா துலகமில்லை சகமலா தடிமை யின்றென்
றேனவில் சுருதி வாய்மை யிலங்குற வகில மெங்கு
மேனிமிர் தரவியாபித் தவைவியாப் பியத்தின் மேவுந்
தேனிமிர் கமலத் தண்பூந் திருவடித் துணைகள் கண்டான். (௬௨)

தன்னில்வே றற்ற மார்ந்துந் தானுறு முருவிற் கேற்பப்
பின்னையா யொருங்கு சாரும் பெரியநா யகிமா தேவி
யன்னையா யகில மீன்ற வமலையாங் கமர்ந்து மேவு
மென்னையா ளமுத நாத னிடத்திருக் கோலங் கண்டான். (௬௩)

வலமிடம் பொலிந்து தோன்றி வளாருட் கோலங் கண்டான்
மலர்தரு மந்த காசம் வழங்கருள் வெள்ளங் கண்டா
னலகிலா னந்த வெள்ளத் தாழ்ந்தனன் கரைபின் காணான்
றலனில்வீழ் தண்ட மாகத் தாழ்ந்தனன் றனையுங் காணான். (௬௪)

பரவச னானான் சீவப் பண்பொரு சிறிதுங் காணான்
வரனருட் பரமன் போந்த வள்ளறன் குறிப்பு முற்ற
வுரனளித் தனன்கொ லென்ன வுணர்ந்தெழுந் தாங்கெம் பெம்மான்
பிரசமென் மலர்த்தாள் போற்றிப் பேணியித் துதிகள் கூறும். (௬௫)

ஒருவனா யுலக மெல்லா மொழிவற நிறைந்தாய் போற்றி
யருமறை யுபநி டம்போற் றத்துவி தீயபோற்றி
வருபரா பரமெய்ஞ் ஞான வள்ளலே மாவ னத்தின்
மருவிவா ழாதி சேட வரதநா யகனே போற்றி. (௬௬)

நாயக மறைசொன் ஞான ஞாதுரு ஞேய ரூபி
யாயவற் றதீத தாய வகிலமும் விரிந்து நின்றுஞ்
சேயவ வணிய சர்வா சிரயவாம் பிரவ னத்தின்
வாயம ராதி சேட வரதநா யகனே போற்றி. (௬௭)

* அணிகள் - அவயவங்கள்.

மூதுணர் விப்பி ரேசர் முறைபுரி துரங்க மேத
மாதியால் வழிபட் டேத்து மண்ணலே யனைய வேள்வித்
தீதறு பலன்க ணல்கு தேவசே கரவ னத்து
மாதவ வாதி சேட வரதநா யகனே போற்றி. (௯௮)

விரிகலை யாவமோர்ந்த வித்தக ரவன்றி யானத்
தொருவுபு கன்ம பந்த முறுவர்தா முத்தி யன்ன
துரியனீ யென்ன வேதந் துதித்திறைஞ் சதீத சூத
மருவனத் தாதி சேட வரதநா யகனே போற்றி. (௯௯)

மிருகண்டு சூனு வொன்றி விதியினர்ச் சிப்ப வன்றே
னருகண்டு மறலை வீட்டி யாசினித் தியமா வின்பந்
தருகண்ட காள வொண்சே தாரமா விபினத் தென்று
மருகண்ட வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௦)

வனசமா தவன்றன் ஞேக்கம் வனசமாப் பூசிக் கும்பா
வனசமா ராத னத்தான் மகிழ்வுறீஇத் திகிரி தந்தோய்
வனசமா னங்க டந்த வள்ளலே மாழை சூழும்
வனசமா வாதிசேட வரதநா யகனே போற்றி. (௪௦௧)

தொழில்களைந் துனையன் றின்றத் தொகைவகை விரிய ளப்பின்
றொழிவில வசல னீயிவ் வுளவறி வரிதென் றுன்றோர்
மொழியுமெய்ஞ் ஞானு னந்த மூர்த்தியாம் பிரவ னத்தின்
வழியரு ளாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௨)

தன்னில்வே றுயர்ந்த தொன்றுஞ் சசாதிக துவித மாகத்
தன்னில்வே றொன்று மில்லாச் சர்வபூ தேச நேச
மன்னிய வமுத சூத வனத்தன வரத வாச
மன்னிய வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௩)

போதரு மெவர்க்கு மோர்காற் புரிநம மாத்தி ரத்திற்
காதர பவார்ண வத்தைக் கடப்பிக்குங் கருணை வள்ளால்
பேதறு சர்வ சித்திப் பிரதனே யிரதக் கானின்
மாதவ வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௪)

நித்திய நிர்வி கார நிராலம்ப நிராம யேச
சத்திய ஞானு னந்த தற்பர சாதுர் வேத
துத்திய நிமல சர்வ சோபன சூத கான
மத்திய வாதி சேட வரதநா யகனே போற்றி. (௪௦௫)

அனந்தர வமுத நாத வட்டமங் களசொ ரூப
கனந்தர கந்த ராதீ காருணி யாம்பு தீச
சனந்தர சனக ஞான தாயக சூத கான
வனந்தர வாதி சேட வரதநா யகனே போற்றி. (கபசு)

சங்கர நீல கண்ட சந்திர சடில சார்ங்கங்
கங்கர மந்தி ரேச காரண பெரிய நங்கை
பங்கர சூத கான பரவர வஞ்ச மீசார்
வங்கர வாதி சேட வரத நாயகனே போற்றி. (கபஎ)

வேறு.

என்றகிகோன் றுதித்திறைஞ்சி யெந்தைக்கிணையா தணர்ந்திங்கேத் தகிற்பே
னென்றிமகத் தெனில்லண்ட மனுவெனுமா றனுகின்ற யனுவே யாதி
யென்றிடிலோ வஃதண்ட மெனத்தாலித் தெழுகின்ற யேக மென்னில்
வென்றியுற வநேகனும் விரிகின்ற யென்றிளைக்கும் வேத நான்கும். (கபஅ)

காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்கா லென்றனைய கலக்கந் தீர்த்து
மாண்பார வச்சுருதி சாரமெடுத் திசைப்பதெவர் மறுக்க வல்லா
ரேண்பாவு சூதவனத் தெந்தாயென் றிணையடிக்கீ ழிறைஞ்சிக் கண்ணீர்
சேண்பாயப் பரவசனாய்த் திருமுனமங் காங்கருளிற் றிளைத்தான் மன்னே.

அகிராசன் செயனேக்கி யருட்தேசன் மிகமகிழ்வுற் றனந்த கேட்டி
தகுராச துதிகடவா தசமாயஞ் சரிகேட்டுத் தழைக்கு மார்வ
மிகுயோகை யுற்றனனில் விழுத்துதிசொற் றனர்கேட்டோர் விழைந்த யாவுந்
தொகமேவி யொருவீடுந் துன்னுகநீ வேட்டவருஞ் சொல்லு கென்றான். ()

அனைய திரு வாக்கமுத மைந்தனிரு கட்செவிவா யார மாந்தி
யெனையுடையா யியகிரிசை யிடத்துடையா யருடேச வேழைமேனி
னினைவரிய திருக்கோல நேர்காணும் பெரும்பேறு சாம்பப் பெற்றே
னினியிதனிற் பெறுபெரும்பே றென்பகர்வ தமுதசுயம் பிலிங்க நாத. (ககக)

ஆனாலுஞ் சேடநா யகவருளால் வேண்டுவதொன் றளியே னெஞ்சாந்
தேனாத நினதுபதச் செம்பதுமத் திருவருளா னந்தத் தேனுண்
டேனனுஞ் சலியாம லவணமரும் பெருவாழ்வீ யென்று தாழ்ந்தான்
பானாறு மொழிபாகப் பரமேச னகியீச பகர்தல் கேட்டி. (ககஉ)

அன்புடையா ரெவரினுமிக் கன்புடையா னாகின்ற யானா லுங்கே
ணின்புடையே நம்பதத்தி னிறையன்பு குறைவின்றி நீடிமல்க
முன்புசிதம் பரத்திருத்த முதயளித்தே சினக்கிய்யா மூளரி வைப்பி
லின்பமுத சுயம்பலிங்கத் தெழுந்தருணந் தரிசனப்பே றினிது தந்தோம்.

அனகனினக் கென்றுநம தருஞ்சொருப சிவஞான வாக்க மோங்க
பனகபதி நீயீண்டுப் படர்ந்துமுத னமைக்கண்டு பணிந்து போற்றி
நினகநெகிழ் தைமதியி னிறைமதியிற் குருவார நிலவு நாளெம்
முனகமுரு கியவிரிவின் முறைபூசா திரவியங்கண் முழுது மீட்டி. (ககச)

வழிபடுவோ ரிகபோகம் வழுவாது முழுதார்ந்து மரபின் வாழ்ந்து
நழுவரிய தனிவீடு நண்ணுகநீ மேலுமினி ராச சூட
முழுமணிவேந் தனைக்கொண்டு முறைநைந்தி ரோற்சவமிம் மூதூர்க்கென்று
மெழில்வளர்பூ ரணைமுடிவா மியல்விப்பா யென்றுமினு மியம்பு மாதோ. ()

நமதருளா லுலகபூ டணமாக யோகசூத் திரநவின்று
சமைவுறநின் பெயரினிற்பா தஞ்சலமென் றதற்கியற்பேர் சாற்றி மேலுங்
கமைதருமா தேற்றுவியா கரணமகா பாடியமுங் கவினச் செய்தே
யமைவுறுமா சாசுவத மாயகிலப் பிரசித்தி யாக வைப்பாய். (ககசு)

நம்முரிய சொருபவியன் குணர்ந்தோ ரணனே நவின்ற துண்மை
யெம்மிலவ னபேதமென வெண்ணுதியா னினக்கவனே யெம்மை நல்கும்
மும்மலமோ சனகுருவா முன்னுபதே சாதியருண் முதிய ஞானம்
மும்முறையா லும்மவன்பாங் கமர்ந்துவழி படலோசிற் கமைதி யாகும். ()

ஆதலினு லவனையடைந் தனையகுரு பத்திவழா தமைந்து வாழ்தி
கோதறவீற் றினினமது குளிர்கமல பதநீழல் கூடு கிற்பாய்
போதுமென வருள்புரிந்தப் புனிதசுயம் பிலிங்கநடுப் புகுந்து வெற்பின்
மாதொடுமந் திரநாதன் மறைந்துவீற் றிருந்தனனிவ் வையம் வாழ. (ககஅ)

பின்னருளா லகிபதிசெம் பியற்கூவி யமுதேசன் பெரிய வன்னைக்
கன்னமகோற் சவம்விதியி னாற்றுவித்தாங் ககல்பிரிவிற் காற்ற னாகிப்
பன்னருளா ணையுமறக்கும் பான்மையதோ வென்றிரண்டு பாங்கு முள்ள
மன்னவொரு வாறமுத வள்ளலைத்தாழ்ந் துள்ளமெலாம் வைத்திட்டாங்கே

வெற்றுடல்கொண் டேகுபுபால் வீரையிற்றன் றூரவனடி வீழ்ந்து முற்றுஞ்
சொற்றனையன் பணியாற்றித் துன்னினனென் றருணந்திசொலக்கேட்டின்ப
முற்றசனற் குமரமுனி யுழுவலன்பா லடிகளினி யுதக வேநதன்
றுற்றவண்முன் பெற்றபயன் சொற்றருள்கென் றிலறஞ்சிடவத் தூய நந்தி.

வேறு.

மேலினி சருளின னென்று சூதன்முன் மேவிய முனிவர ரன்பு கூர்தர
மாலறு கதையினு மங்க ளோதுறு மாசிரி சரிதமி துந்து மாதர
மேலுற வினவினர் நன்று கூறின ரேவரு மிகசுக மென்ப யாவையும்
வாலிதி னுகருபு பின்பு மாபதி வார்கழ லடிநிழ லொன்றி வாழ்வரே. (கஉக)

ஆதிசேடன் சிவார்ச்சனைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஅச.

# வருணன் சாபமோசனச் சருக்கம்.

அரபதி சென்றமு தேசனை யளியொடு முன்புரி பூசனை
மரபுரை தந்தன மேலினி வருணனை யன்றுடல் சாபமு
னொருவிய நன்கதை கேளென வுணர்தர வன்பினொ டோதுறுங்
குருபர னென்றுல கோர்தொழு குலவரு ணந்திபி ரானரோ. (க)

விதிதரு மைந்தமுன் னாளலை விரிகடற் கரசொரு வேள்விசெய்
மதிகொடு பாதலத் துற்றவண் மறையவ ரின்மையிற் சிற்சில
கதிபடர் தௌத்தியர் தமைவிளீஇக் காசினி மறையவர் தமையழைஇ
யதிவிரை வருகென வவனிபுக் கவர்மறை முழுதுண ரந்தணர். (உ)

தங்களை யுறுசெய றெரித்தாஞ் சார்கென வழைத்தன ரம்மறைப்
புங்கவர் நிடேதமப் பாதலம் புகுசெய லென்றெதிர் மறுத்தன
ரங்கது தூதுவர் பாதலத் தம்புதி கோன்முனி யம்பின
ரிங்கினி யென்செய லென்றற விறையுள முடைந்திஃ தெண்ணுமால் (ங)

கருதிய வேள்வியெப் படியுநாங கவினுற முடிப்பது கருமமென்
றொருவரு முபாயத்தின் வேதிய ருங்குறப் புரிதுமென் றுன்னுபு
வெருவரல் பின்னுற னோக்கிலான் வினைவரு முன்மதி வீயுமென்
னொருபழமொழிபழுதுறுதுதன்னுழியுணர்தரும்வகையுஞற்றுவான் (ச)

தன்னுழை வதியுமோர் விற்பனன் றகுகலை பற்பல கற்றுள
மன்னுறு புலவனோ டவனியில் வந்தொரு மகிபதி வாயிலின்
முன்னமர் கெனப்புல வனைநிறீஇ முதுபொருள் குறித்திவண் வருகுவார்
துன்னுபு விப்பிரர் பற்பலர் தொகுமவர் தமையெதிர் கூவிநீ. (ரு)

இசைதரு சாத்திர வாதத்தி லென்னைவென் றிடினுமக் கீகுவ
னசைமிகு பொருள்பல வென்றவர் நயப்புற மொழிந்தவர் தமையெலா
மசைவற வென்றலை கடலிடை யாழ்வுறத் தள்ளுதி யென்றுரைஇ
வசைநிறு வுதலினப் புலவனை மற்றவ ணிறுத்தின னேகினான் (சு)

புனலிறை பாதலம் புக்கபின் புலவனு நினைப்பரு மச்செய
லினிதென வாங்குறு கசோளர்மு னிருடிக ளெதிருரைப் போர்புரிந்
தினிவரு துயர்க்கட லிடைப்புன லிறைவிழு திறனனி தெரிப்பல
னெனவலை யெறிகட லிடைத்தனி யேகின னத்துணை[illegible]டாதிறை. (எ)

அழலினை முடிதனின் முடிதலீ தலதிலை யெனநிறை யார்கலி
விழலுறு மவர்களை யறிவெலாம் விழலுற வொற்றுவ ரார்ப்பில்
வழியவ னுறப்புரிந் துன்னிய மகமகங் கொதித்தெழு மாறென
வெழவழ லாகுதி யாதிசெய் தெண்ணிய செயன்முடித் தனமென. (அ)

முறுகினின் றெழுசெருக் கறிவினை மூடவம் மூடபுத் தியினிலவ்
வுறுவர்க டமையுரை யமர்பினு முஞற்றுபு நீரெமை வெல்லுநா
ளறுதியிங் கமர்தனுங் கடனென வவர்தமை யறிவிலி தகைஇயினு
னுறுவது தவிர்வதெவ் வருந்தவ வுறுவரு முறுவரன் றென்பதால். (௯)

பின்பவ னமர்தரு சுகோளர்தம் பெருந்தவ மோருரு வாயினோ
னின்பமிக் கருமறை யாதிய யாவையு முணர்ந்துமெய் தேர்ந்துளான்
றன்பெய ரட்டவக் கிரனெனுந் தாபத னுபதுத் தாரண
மென்பஃ தேனையர்க் காற்றுவா னின்றவற் குறுதுயர் பொறுக்குமோ. (௧௦)

தாதைபா தலத்தினை செயறெரீஇத் தரிப்பற வுளமிகு பதைப்பொடு
மோதுமக் கணமவ னுற்றெதி ரொருசொலி னச்சமர் வெற்றிகொண்
டேதறு தாதைமு னுகவங் கிருந்தவ ரிருந்தவர் யாரையு
மேதினி புகுந்துதந் நியதிகண் மேவிய வமர்கென விடுத்துமேல். (௧௧)

குடபதி கேண்மதி பாழ்மதி கோண்மதி யாதுகொண் டேமதி
மடமைய ரெனவதி பாதக மலிவினை புரிந்தனை யாதலி
னுடனறி விழந்தனை பித்தனு யுடலழி குருபமுற் றுலைதரக்
கடவையென் றினைதரு சாபமுன் கழறின னேகினன் ஞதைபின். (௧௨)

வருணனவ் வழியறி வழிந்துடன் மலினமுற் றலைகிலை மனைமுனோர்
தெரிபழி மனத்தரிப் பாதகந் தீர்வதென் றென்றுளைந் தினைந்தன
னொருவிலிப் பழிதெற நீடுநா ளுழலுமவ் வருணன்முற் புண்ணிய
முருவினுற்றெனவிரூபாக்கனென்றொருபெருமுனியவ னுற்றுளான். (௧௩)

எதிர்தொழன் முதலுப சாரமின் றிருந்தன னறிவழி குடாதுகோ
னதுதெரிந் துடன்விரைந் தவன்மனை யமைச்சரம் முனிவர னடிபணீஇ
முதுதவ முனிவரர் சிகாமணே முழுதுநி னடியல தரணிலேங்
கதுவென நசிக்குமா மேதையோர் காட்சியெத் தீமையு மென்பரால். (௧௪)

அடிகளை முற்றவப் பெரும்பய னுகவிங் கடிதொழப் பெற்றனங்
கடிகெழும் பதிமதி மயலெனக் கழறுவ தென்னினி யேழையே
மொடிவற முழுதுணர்ந் தருளனு மொண்கல னணிகல னெனக்கொடே
[illegible] நேர்பணிந் தனாடிக் கடியரோ (௧௫)

எழுமினு மிறைபுரி பாதக மெவற்றினும் பெரிதது பிராமண
ருழியவ மானஞ்செய் துற்றதிவ் வுறுபழி யகற்றரி தாயினும்
வழிபடு நம்பொருட் டிரக்கமும் வளர்ந்தெழு முளநனி யாதலி
னொழிதரு முபாயமிங் கோதுது முணருதி யெனைப்பினு மோதுமால். (கசு)

நமதிறை மனமழி சாபமு னுவன்றரு டாபத னியாவையு
மமைதர முழுதுணர் தூயனவ் வட்டவக் கிரிப்பெய ரண்ணல்சொ
னிமிர்பெரு வலியின தாதலி னிறைபரி காரமுற் றுறினலா
தெமதியல் வலிகொடு மாற்றரி திப்பரி காரமு மிவணலால். (கஎ)

எனையர் புரிதரி னிரிதரா திவன்மது பானமுன் மத்தனு
யீனரிந் திதசபா பிட்டனு யினனறி வுற்றல தியல்புரு
தானமி லெனையதிப் பாதலத் துஞற்றுதன் முறைமையன் றம்புவி
மேனல மாதல மீதுற விதிமுறை புரிவதென் றேதிமேல். (கஅ)

மனைமலர் புனைதன கரமவன் மத்தகந் தனின்முறை வைத்தனன்
காவிலவ் வத்தமத் தகசயயோ கப்பெருந் தீக்கையி னுக்கமிக்
கொருவுணர் முழுதுறப் பழுதிலவ் வொருமுனி யிருதொழு திருவடி
சிரசுதை வரவிழுந் திறைஞ்சுபு தீயவிப் பேயனை நீயலால். (க௯)

அருள்பவர் பிறரில ரண்ணின சடியல திலையென நமநதுள
முருகிய மேதகு சீதள வுதகமென் பதமிசை யாட்டியப்
பொருவில்பா தோதகஞ் சென்னிவாய்ப் புரோக்கண சமனமு னியற்றுபு
மருமலர் மீதுவருக் காதியான் மரபினி லருச்சனை யாற்றினன். (உ0)

பூசனை புரிந்துட னஞ்சலி புரிந்தெதிர் தொழுவரு ளுனன
நேசமு னீடிய நோக்குபு நிறையருள் செலுத்தவப் புனலிறைக்
காசறு முத்தம மந்திர மாற்றினின் வகித்திடு மாற்றன்முன்
மாசற நல்கிவெண் ணீறுமெய் வயங்குமுத் தூளன மாமனு. (உக)

திறன்மலத் திரையமொய் நசித்தொளிர் சிவத்துவப் பேற்றினை யளித்திட
லறிகுறி யெனுந்திரி புண்டர மணிமனு நியாசங்க ளிருடிகள்
குறியதி தேவதை சந்தமுன் கொளவுப தேசமுன் றந்துபின்
மறைநடு மத்தியின் மத்தியின் வயங்குயி ரக்கர பஞ்சகம். (உஉ)

பிரணவத் துடனுப தேசமும் பிறங்கிய புரிந்துதன் னேக்கினுற்
கரிசுமுற் றொழிந்தொளிர் முத்தனுய்க் கவினுறு மவனுழி மேலுந்த
னருள்விரி தலினுயர் சிவாகமத் தவிர்முறை யிந்திர நீலமா
பரசிவ லிங்கமொன் றனையவண் பதிட்டைசெய் தருச்ச[illegible] புரி[illegible]. ( )

குடபதி கேண்மதி யிவ்வருட் குறியைநி னுடலள விடையறு
திடர்தப மிடையுப காரணமுற் றியைதர நியதியி னொடொறுந்
திடமிகு மளிமிக வுளநனி திகழ்தர வருச்சனை முற்செயக்
கடவையென் றெதிரிறைஞ் சவனிரு கரமிசை யருளினன் மாதவன். (உச)

அரிபிர மாதிய தேவரு மருமறை யாதிய நூல்களுந்
தெரிவொழிந் தன்மைசொற் றேலிடச் சிவசிவ வுணர்பவ ருணர்வையு
மொருவியெந் நெறியினு மதீதமா மொருபொரு ளிருகரத் தொருமையின்
மருவியிங் கெளிதுற வெப்பெரு மாதவ கோடிகள் வாய்த்தனன். (உரு)

வேறு.

என்றுவெழு மாதர மீதுறவவ் விலிங்கேசனை யாசிரி யன்சொல்வழி
மன்றுமனுப் பாவனை யாதியெலாம் வழுவாதருச் சித்துப தேசமுறைத்
தின்றுவற நீள்குறி நல்கியரு ளியதேசிக பூசனை சேர்புரியா
வின்னீண்மணி யாதிய வாயதிர வியநேர்தொழு காலுறை நல்கியரோ.

தொழுதாங்கெழுந்தஞ்சலிசென்னியினிற்சூடித்திருமுன்னுறநின்றனனம்
முழுமாதவ தேசிக னவ்வருணன் முகநோக்குபு கேண்மதி நீக்கிறைவ
வழுவாதமர் தாபத சாபவினை மாற்றுஞ்செயல் போற்றுதல் வேண்டுமெனக்
கெழுவாரிதி சூழ்புவி யின்கணலா லிவணிசெயி னும்பய னின்றதனல். ()

புகுபாரினும் பாவன மாவனமே பொருத்தம்மெளி திற்பய னுமுடனத்
தகுமாவனங் காவிரி யாமியதி சையின்மாமறைக் கானன மேற்றிசையிற்
றொருயோசனை யோரிரண் டின்னுளதச் சூதாரணி யத்தமர் தூமணியைச்
சுகபோதக ரூபவ நாமயனைத் தோன்றாத்துணை யாகும நாதியனை. (உஅ)

படிவாழு மணிச்சுடி கைப்புனித பணிராசசற் பூசித பாக்கியனை
யடியாருளத் தாரமு தச்சுவையை யமுதேசனை யளிநிறை மனமுருகக்
கடிமாமல ராதிவி ராயவுப காணம்பல வோடள வாமணியா
லொடியாதமர் பூசனை யாற்றுதிமே லுவணோர்சிவ லிங்கமு முன்பெயரால்.

மாபாற்பிர திட்டை புரிந்திறைவன் மகிழ்வேள்வியும் போற்றுதி யிவ்வகைநீ
புரிவாயெனிற் சாப நசித்திடுமப் பூசைத்திருத் தொண்டது வன்றியுமே
லொருவீடுமளிக்குமெனப்புகன்றானுதகேசனெழுந்தெதிர்தாழ்ந்திறைஞ்சிப்
பெருவாழ்வு தரப்புகு சற்குரவ பெரியோய்நின திருவினை யாக்கலியை. ()

எவர்மாற்றுநர் சொல்வழி நிற்பனின்வாக் கிடையேழைவின் ணப்பமொன்
றையதிருச், செவிசாத்திடெ னையம கற்றியருள் செயவேண்டுவ லென்னவ
தென்னையெனச் சிவசாத்திரம் யாவையு ஞானமலாற் றிகழ்மோக்கமின்
றென்னவச் சூதவனத், தெவமாற்றமு தேச சுயம்பிலிங்கத் திறைபூசனை
நன்றருண் மென்றுதேனே. (கூக)

எனவேவரு ணன்புகல் கின்றதுகேட் டிறைகூறுமுன் னூலுள்ள சத்தியமே
யனஞானமப் பூசனை யன்றியுரு தகத்தும்புறத் தும்புரி பூசனையான்
மனதூய்மையச் சுத்திப ரம்பரையின் வருமாண்சிவ ஞானமப் பூசனையே
முனமேதுவென் றோதலுஞ் சத்தியமே முத்திக்கது பரம்பரையேதுவதாம்.

அவிரோதமுன் சொன்னதுங் கேட்டதுமென் றறிநீபினுமத் தெளிவோதுதுங்
சிவபூசையொடங் கியமெத் தவருஞ்சிவன் சந்நிதேசமென் றோதுமறை [கேள்
யவமேயவை யுத்தம பூசனையா மித்துவேசிவ ஞானமென் றோருதியச்
சிவபூசையுண் மந்திரம் பாவனைதூச் செயறந்திர மாதிய வாயவையெலாம்.

முன்னூனுணர் வன்பருள் சாந்தமுதன் முற்றுங்கொளுமுத்தமசத்துவனு
யன்னோர்மிடற் றோனருள் புக்குநன் றாலறிவான தனருமைபல்பெருமையெ
மென்னேயினிப் பூசனையேயலதொன் றிறவாதலின் சிவதுமுண்டுகொ [லா
வின்னேகர மெல்லியி னத்துவித விருப்போகர்ப் பூசனை யேதரலால். [லோ

இதன்மேலுமெய்ப்பேறுயிர்க்குள்ளதுகொலெல் நூலுமிசைத்திலதுண்டென
றதையேபுரிந்தத் துவிதானந்தவாழ்வடை வாவெனவோருதியீதலதுந் [வென்
துதிசேர்சிவ மாதல வாசமுறீஇச சுயம்பீசவ ருட்குறி நேர்தொழுதி
யதிமேவினுமுத்திபரம்பரையினருண்மென் றுணருண்மையிதையுமுறேல்.

அல்லாமலு மத்தகு சூதவனத் தமுதாகர சுயம்பிலிங் கேசனையாங்
கெல்லாருமுக் காலமு நேர்தரிசித் திடியாதுவ சித்திபெற் லெனவன்
மல்லாரவன் றேகம்வி டும்பொழுதம் மனுநாயகன் றேவி யொடும்புகுந்தே
வில்லார்தரி சனமளித் தொப்புயர்வில் வீடுந்தரு வானிது நிச்சயமே. (கூசு)

இவ்வாய்மையை யோர்வறி னித்தலமேயிருங்காறும்வசித்துமெனும்விரதஞ்
செவ்வேகொடுசாந்தமன் பாதிதினந்தினமோங்கியவிட்டலிங்கார்ச்சனையோ
டவ்வாரமு தேச தெரிசனமைந் தெழுத்தின்செபந் த்யானமுன்னையபுரீஇத்
தெய்வாதிப னாருண் மூழ்குநர்க்கத் தேவேச னளித்தல் விரிப்பவரார்.(கூஎ)

வேறு.

கேண்மி யாவுத கேசநாம் விரிப்பதென் கிளத்துஞ்
சேண்மு னேகுமம் மாவனஞ் சென்றமு தேசன்
றாண்மு னேபணிந் துன்பெய ரிலிங்கதா பனமும்
வாண்மு னீலலிங் கேசவான் மார்த்தபூ சனையும். (கூஅ)

மரபின் வேள்வியுஞ் செயினட்ட வக்கிர முனிவன்
றரமுன் னீனிடர் புரிந்துள சாபமோ சனமாம்
வாத மெய்ச்சிவ ஞானமா மகோததி மூழ்குந்
தாமு மாமல னுறவொரு தலையெனச் சாற்றி. (௩௯)

அமல னும்விரு பாக்கமா முனிவா னகன்றுன்
சமல நீக்குமத் தாபத முனிவரர் றனதாட்
கமல மன்புறத் தாழ்ந்தருந் துதிபுரீஇக் கனிந்து
நமல நீப்பதித் தலமல திலையென நீயந்தான். (௪0)

துணிவு கொண்டெழும் வருணன்முன் சூழ்பரி வாரந்
தணிவில் பற்பல பொருட்குவை புரோகிதர் தம்மோ
டணிசி றந்ததன் பத்தினி சகிதனு மனைய
பணித லத்தினும் பிலத்துவா ரத்தின்மேற் படரும். (௪௧)

பிலத்தின் மேல்வரு மவன்முன மருமையிற் பேணு
நலத்தி னத்தகு பாவன மாவன நாமத்
தலத்தி னோர்தடத் தெழுந்தன னத்திருத் தடமுன்
புலத்தின் மேதகு கௌதம முனிதரு புவனம். (௪௨)

அனைய தவ்வமு தேசலிங் கத்தின தவாசி
தனியொர் முப்பது விற்கிடை தூரத்திற் றன்பா
லனக சானவி யாகுமா தீர்த்தமுற் றடுத்தே
யினிது நித்திய வாசஞ்செய் தறத்தனி யிலங்கும். (௪௩)

தேவ தீர்த்தமென் பெயர்பிர சித்தமா மனைய
வாவி மேற்றன மனைபரி வாரமோ டெழுந்த
சீவ னதிபன் மரபினத் திருத்தந்தோய்ந் தார்வ
மேவ நித்திய நியதிகண் முடித்துமே னிலவும். (௪௪)

மணியி லிங்கவான் மார்த்தபூ சனைமுறை வயக்கிக்
கணித மில்லுப கரணசங் குலத்தொடுங் காந்தை
பணிச னங்கள்பின் வரச்செலீஇப் பணியணி வேணித்
திணியி ருட்களந் தமுதிறை சினகரத் திருமுன். (௪௫)

தூல லிங்கமாங் கோபுர துவாரத்தி னிருபாங்
கேல வைங்கர னறிரு செங்கர னெனுமப்
பாலர் பைங்கழன் முறைபணீஇப் படர்ந்துகோ புரத்துட்
சால வந்ததி காரநந் தீசர்தாள் சார்ந்து. (௪௬)

படியு றப்பணிந் துட்புகுந் தருள்பெறப் பரிந்து
விடைய ளித்தருள் கெனப்பராய் வேண்டுகொண் டடுத்தாங்
கிடப நந்திதாள் பத்திர விலிங்கநே ரிறைஞ்சி
முடியி னஞ்சலித் தாறிரு முறைவலம் புரிந்து. (சஎ)

இரவி யாவினு மிக்குய ரிமாசலே யெழுமையாள்
பெரிய நாயகி திருமுனம் பெருகுமன் புய்ப்ப
வருண்மு னீர்த்தெழ விருவிழி யருவிநீர் வெள்ளம்
சொரிய வுள்ளுநீ டுயள்ளெழிற் றிருவுருத் தோற்றம். (சஅ)

கண்கு ளிர்ப்பநோர் கண்டனன் றண்டெனக் கடிதே
மண்கு ளிர்ப்பவீழ்ந் துயிருணர் வொழிபர வசனு
யெண்கு ளிர்ப்பவா னந்தவா ரிதிமிதந் தேறிப்
பண்கு ளிர்ப்பநே ரெழுந்துகன் றின்னணம் பராவும். (சகூ)

அகில மீன்றரு ளன்னையே யறிவிலாச் சிறியேன்
றகையின் மைந்தர்க்கே நிர்க்கதி நினைந்துளந் தயைகூர்ந்
தகல்வு றுதளிப் பதிலனைக் கார்வமே லென்ப
புகலி லேழைநான் புகல்வதெ னென்றெதிர் போற்றும். (ருo)

வேறு.

மலப்பகை யொன்றே சீவர் மாட்டொரு வாது டற்றுந்
தலைப்பகை யதனை மாற்று தலைத்தலை யிரவ கித்தா
மலைத்துமேன் மூளங்க றுத்தம் மலவிருள் வடிவே தான்கொண்
டலைத்தென நெறித்தொப் பெல்லா மசற்றுகூ ரளகம் போற்றி. (ருக)

இருண்மல வெப்ப நீக்கி யின்னருட் டண்மை யாவிக்
கருள்வது தெரிக்கு மெண்ணு ளவிர்மதி யளிகம் போற்றி
தருமலக் காடு லர்த்தித் தகித்துமேன் ஞானப் பைங்கூழ்
பெருகிய வமுதம் பெய்து பேணுமுக் கண்கள் போற்றி. (ருஉ)

துக்கதுர்க் கந்த நீக்கிச் சுகமெனுஞ் சுகந்த மோங்தே
யொக்கவா ருயிர்முற் றுய்வா னுயிர்ப்பெழு நாசி போற்றி
தக்கசொல் லமுத நாதன் றடஞ்செவி வழியே யுள்ளம்
புக்குத ராண்டப் பைங்கூழ் போற்றெழிற் றிருவாய் போற்றி (ருங)

சமர்புரந் தகித்த மூரல் சமழ்ப்பவூங் கவற்கும் பேரின்
பமைவிலா ரமுதம் வாக்கு மணிமணி முறுவல் போற்றி
நிமலனே காந்த ஞக நிகழ்த்துப தேச வாய்மை
யமுதுல குயமடுக்கு மஞ்செவித் துணைகள் போற்றி. (ருச)

தெண்ணிறை மதியான் ஞான தேசமுற் றளித்த றேற்றுந்
தண்ணிறை மதிமு கத்தின் சயம்பிர காசம்போற்றி
வண்ணவான் மடிமூ லைப்பான் மானமெய்ம் முகநிறைந்து
கண்ணிரு மதகிற் பாயுங் கருணையா ரமுதம் போற்றி. (௫௫)

உருவுக் கோறும் வெவ்வே றுயிர்க்குயிர்க் குயிர்தா னேயாந
தருணமங் கலப்பூண் டாங்கு தன்னிகர் கண்டம் போற்றி
யருள்பர வபர ஞான மாருயிர்க் களிப்பப் பூரித்
திருமணி நீல மூடி யிசைத்தபொற் றசும்பு போற்றி. (௫௬)

ஆயிர கோடி யண்டத் தாவிமுற் றொவ்வோர் சூலின்
மேவிய பெற்றுஞ் சற்றும் விகாரமி லுதரம் போற்றி
தூயசிற் றுதரத் தாவித் தொகையினைப் பிணிக்கு மாற்ற
லோயிருள் புறத்தி னோடு மொழுக்கம்போன் மூரோமம் போற்றி.

இருதய கமலங் கீழ்நின் றெழும்புநீர் நிலைய வாவி
மருவு*மா வர்த்த மேயாம் வலம்புரி நாபி போற்றி
புரகரன் சேமத் தேரிற் பொலிகடி தடசீர் போற்றி
யிரதமே லரம்பை யாக வியைகவா னிணைகள் போற்றி. (௫௮)

பருமுலைக் குடைந்து கீழ்வீழ் பந்தினைக் காது சேயபோ
லருணனி நிறுத்தி வைத்தாங கவிர்முழந் தாள்கள் போற்றி
யிருவரால் வனப்பு வெள்ளத் திலங்கனேர் கணைக்கால் போற்றி
பெருகெழில் முதிர்சம் பீரம் பிளவுசெய் பரடு போற்றி. (௫௯)

ஆமையொவ் வாமை மாமைக் கைநதொடுக் கியும்வி ரித்தும்
† போமெனப் பலகா லேக்கும் புறவடி விரல்கள் போற்றி
தூமறை யுபநி டங்கள் சுமந்திடப் பெறுத ரற்றத்
தேமிகன் புளத்தி லங்குந் திருவடிக் கமலம் போற்றி. (௬௦)

உரைசெயி னகிலபோக முடனளிந்து வீடு நல்கும்
பெரியநா யகியென் றோதும் பெருந்திரு நாமம் போற்றி
இரிசைநின் னருளி னல்லாற் கிட்டரு மமுத நாதன்
றிருமுனுற் றருண்ம டுத்தல் சிறியனேற் குறுவ துண்டோ. (௬௧)

---

* ஆவர்த்தம்-நீர்ச்சுழி. † போம் என்பதில் வினைவிசை ஓகாரந் தொக்[illegible] "செய்புதற்காமெனின்" என்பதிற்போல்.

சேயரை யணிய ராகச் சேர்ப்பது தந்தை பாங்கத்
தாயருட் கடனே யேழை சாற்றியும் பிழையி ழைத்தேன்
றீயவெஞ் சாப நோயாற் றியங்கிய சிறிய னாயே
னுயவிப் பிழையு மாற்றி யருடியா லன்னே யன்னே. (சாஉ)

என்றுமுன் றுதித்துப் பல்கா லிறைஞ்சியா ரருள்பெற் றேகி
மன்றறுன் றிதழி வேணி மந்திர நாதன் கோயில்
சென்றுநந் தீசபாத தெரிசன முறைசெய் தப்போய்
நின்றொளி ரமுத ரூப நிறையருட் குறிமேற் கண்டான். (சாங)

கண்டனன் கரண மொன்றுங் கண்டிலன் றன்னைக் காணான்
றண்டெனப் படிந்தா னந்த சாகரந் திளைத்துக்
கொண்டெழு சிவானு பூதி கூர்பர வசனு யொன்றிப்
பண்டுணர் வருதி ரிப்பப் பைப்பயக் கரையி வர்ந்தான். (சாச)

அண்ணலின் னமுத மேனி யம்பகங் குளிர நோக்கி
யுண்ணெகிழ்ந் துருகச் செங்கை யுச்சிமேற் குவிய நேர்நின்
றெண்ணரும் பிறவி தோறு மெய்பெருந் தவம்பு ரிந்தேன்
கண்ணெதிர் காணப் பெற்றேன் கருணையா ரமுத ரூபம். (சாரு)

எனமுனந் துதிய னேக மிசைத்தடிக் கடியி றைஞ்சி
மனமுவந் தமுத லிங்க வாதனுங் காதி சேடன்
புனைதிருப் பணிக ளோடம் பொன்மணி யணிக ளாதி
நனிவிளை நிலங்க ளாதி நல்குபு பெரும்பே றுற்ற. (சாசா)

அருட்டிறன் முற்றுங் கேட்டாங் கதமிகு வகையன் புந்தப்
பொருட்டிறன் முற்று மீட்டிப் புனிதமா நியாச மாதி
தெருட்டுசீ ருருத்தி ராதி செபமகா வபிடே காதி
மருட்டெறு நிவேத னாதி வயங்கவா கமநூன் மாண்பால் (சாஎ)

போற்றுமா பூசை மாசிப் பூரணை யாய வாரா
னேற்றிவ ரமுத நாதற் கியற்றுபு வேண்டு கோட
லாற்றினன் பதிநூ லோதி யாய்ந்தமை நன்பின் வாய்மைத்
தேற்றுவிப் பிரர்க்குத் தானந் திறப்பட மகிழ்ந்த ளித்தான். (சாஅ)

இன்னண மரபி னுரு மியற்றியத் தலசி வாச
மன்னுறக் காலந் தோறும் வந்துவந் தமுத நாதன்
றன்னடி பணிந்த மர்ந்து சாருநாட் பிலத்தி னின்று
முன்னெழீஇப் போந்த வாவி முதுதட மதனி லேகி. (சாகூ)

சாலநூன் மரபிற் கோலிச் சாற்றும் வேள்வி யொன்று
மாலற வியற்றி யார்வ மலிதிருப் பணிகள் பல்ல
காலொளி யணிகள் பல்ல கவினுறப் புரிந்த ளித்து
வாலிய வமுத நாதன் மாபூசை மேன்மேன் மல்க. (எ0)

புரிந்தெதி ராண்டு மாசிப் பூரணை நாளி லன்ன
வரந்தரு பூசை முற்றி மறையவர் வெறுப்ப நல்கிப்
பரிந்தெதிர் நோக்கி யந்தப் பார்ப்பனர் குழாத்தை யென்பா
லரந்தை செய் சாப நீக்கி யருண்மினோ வென்று தாழ்ந்தான். (எக)

வேறு.

ஆங்கது வினவிய பனவரெலா மார்கலி நாயக கேண்மதியா
லீங்கமு தேசசு தரிசனநிற் கெப்பொழு தெய்திய தப்பொழுதே
நீங்கருந் தீவினை யாவுமுடனீங்கிய மாமுனி சாபவினைத்
தோங்கழி பாக்கினி வேண்டுவதென் றாயவ னுயினை நீயெனவே. (எஉ)

ஓதின ரோதுமச் சொன்முடிமு னும்பரி னெம்பெரு மானருளா
லேதறு மேற்றிசை காவலகே ளெம்முன மெய்திய வப்பொழுதே
யேதமு னியற்றிய சாபமொன்றே வெப்பவத் தொப்பறு வெப்பிடருந்
தீதற முற்றொருங் கற்றனவாற் றிடமிது நின்மல னுயினைநீ. (எங)

இன்னினி யெண்ணிய காமியமுற் றெய்துபு வாழ்ந்திருந் தீற்றினினுஞ்
சின்மய ரூபமெய்ஞ் ஞானமுறீஇத் திகழ்பர மோக்கமுஞ் சேர்கவெனுத்
துன்னரு மின்னமு தொழுக்கெனவே தொடர்புற வெழுந்தன தூமொழியப்
பன்னச ரீரித னிருசெவியாற் பருகின னுருகினன் பாடினனே. (எச)

ஆடின னோடின னீடியபே ரானந்த வாரிதி மூழ்கியெழூந்
தீடிரி பீடைகள் சாடியெளி யேனையு மேன்றுகொ ளத்தகுமோ
பீடிரி தீவினை புத்தியுறப் பேணினின் முற்றிய பீழையினேற்
கேடவிழ் சுவன்னக வேணியமு தேசனிங் கருளிய தென்புகல்கேன். (எரு)

எந்தைசெ யாரரு ளென்றரமோ வெத்தகை யோர்க்கு மியம்பரிதென்
றந்திலவ் வம்புதி நாயகனவ் வமுதலிங் கேசன்மெல் லடிக்கமலஞ்
சிந்தையுஞ் சென்னியுந் திகழ்தரமுன் றிருத்தக வீழ்ந்தடிக் கடியிறைஞ்சி
முந்துபஃ றுதிபுகன் றரிதுசெலீஇ முனமிரு கண்டரு டனையனவண். (எசு)

நிறுவிய வருட்குறி யவாசியினி னிலவுதன் பெயரினி லோரிலிங்க
முறுவிதி வழியினிற் பதிட்டைபுரிந் துளமிகு மளியுறப் பூசனைசெய்
தறிவுள மமுதலிங் கேசனடி யமைந்துறப் புறம்புகுந் தகமுழுதும்
பறிகொடுத் துழுமவன் சுவாசிரய பாதலம் போந்தமர்ந் திருந்தனனால். (எஎ)

ஆதலந் தனிற்சிவ சிந்தனையோ டனைத்தையுஞ் சிவமெனக் கண்டமையும்
பரசிவ ஞானமொ டமர்ந்தனனப் பனிக்கட லரசைவிட் டொழிசாபம்
வருபயங் காவுரு வாயட்டா வக்கிர மாதவற் றொடர்ந்தன்று
லொருவரு மனையவெஞ் சாபத்தீ யுருவினை யெதிர்தெரிந் திதுவென்னே.()

எனநனி கருதிமெ யுணர்ந்தன்னோ னைத்தகு பாதக வினையாவுந்
தனதெலை புகுமுனந் தொலைத்தின்பே தருவது சேகர வடவியென [தாங்
மனனுறத் துணிந்தொரு நொடியாங்கே வந்தறன் பூழ்கிவெண் ணீறணிந்
தினிதெழுத் தைந்தெணி யமுதேச னிணையடி முறைபணிந் தெடுத்தேத்தி.

அருமுதலிங் கேசபச் சிமபாகத் தருட்குறி யாழுவியாற் றினிற்பூசித்
திமிர்பயங் காவுருக் கொடுமுன்சா ரிடர்முழு துடனற விரிதாங்கே
நிமலயந் திரமுதல் வனைனாளு நீடனி நீடவி யோடிறைஞ்சி [னா.
விமலமெய்த் தவமுதல் வளர்த்தோங்க விழைந்தமர்ந் தனனென்னு முனைகே

அயன்மக னந்திசே வடிதாழ்ந்தெம் மண்ணலிவ் வருணன்மார்க் கண்டேசற்
கியலுறு தென்றிசை யிலிங்கந்தீர் யினனென வுரைத்தனை யம்முனிவ
னுயும்வழி யருடரு சிவலிங்க முற்றிவ ணிறுவிய வதன்வாய்மை
மயரற வருளுதி யோவென்ன மறுவலு மறுவறு நந்தீசன். (அக)

கடிமல ரடியிணை முடிகொண்டு களியளி யொடுதொழு தருள்கென்ற
படியருள் கதைபக ருதுமென்று பழமைசொன் முனிமுனி குலமுன்பு
கொடிதரு மிவணரு ளியலிந்த நுவல்கதை வினவினர் புகலன்பர்
வடிவொழி பிகநல முழுதுண்டு மருவுவ ரிணையறு பரவின்பே. (அஉ)

வருணன் சாபமோசனச் சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௲கூகூ.

---

# மார்க்கண்டேயச்சருக்கம்.

சிந்து பூப சாபமோ சிந்த காதை யோதினங்
கந்த னொரு மாமிருகண்டு சூனு மாவன
மந்து ரேச சேவையு வந்த பேறு கேளென
நந்தி லாத சீரரு ணந்தி நாத னோதுமால். (க)

வேறு.

வருதிசனற் குமரனெம வளர்குரவ பரம்பரையின்
மருவுமழ வுருவகுரு மணியொன்று வந்துதிப்பப்
பெருகியமா தவம்வாய்ப்பப் பேணிவளர் பெருஞ்சிறப்பி
னொருவரிய திருவெண்கா டெனுநிலத் தொளிர்தருமால். (௨)

என்றுரைத்த பின்னுரைவா யெழுமுனெழுந் திணையடிதாழ்ந்
தொன்றுரைக்குஞ் சனற்குமர னும்பர்மணி முடியுரிஞ்சிக்
கன்றுறசெய் மென்கமலக் கடிமலர்ப்பூங் கழலெந்தாய்
நன்றுரைத்த குருமணிதா னமதுபரம் பரைமணியேல். (௩)

அனையதிருத் தனையமணி யவனியிடைத் திருவெண்காட்
டினிலுதித்த காரணமென் னிளம்பருவ முதுகுரவப்
புனைமணியின் செயல்யாது புகன்றருளி மேலெடுத்த
தினிதருடி யென்னுமென் றிறைஞ்சுதலு நந்தீசன். (௪)

நினதுவினா நனிநன்று நீவேட்ட படிபகர்து
மினியசிவா கமதிருபா னெட்டினுளுஞ் சாரமதா
யனகருரு முனிக்கமல னருளியதென் பததெரிபேர்
புனைரௌர வாகமத்திற் புகல்படலம் பலவவற்றுள். (௫)

பரவருஞ்ஞா னாற்சாரம் பாவவிமோ சனபடலம்
வரநிறையப் படலமிசை வளர்சிவ ரத்தினமா
யருள்பதியு முத்தமமாழ்ந் தாழ்ந்துடனேக் குறநோக்கக்
கருதருமெய்ப் பொருள்விரித்துக் காட்டுபெருஞ் சிறப்பமைந்து. (௬)

தொகையுறவோர் பன்னிரண்டு சுலோகநிறைந் திலங்குமது
புகலவருஞ் சிவஞான போதமெனுந் திருநாமந்
திகழ்தருமென் றுபதேசத் திறத்தினரும் பொருள்விரித்து
நிகழவரு ளினன்கல்லா னிழலமர்பூங் கழலொருவன். (௭)

ஆயதிரு வருண்முறைநற் கார்வமுற யாமுன்னே
ணெயமிகு சமக்கார நிருவாண தீக்காதி
தூயவகை புரிந்தளிப்பத் தோமறுநீ யாமதனைச்
சேயமர்சத் தியஞான தெரிசனியென் பெருமுனிக்கு. (௮)

தந்தனையம் முறையனைய தவமுனிவெம் பவமுனிபு
வந்தனைசெய் பரஞ்சோதி மாமுனிக்கீந் தனனிதனை
னிந்தனையில் கல்லால நிழற்பரம குரவசிவ
சிந்தனைசெய் பரம்பரையென் றிறனமையப் பெற்றனம்யாம். (௯)

பரவருமிக் கைலாய பரம்பரைபூ வுலகினிடை
மருவிவளர் தரப்பெறுக மன்னுயிர்க ளின்னறரு
மிருண்மலநீத் தருணெறிசென் றின்புறுகென் றெம்பெருமான்
றிருவுளம்வைத் தமர்ந்தனனிச் செயலிவ்வா றிவணிகழ. (க௦)

பண்ணிலவு தமிழ்வேதம் பரவுபெருஞ் சிறப்பினையர்
மண்ணுலகிற் றூங்கானை மாடமெனுந் திருக்கோயில்
கண்ணிலவு திருப்பெண்ணா கடமெனுஞ்சீர்த் திருப்பதியி
னுண்ணிலவு மொருவர்பர மோத்தமபுண் ணியவலர். (கக)

இவர்பெயரச் சுதரெனமுன் னிலகுகளப் பாளரிவர்
தவமகிமை யாமுமுரை தரலரிதில் லறத்திவர்வாழ்ந்
தவமறநன் மகப்பேற்றி னூர்வமுநீத் தமக்கென்று
மெவமகலுந் தீக்காதி யாவையுஞ்செய குலகுரவன். (கஉ)

திருத்துறையூர் நகர்க்கதிபன் சிவத்துவிசர் குலத்தலைவ
னருத்திவளர் சிவாகமமே யருமறைமுன் னூலனைத்துங்
கருத்தொருமித் தோர்ந்துணர்ந்து காட்சிநிறை காரணத்தாற்
றிருத்துசக லாகமபண் டிதநாமச் சிறப்புடையோன். (கங)

ஆயவரு ணந்திசிவா சாரியனை யடுத்திறைஞ்சி
நேயமலி தங்கருத்தை நிகழ்த்தியவன் சொன்னெறிபோ
தூயசிவ தருமமெலாந் தொகப்புரிந்து மகப்பேறு
மேயதல தணித்தாகாத் திறத்தான்மீட் டுங்குரவன், (கச)

அடிபரவிப் புகன்றமைகேட் டருமறையிற் சோதித்து
வடிதமிழ்மா மறைமுறையை யுற்றனைய சிவகுரவன்
கடிமலர்தூ யருச்சித்துக் களப்பாளர் தமைநோக்கி
நெடியதிருக் கயிறிதனி னீவிர்கட்டு மாத்துமென. (கரு)

அச்சுதரக் களப்பாள ரம்முறையி னம்முறையி
ரச்சுகரத் தெடுத்திமய நங்கையொரு பங்கனையுள்
வைச்சுரிய மூவரையும் வழுத்தியெளி யேற்கினிய
மெய்ச்சுதனற் குகவென்று வேண்டிவகிர்ந் திட்டனரால். (கசு)

அனையதிரு வடங்கன்முறை யதனிலவ ரிடுங்கயிறு
தனையடையா ளந்தெரிந்து தணத்தியவண் முன்பிறைவ்வோர்
பனையிதழ்க ளெடுத்துடன்முற் படியோலை யீற்றெழுந்து
பினையிதழின் முடிவுறுமப் பெருந்திருப்பாட் டெடுத்திசைப்பார். (கஎ)

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளரினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையென். (கஅ)

பெறலரிய காழியருட் பிள்ளைதிருப் பாட்டுதித்த
திறனினைபச் சிவகுரவ சிகாமணியுள் ளுவந்துவியந்
திறையருணின் பான்முழுது மியைந்தனகேள் களப்பாள
நறையொழுகு வெண்காடு நண்ணுதியிக் கணமென்ன. (கக)

அருளியவச் சுதர்களப்பா ளரும்வியந்தாங் கன்புநனி
பெருகியதம் பன்னியொடும் பேணு பலபொருளோடு
முருகுமனத் தொடும்புகுந்தெதாவ் வோர்தினமு முக்குளந்தோய்ந்
திருளறுபூ சனைவெண்காட் டிறைக்குநனி சிறப்படாய். (உo)

வேறு.

இன்னண நியம விரதநன் னெறியின் றியலுற வாங்கொரு நாளிற்
றுன்னுமவ் வேளாண் குலமணி யாமச் சுதர்களப் பாளர்தங் கனவிற்
பன்னுவெண் காட்டெ மிறைபுகுந் தன்ப பரிந்துநீ யருந்தவம் புரிந்த
நன்னிலை யுவந்தா நின்னுளம் விழைந்த நலனொருங் களித்தலே முறையாம்.

ஆயினு நினக்கிப் பிறப்பினின் மகப்பே றரிதுநின் கருமத்தி னளவான்
மேயநின் னரிய தவம்பழு தாகா விதமொரற் புதமக மேலைக்
கேயுற வளித்து மமைகெனக் கேட்டவ் விருந்தவப் பெரியவர் கிரிசை
நாயக வினிய சேயக மகிழ நாப்பண்வைத் தமர்ந்தரு ணம்ப. (உஉ)

எளியனேற் கொளிய புத்திரப் பேறுன் றிலாமையா லென்னைகொலேதங்
களிமக வருள்கி லாமையா லேழை கருத்தினிற் கவற்சியொன் றிலையாற்
றெளிவுற வவசி யம்பெரி தீண்டெ செப்புவிண் ணப்பமொன் றெந்தா
யொளிர்செவி சாத்தியருள்கென வேண்டியும்பர்கோன் றிருமுனமுரைப்பார்.

அகிலமீன் றளித்த வன்னைபா லமர்ந்த வையபல் கோடியா மாவி
நிகிலமு நின்சே யெனல்புதி தன்று னிசமிதே யாகவு நிகர்வன்
னகிலமர் குறமி னுயகச் சேயை நனிமிகு காதலா னயந்து
முகிலம ரிமவெற் பன்னையு நீயு முனந்திரு நனந்தலை முதமே. (உச)

மருவவைத் தொருவா தமர்திரா லனைய மைந்தனே வந்தருண் மரபாற்
குருமணி யாகிக் காழிவாழ் மணிநின் குலமணி சேய்மணி குமுத
வருமைவாய் மலர்ந்த வருட்டிரு வாக்கு மகிர்தமா மொழிவதோ வந்தோ
கருமமார்ந் துழலிவ் வேழையா லெனுமக் கவற்சியே கணிப்பற வெழுந்து.

ழுது மென்னுள்த்தைவாட்மொலினியான்மொழிவதொன்றுண்டுகொலெ
ன்னுக், கழலிணைதொழலுழலகினுக்கன்புகாட்டியருடித்தவெண்காட்டெமழ
லவிர்காத்தோனன்பநீவேட்டவரும்பொருள்வரும்பதமிதுவே, மழவின்மா
ன்மியநாம்வருக்கொளுதனக்குவாய்த்ததென்றருளுபுமறைந்தான். (உசு)

விழித்தெழுந் தனரச் சுதர்களப் பாளர் மிக்கெழு முவகையின் மிதந்தாங்
கொழித்திட லருமந் தியமநன் னெறிநின் றொழுகுநா ளுலகெலா முய்ய
வழுத்துசுத் தாத்து வைதசித் தாந்த வாய்மைமாண் சைவமீ வாழ
விழுத்தகு தூய பரம்பரை யருளான் மேதினிமீதினி விளங்க. (உஎ)

திருவருள் பெருக வனையதம் பதிகள் செய்தவத் தெய்விகச் சிசுவா
பருளொளிப் பிழம்பா யவதரித் திடக்கண் டன்னையுந் தாதையு மளவாப்
பெருகுமா னந்த வாரிதோய்ந் தருமைப் பெருந்தவக் குருந்தினைப் பேணி
பரனரு ணினைந்து நினைந்துள முருகி யார்வநீட் டினரெடுத் தணைத்தார்.()

இன்னவென் பருஞ்சீ ரருமைபா ராட்டு மிருஞ்செய லின்புறப்புரிவார்
தென்னில முயச்சார் திருவவ தாரச் சிறப்புயர் திருவிழா முதல
பன்னரும் பெருமைத் தினவிழா வனைய பதியினர் கிளைஞர்க ளேனோர்
தன்னிக ருவகை பெருகிய புரிந்து சாதகன்மாதிகள் சமைத்தார். (உகூ)

பல்லுக மொருவா தருந்தவம்பெரிதுபயிற்றினுங்கிடைப்பரும்பொருள்கைந்
நெல்லியங் கனியிற் கிடைத்ததென் றேகைநீர்முழு கிருமுது குரவ
ரல்லினு நீங்கா வருந்துணை யெனக்கொண் டவிர்மணிப் பணிநிரை யணைத்து
நல்லுறுப் பணிந்தா ருயிரினும் போற்று நலனெவர் நவிற்றுவா ரம்ம. (நூ0)

வைதிக சைவ தாபன குருவாய் வந்தருள் புரிந்தெதிர் மறையுஞ்
செய்துற நிறுவி யமர்ந்தன முன்னாட் டெய்விக சுத்தவத் துவித
சைவசித் தாந்தத் தனிக்குரு மணியாய்ச் சார்ந்தரு ளேபுரி குதுமென்
றுய்வருள் காழி வாழ்வுபின் னருமீண் டுதித்ததென் றுவப்புழ முவகம். ()

வழுத்துமித் தூய சேயினைச் சுவேத வனப்பெரு மானெனு நாமந்
தழைத்திட வழைத்தப் பதியினிற் சின்னாட் டங்கியச் சுவேதவ னேசற்
கிழைத்திடு விசேட பூசனை யாதி யியற்றியா ரருள்விடை பெறுபு
மழத்திரு மகவு மனையொடு தம்மூர் வந்தமர்ந் தனர்களப் பாளர். (நூஉ)

ஆங்கமர் வுழிநன் மாதுலர் தமக்கின் னருண்மக வின்மையி னனைய
தேங்குத லையஞ்சொன் மகவையே தமக்குஞ்சேயென்பெறுநசையீர்ப்பத்
தாங்குசோ தரிமைத் துணரிடை வேண்டித் தம்பதிவெண்ணெய்நல்லூரிற்
பாங்குறப் பெற்று ரொருங்கனிச் சேயைப் பரிந்தெடுத் தழைத்துடன் படர்
[ந்தார். (நூநூ)

மாதுலர் தமது மனையலங் கார வகையெலாந் தகைபெற மலிவித்
தாதூ முந்த நேர்புகுங் காலங் கமர்பெருங் கிளையெலா மடுத்தே
சாதிமங் கலங்கள் பெருகுற நீராஞ் சனம் வளைத் தெதிர்தழீஇத் தனைய
வோதகம்புகுந்தவ்வரும்பொருண் மணியையொண் மணிமஞ்சமீ துய்த்தார்.()

ஆங்குளார் தமக்கே யருமையிற் கிடைத்த வருந்தவச் சேய்மணி யாகப்
பாங்குபா ராட்டி யன்னை தா தையைநும் பாக்கியம் பாக்கிய மென்பா
ரோங்குறு முபய குலமணி விளக்கிவ் வொண்சிசு மணியென வுவப்பார்
தேங்குழிக் கிளைமுன் போற்றிய வனைய சேய்மணி தூய்மணி திகழும்.(௩௫)

அம்மணி யாங்கட் பாலலீ லாதி யமர்ந்துசெ யருட்செய லாதி
யெம்மனோ ரெவர்க்கு மியம்பரி தாக வின்பமீ துறவளர்ந் திடுநாட்
செம்மழ லையஞ்சொ *லெனுந்தரா தமருந் திறந்தெரீஇத் தாதைமுற்கிளைஞ
ரிம்மக மணியு மூங்கையாங் கொல்லோ வென்றுளத் தெண்ணமிக்கிருந்தார்.

இவ்வகை யிரண்டாண் டெய்திவா ழிளஞ்சே யனைய மகாரொடு மேகி
யவ்வருள் பெருகும் வெண்ணெய்நல் லூரி னணி பெறு கிடைவிளை யாடித்
திவ்விய மேனித் திருவொளி யெழுந்து திகழவீற் றிருந்திடுஞ் செவ்வி
யுய்வரு டருளிக் கயிலைநின் றேகி யொண்மலை யாசல முனிபால். (௩௭)

அளவளா யினிய நண்புரை யாடி யமர்ந்துபி னிவண்வரக் கருதி
வளனுலாந் தெய்வ வெண்மணி விமான மருவிவிண் வழிச்சென் றொருவன்
பளகறு மவனின் னருள்பெறுச்சுடர் பணிந்தருள் பெறுபரஞ் சோதி
கிளர்தரு மவனிவ்விமானம்வீற் றிருந்து கெழுமுவா னெறிப்புகுங் காலை.()

வெண்ணெய்நல் லூரினவ்விளஞ் சேய்தான் வீற்றிருந் தொளிமறு கதனேர்
விண்ணிலம் மானஞ்செலவொழிந் துறவுண் மிளிர்பரஞ்சோதிமாமுனிவன்
றுண்ணென வியந்தெம் முளப்படியாண்டுந் துரிசற விரைசெலுந் தெய்வக்
கண்ணகன் விமானந் தகையுறீஇ நிற்குங் காரண மென்னெனக் காண்பான்.

திசைகளொன் பானுஞ் சடைசெயா நிலைமை தேர்ந்துபி னதோமுக னாகி
நசைதரு புவியை நோக்கித்தன் விமான நன்னிழ லுறுவுறப் பெற்றுந்
திசைதரு மிளஞ்சே யொன்றுளப் பிரம்பா யிலங்கல்கண் டினையசேய் வி
மான, மசைவறப் பிணித்த பெருவட நிழல்போ லவிர்வதே யல்லதொன்
[றில்லை. (௪௰)

---

* எனும்-இடைக்குறை.

என்றுளந் துணிந்தாங் கன்புமா ரருளு மின்புமற் புதமுநின் றியக்கச்
சென்றொளிர் விமானத் தோடுமம் மறுகிற் சிறார்வெருண் டோடவு மசையா
தொன்றொளி விரியத் தனியமர் சேய்பா லுற்றுநேர் நோக்கியவ் வொருசேய்
தன்றனிக் குருவாஞ் சத்திய ஞான தரிசனி யுருவெனத் தயங்கும். (௬௧)

பெருகுமற் புதநேர் கண்டினி தெடுத்தப் பிள்ளையி னொள்ளிய மேனி
மருவிய துகடன் றானையாற் றுடைத்து மடியினீ வைத்தணைத் துடன்மகிழ்ந்தே
யருளின்மூழ் குவித்தாங் கறன்முழு குவித்தின் பளிக்கும்வெண் ணீறுமெய்
யணிந்து,திருவருட்சத்தியோ திருவாண தீக்கையா னோககமுற் றளித்தே.(௬௨)

தீக்கைசெய் யுழியா சிரியனச் சீடற் சிவமக வாக்கிருஞ் செயலுக்
கேற்கநன் ஞம காணஞ்செய முறையா லெப்பெய ரிடுதுமென் றெண்ணி
நோக்குதன் குரவன் சாயையே போலு நோன்மையாற் றந்தைபேர் மைந்தற்
காக்குதன் மரபான் மெய்கண்டா னெனவேயனை யதன்குரவன் போமைத்தான்.

புனிதவத் துவித நிகழ்சிவ ஞான போதநூற் பொருண்முழு தமைய
வினிதுப தேசித் திதனைநீ மைந்த விருந்தமிழ் மொழிபெயர்த் திதற்கோர்
தனியுரை வாரத்தி கம்மெனும் பெயராற் சாற்றுகென் றருளிமே லனைய
நனியொளிர் சேயை யுடன்கொடு மேலு நகைசெழ வாங்கணித் தேகி. (௬௪)
பிறைநிக ரொருகோட் டைந்துகைப் பொல்லாப் பிள்ளையார் திருவடிக் கமல
நறைமல ரனைய பிள்ளையோ டிறைஞ்சி நயத்துதி பலபுகன் றெதிர்நின்
றிறைவனே யடியா ரெண்ணியாங் கருளு மெந்தையே யிந்துசே கரனே
மறைசிவா கமார்த்த சொரூபனே யிந்த மைந்தனின் னடைக்கல மையா.(௬௫)
காமிக முதலு லேழ்சிவா கமரிக் கான்முளை கருத்தமைந் திலங்க
நீமிக வருள்கென் றத்தனிச் சேயை நேருற விருத்திமீண் டனைய
தோமிகன் முனிவ னீங்கின னுகத் தோன்றலே யென்றிப முகத்தோ
னோமிக வாத சிவாகம முழுது மினிதரும் பொருள்விரித் திசைக்கும்.(௬௬)
இன்னண மாங்க ணிபமுகத் தொருவ னிருநகுரு சிகாமணி யாகித்
தன்னமர் தளியி னன்னமெய் கண்ட தனையனுமுன் னிறைவிடை யாதி
நன்னருற் றிடப்போ தித்திடுங் காலந் நாயகன் றளிப்புற நளினி
தன்னினீர் கொளுமோ ரதையலக் கோயிறனி லெழுமொலிச் சவிசார. (௬௭)
அத்தளி நேர்நின் றுற்றுநோக் கினளாங் கலையசேய தன்னையே கண்டா
ளித்தனிச் சேயை மூங்கையென் றந்தோ வினைவதென் றந்தைதாய் முத
வித்தக மொழிபற் பலபுகன் றீண்டு விளங்குமீ துணர்ந்திலர் போலு [லோர்
மித்தகையவர்க்காங் குரைத்துநா மென்றுங் கேகினள் *செய்மையிற்கண்டாள்.

* செய்மையிற்கண்டாள்-வினையாலணையும் பேர்.

ஏகியாங் கவர்மு னென்னைகொ னீர்நு மிளந்தனிச் சேய்மணி மூங்கை
யாகிய தெனத்துன் புறலொரு கோடி யருண்மொழி தருவதின் றறிந்தேன்
மீகெழு பொல்லாப் பிள்ளையார் கோயின் மேவினீர் காண்மினென் றனளங்
வோகைவா சகந்தஞ் செவிப்புகு முன்ன ரோடிபு தாதையக் கோயில். (சஅ)

முன்னுறச் சேய்த்தாய் வரும்பொழு தாங்கு மொழியெழு மொலியெதிர் கேட்டார்
பின்னரரங் கொருவ ரிலாமையுங் கண்டார் பெருந்தகைச் சிசுசிகாமணியும்
பன்னுசீர்ப்பொல்லா மணியுமே யுடனாய்ப் பரிந்துவீற் றிருத்தலுங் கண்டா
ரொன்னெனவணித்தாயேகினர்முன்ன ரெழுமொழியிலாமைபின்கண்டார்.

ஆங்கவர் வரவு மாகம முடிவு மமையமொத் தமைந்ததோ வயலார்
பாங்குறி ஞேசப் படாதெனு மரபைப் பாதுகாத் திடுமுளத் தானே
தீங்கற முழுதுந் தெருள்கென வுளங்கொள் செய்தியான் முற்றிய திறனே
வீங்குநாளடைவிற்றனித்துணர்த்துதுமென்றெண்ணியோயாதெனவுண
[ரம். (ருக)

வேறு.

பொல்லா மணியுஞ் சேய்மணியும் புகலு மொழியொன் றின்றியமர்
வில்லார் தோற்றங் கண்டுவகை மேன்மேற் பெருக வீழ்ந்திறைஞ்சி
நல்லார் பரவு மிபமுகத்தெந் நாதா வேதா கமப்பொருளை
யெல்லாமுணர்த்துமெந்தாயெம்மிளஞ்சேய்மவுனமிரித்தனையோ. (ருஉ)

மாமன் மலைப்பாம் புருவொழித்த வரத சரத வள்ளாலோ
சேம நிதியே நின்றிருமுன் றிருவாய் முதலிற் றிறப்பதெனுந்
தேமன் விரத நெறிநின்றான் றிருமுன் றிருவாய் மலர்சேயை
யூம ஞேவென் றுளங்கொண்டோ முண்மை யுணரு முரனில்லோம். (ருங)

என்று துதித்தா ரருட்சேயை யெடுத்தா ரணைத்தா ரின்புற்றார்
நன்று பியன்மேற் கொண்டுவந்தார் நணுகுங் கிளைஞர் நற்பதியோர்
துன்று மோகைப் பேரோதை துதையச் சூழத் தம்மனையிற்
சென்று மணியா தனத்தனைய சேய்வீற் றிருப்ப நேர்பணிந்தார். (ருச)

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்தா ளிளஞ்சேய் சான்றோ னெனுமகிமை.
தோன்ற நேர்கண் டின்புற்று நோக்கி யெடுத்தா ணைக்கமைத்தா
ளூன்று மன்பான் மார்பணைத்தா ளுச்சி மோந்தாண் முத்தமிட்டா
ளான்ற தாய்செ யருஞ்செயல்க ளறைத லெளிதோ வம்மம்ம. (ருரு)

நாளு நாளு மப்பதியோர் நவிற்றற் கருமிவ் வற்புதங்கேட்
டாளுங்குலதெய் வதமிதுவென் றடுக்கு மேனைப் பல்பதியோர்
கேளிர் முதலோர் வந்துவந்து கிடைத்துக் காண்டன் மாத்திரையே
மூளு மிடர்நீத் திட்டமெலா முன்னி யாங்குப் பெற்றுவப்பார். (ருசா)

மதிவே ணியனே பொருளென்னும் வாய்மை யுணர்ந்து மனந்துணிந்த
வதிதீ விரசத் தினிபாதத் தமைதி வாய்த்த வுத்தமர்கண்
முதிர்மா மனவா சகங்கடந்தார் முதலோ ரடுத்துச் சூழ்ந்திறைஞ்சத்
திதியா ருணோக் களித்தரிய தீக்கை திகழ்பக் குவநோக்கி. (௫௭)

அருள்செய் குரவன் மொழிப்படியே யருமைத் தமிழின் மொழிபெயர்த்த
பொருள்செய் புனித சிவஞான போதந் தனைவார்த் திகழுடனே
தெருள்செய் தருளி யவ்வடியார் செறிந்து சூழ நாப்பணமர்ந்
திருள்செய் மலநீத் தத்துவித வின்பே தருமச் சேய்மணிதான். (௫௮)

இவ்வா றனைய மெய்கண்ட வின்ப மண்ணா டொரும்பொல்லாக
கைவா ரணயா முகத்தெந்தை கழல்போற் றனையரு முதனியம
முய்வா ரிப்பப் புரிந்தமர்ந்தார் குறவீற் றிருக்குஞ் செயல்கேட்டார்
சைவா திபர்தங் குலகுரவர் சகலா கமபண் டிதாபாலகர். (௫௯)

ஆக மாதி யருணூல்க ளமைய வோது மன்பர்சிலர்
சோக மாறி யமைந்துமனந் தூய்மை யுறுமா சிவஞான
தாக மாகி யதுபுணர்த்துந் தன்மை யவர்பா லின்மைதெரிந்
தூக மாக வெண்ணெய்நல்லூ ருற்றார் காணப் பெற்றாரால். (௬௦)

முன்ன மமர்சக் கிரபாத முதியா பெரும்பே றுற்றாங்கு
நன்ன ருளாம் மெய்கண்ட நாதன் கழறொழுது டன்சூழ்ந்தார்
பின்ன ரனைய திருத்துறையூர்ப் பெரிய ரவர்சார் புணர்ந்துமேல
யின்னர் தமையீண் டுரைத்துநெறி மேற்றியி னோர்மா ணவர்சில்லோர். (௬௧)

அவரு மனைய ராயினர்பின் னருஞ்சிற் சிலரை யனுப்பினரச்
சிவமா மறையோ ரனறவருஞ் சென்றங் கவ்வா றுடனமர்ந்தா
ரிவர்மா ணாக்க ரெல்லாரு மிவ்வா றடுத்து வெண்ணெய்நல்லூர்த்
தவர்போற் றியமெய் கண்டமணி சரணே சரணாச் சார்ந்தமைந்தார். (௬௨)

தம்மா ணாக்க ரெல்லோருந் தமைவிட் டேகத் தனித்தமரு
மம்மா தவர்தீ தென்கொடுமை யடுத்து நமது களப்பாள
னம்மா ருளாற் பெறுசிறுவ னவிற்றுங் குதலை யினுக்கம்பா
னெம்மாண் பினனென் றடுத்தமர்ந்தா ரெம்மான் முழுதோர் மாணவகர். ()

நன்று நன்று கலிப்பெருமை நவிற்றற் கரிய தேயென்பா
ரொன்று முணர்ச்சி நுண்ணியர்சென் றீற்ற தாகித் திடர்பாற்றே
சென்று காண்டு மென்பார்நஞ் சீடன் சிறுவ னெதிர்புகுந்து
நின்று காண்ட னம்பெருமை நிலைமைக் கடுக்கு மோவென்பார். (௬௪)

இவ்வா றனைய சிவமறையோ ரெல்லை கடந்து முறுகிவளர்ந்
தவ்வா ணவவல் லபஞ்சாயு மமய மணித்தா தலுக்கிசைய
வொவ்வா வுரைகள் பலபுகன்று குறலே துணிந்தா ரொருதலையா
யெவ்வா யுறினுந் தாமுனஞ்செ லெழுசசி யணிக ளுறசசென்றார். (கூரு)

சிவிகை சிதைந்த புத்தகங்கள் செறியுஞ் சகட மசசொடிந்த
கவிகை முதல முரிந்தபெருங் காற்றுற் சகுணம் பலதடுத்த
குவிகை யினரும் விட்டகன்றார் கூறு மிவற்று மாணவரோ
யவிகை தெளியப் பார்துகையோ டடுத்தா ரதுவுங் குமிழ்தெறித்த. (கூகூ)

கருவி கழன்று சிவத்தோடு கலவுஞ் சுத்தாத துவிதநிலை
மருவும் பெருமை தமககணித்தின் வாய்த்த வுணர்ததாங் குடன்சூழும்
பொருள்க ளொழியத் தனித்தேகும் புனிதர் வெண்ணெயப் பதிமேவித்
தருகல் லருளே யுருவாமத தனிமா குரவ சிகாமணிவாழ். (கூஎ)

திருமா ளிகைக்கே ணித்தாகச் சென்று ரனைய மெய்கண்டா
னருளா னனநேர் புவிநோக்க வமர்ந்து நாப்பண் வீற்றிருப்ப
வொருவாப் பெரியர் திருமுறையேந் தொண்கை யினர்பற் பலாசூழ்ந்து
பொருளா ரமுதுண் டதன்வசமாயப் போற்றுங் கொலுநேருறககண்டார்.

யாமுட் புகினோர் கண்டிறைஞ்சா னிருககை யெடுாளு திருககைதரான்
றோமற் றிடுநம் வாயமையினுற் றேன்று மிவனோர் சுற்றலடா
தாமற் புதங்காண் பதும்வேண்டு மதற்கீண் டிதுவே யுபாயமெனத்
தாமப் புறத்தோர் செயல்பிறிதாற் சரிப்பார் போலங் குலவினரால். (கூகூ)

அப்போ தனைய மெயகணடா னமைந்து சூழு மப்பெரியர்க்
கொப்போ தருமா ணவசசிமிழ்ப்பி னுணமை யுணாதது திறங்கேட்டா
ரிப்பேர் மலத்தி னியலெனனை யென்றுங் குரப்பி லனவினரச
சொற்போ யுறலு மெயகண்ட நாய மணியாங் கோர்சிறிது. (எ0)

பொழுது தாழ்த்து சிரிநதிதுவே போலு மெனநோ பார்த்திடலுந
தொழுது வீழ்ந்தார் சென்னிமலர்த துணைத்தா ளுரிஞ்சக் கிடந்தாங்கே
யழுது பொருமி யெந்தாயோ வறியாச சிறியே னுற்றபிழை
முழுதும் பொறுத்தாள் கென்றுபல மொழியாற் றுதித்து நேர்பணிந்தார்.()

நேயம் வறந்து திரிசுருங்கு நிலைமைச் சுடர்மிக் கெழுந்தொளிர்ந்தே
மாயு முடனுங் கதுபோல வளரா ணவமே லெழவினவி
யோயு நீக்க ணங்கண்டாங் குடனு ரடிவீழ்ந் தெழாமலமர்
ஆயு சீட திருமணிப்பத் தாக்கி யெடுத்தொண் டிக்கைமுறை. (எஉ)

திகழ மலர்ப்பூந் திருவடிகள் சென்னி சூட்டிச் சிவம்புணர்த்திப்
புகல வருஞ்சீர்ச சிவஞான போதந் தெருட்டி முன்புகுந்தாங்
ககல வருமா றெண்மருக்கு முதன்மை யளித்தவ் வேழெழுவர்
நிகர்மா ணவகர் சூழ்ந்திறைஞ்ச நிலவு மனைய விளங்குழவி. (எங)

திருவார் துறையூ ரருணந்தி சிவனக் குரவ சிகாமணிபாற்
பொருவா வினவுஞ் சிவஞான போதத் தாழ்நுண் பொருளெல்லாந்
தெருளவாய்ந் திலங்கச் சிவஞான சித்தி யாரென் றுத்தமர்போற்
றொருமாண் வழிநூல் வழியடியா ருடன்கொண் டெய்வான்விரித்துரைத்தார்.

இந்நூ லுடனோர் நன்னூலொன் றிருபா விருப தெனும்புனித
மெய்ந்நூ றனது குருமணிபான் மேவுந்துதியாச சிவஞான
முன்னூற் போதத்திருவிழியா முறைசெய் தமைத்தக குருமணிதா
ளன்னூல் சமர்ப்பித தரந்கொருவா தமர்ந்சார் துறையூ ரருமறையோர். ()

சாற்று மிவர்பான் மறைஞான சம்பந் தருமா கவர்பாந்கர்ப்
போற்றும் பெரியா ருமாபதியும் புணர்ந்து தீக்கை யுபதேசப்
பேற்றின் வாழ்ந்தா ரிந்நால்வர் பெயர்சந் தான குரவரென்ப
தேற்று மனைய வுமாபதியாற் றிகழ்சந் ததிகள் பற்பலவாம். (எசு)

குலவு மினைய சந்தான குரவர் நால்வர் பெரும்புவியி
னுலக மெவையும் வந்திறைஞ்சி யுய்ந்து வாழ்கென் றிருவருளா
னிலவு கோயில் கொண்டமாந்துன் னியவீற் றிருந்திங் குறுமென்று
மலரு மனைய மெய்கண்ட மணிவந் துதிப்ப மாதவஞ்செய். (எஎ)

பெருமை யுடைமை யான்முனநாம் பேணி யுரைத்தா மேலினியத்
திருவெண் காட்டிற் கண்மையினிற் றிகழ்ச புரமென் றொன்றதுச்ர்
வருதண் கடவூ ரெனும்பெயரான் வயங்கு மினைய திருப்பதியின்
மிருகண் டருளசேய மார்க்கண்ட வியன் முனிவந் தடுத்தாங்கே. (எஅ)

தன்றே காவ சானந்லை தணத்தி நீடா யுகந்தருவான்
மன்று டமலற் பூசித்து மன்று தெறு டொறும் புரிந்து
நின்று னவனுக் கிறையளித்த நெறியா யுகமுற் றியதுணர்ந்து
குன்று விறலின் மறலியவட் குறுகி முறுகி வளரவிியான் (எகூ)

ஓவா துஞற்று சிவார்ச்சனையி னொருமித் தமர்மார்க் கண்டவெதிர்
வாவா வென்னும் விளிமாற்றம் வழங்க வினையான் விளிமாற்ற
மேவாய்ப் புறசெ யர்ச்சனையின் றெதிர்நோக் கிலன்மேற் பிதிர்நோக்கத்
தாவாக் கினிசென் றுடல்வெதுப்பத் தன்கைப் பாசம் பிணித்தீர்த்தான். ()

வேறு.

ஈர்த்த பாசமுன் னிடைவெளி நீத்திமா சலைகோன்
றீர்த்த மேனியிற் சிவாக்கியம் போன்மெனச் சேர்த்த
நார்த்த சிந்தையர்க் கெவரெனும் புரியிடர் நணுகா
கூர்த்த வின்பமே யாமெனக் கூறுநா றுணிந்தாம். (அக)

குழக னெண்கட வூரிறை பேரருட் குறியைத்
தழுவி யேத்தினன் றனையனுங் கனையனைத் தளரேல்
பழுது தொண்டருக் காறறினர் கெடுவரென் பான்மை
வழுவில் கூற்றையிக் கூற்றினிற் காட்டுது மைந்த. (அஉ)

என்று வாய்மலர்ந் திறலினம் மறலிவீழ்ந் திணைவா
னன்று தைத்தன னுமபர்கோ னம்பிரான் றன்மே
லொன்று வெஞ்சின மடங்கலான் மடங்கறன் னுடலந்
தன்று வித்தவக் கருமையோர்ந் தருமைமார்க் கண்டன். (அங)

ஐய விப்பழு தெப்பொழு தகலுமென் றடிதாழ்ந்
துய்ய மெய்ப்பழு தொருங்கொழித் தடுத்தவர்க் குதவி
செய்ய முந்துறு சிந்துறழ் கருணையோய் திறம்பா
மெய்ய செய்யபொன் மேனிய வானியல் விமல. (அச)

எனத்து தித்தனு மன்பகே ளிப்புவி யிடையே
மனத்து தித்தபல் வரனெலா மளிக்குமா வனமொன்
றினத்து தித்தபன் முனிவரசூ ழிடனதா யனைய
வனத்து தித்தவண் பசிம வாவியொன் றுளதால். (அரு)

எனை நீருடற் புறத்தழுக் கிரித்திடு மெல்லை
தானும் வேண்டுமோ முழுதநி னககணந் தனிலுன்
மேனி நீன்மைபோ மேமெழினை யேமொளி மேவு
மான வாய்மையா லத்த – நீரினீ யாடி. (அசு)

ஆங்க ருட்சுயம் பமுதலிங் கேசனை யன்பு
தேங்க நேர்தொழு தமர்குதி திறலிவெம் மறலுன்
பாங்க ரெப்பொழு தினுமினி யுறாதசீர் படைத்தே
யோங்கி வாழ்சிரஞ் சீவியா யுறுதியீ துறுதி. (அஎ)

அனைய தீர்த்தநின் னுமமே யகிலமும் போற்றப்
புனையு மென்றுருக் கரந்தவா சகமிசைப் பொலிய
வினித வாய்மைதன் செவிபுகுந் துளங்குளிர்ந் தீர்ப்ப
வினைத பும்முனி பணிந்தருள்விடைபெறீஇ மீண்டான். (அஅ)

சூத கானனத் தெய்தினன் றண்டுறை மேல்பார்
சீத வாவிதோய்ந் தெழுமுன மலினமெய் தீர்ந்து
பூத மேனிமிக் கொளியெழப் போதமு தேச
பாத வம்புய முடியுறப் பன்முறை பணிந்தான். (அகூ)

எழுந்து நின்றமு தாருவநேர்க் கிருகணீ ராருவி
பொழிந்து பாய்தரப் புரையிலான் புரைந்துள முருகி
வழிந்து சென்றருட் டுணையடிக் கமலமென் மலரி
லழுந்த மன்பினுற் றிருமுனின் றருந்துதி புகலும். (கூ0)

சோம ருத்திர வகிலமா நதிபதே சுருதி
நாம வுக்கிர வக்கிரே சுரபரா நாத
பீம சாருவ வனபதே பிரணவ ரூப
பூம ணாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூக)

பாச பாணிய பசுபதே யிரணிய பாகு
வாசு பத்தகா மியபரி பூரண வாத
தாசு கற்பக விரத்தமா மோகபாந் தவபொற்
புரசு காம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூஉ)

வனச நேத்திர குசுமமா பூசித மார்தக்
தனக ராம்புய [illegible]நகர சாயக சடில
கனக சம்பியா க[illegible]கர நந்தர காள
புனித வாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூ௩)

அடிய ரெண்ணிய வெண்ணியாங் கருளமு தேச
வடிகொள் சூலசார் மிருகண்டு வர்த்திச பால
முடிகொள் வானதி மதிபொதி முகசண சிருவெண்
பொடிகொ ளாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூ௪)

உலக முற்றுமின் பளித்தினி தோம்பரு ளுரிமை
நலன்மு ணம்பல வருயபொரு ணிறைசிவ நாயக
தலைகொ ளாற்றல்வே றெவர்க்குமின் றொருதனக் கேயாய்ப்
பொலியு மாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூ௫)

என்றிவ் வாதிபஃ றுதிபுகன் றடிக்கடி யிறைஞ்சு
நன்றி கூர்மிரு கண்டுசே யானன நளினத்
தொன்றி முக்கணும் பானுவாய் மலர்த்திட வுவகை
துன்றி மந்திரேச் சுரனெதிர் தோன்றியீ தருளும். (கூ௬)

கேட்டி யாவெலமக் கினியமெய் யன்பநீ கிளத்தும்
பாட்டி ருந்துதி யாலெமக் கின்பமே பலித்த
வேட்ட தென்கொலோ பகருதி யென்றனன் விமலன்
றேட்ட மிக்கவன் பின்னரும் பணிந்திது செப்பும். (சுஎ)

பெரிய நாயகி மணாளநின் பிறங்கிரண் டெழுத்தா
மரிய வண்சிவ நாமமா மனுத்துய ரனைத்து
மிரிய நீக்கிமெய்ச் சிவத்துவப் பேறருளியற்கை
தெரிய வாய்ங்க மாகமத் துணிபுரூர் சிறியர். (சுஅ)

எந்தை நின்பத மன்றியீண் டெப்பொரு ளெனினுஞ்
சிந்தை வேட்டிலேந் திண்ணமே யேழையேஞ் சிறியேம்
புந்தி யான்மறை யபுத்தியாற் பேதமெம் புத்தி
வந்தி யாதப சாரமேற் புரியினும் வள்ளால். (சுசு)

திருந்து முற்றுணர் வற்றிலாச் சிற்றறி வுடையார்
புரிந்த செய்வினை நோக்கலென் னுமெனப் பொறுமை
பரிந்து செய்தெமை மருதருள் புரிகெனப் பாரி
யருந்த வத்திரு முனிபுகன் றிறைஞ்சின னமலன். (சOO)

வேறு.

வருதியா லரிய தோன்றல் வந்திவண் முந்து நீதோய்
சரசுநின் பெயரி னலெச் சகமும்போற் றியநின் றேங்க
மருவிமூழ் குறப்பெற் றோர்க்கு வல்வினை யனைத்து நீங்கி
யரியன புத்தி முத்தி யங்கையா மலக மாக. (சOக)

என்றினி தருளி மேலு மின்னுநீ வேண்டிற் றென்னை
நன்றுரை யெனவெம் பெம்மா னமங்குமார்க் கண்டன் கூறுந்
துன்றியா ருயிர்க ளெல்லாந் தோய்ந்துய்வா னீண்டென் னுன்னி
நின்றருள் வாமென் றென்று நிலையுதல் வேண்டு மண்ணல். (சOஉ)

அடியரே முளத்தெ ழுந்துன் னடியழுந் தன்பெஞ் ஞான்று
மொடிவிலா திறுதி யாவிக் குறத்தகு மிடருற் றுல
வெடிதுற வளர வேண்டு நிமலநீ யருளு கென்னுப்
படியுறப் பணிந்து பின்னும் பரவினன் பரனி யம்பும். (சOங)

மைந்தநிற் கெனவொன் றேதா மாண்பினை பரோப கார
சிந்தையை யாகி வேண்டுந் திறத்தினி துவகை கூர்ந்தா
மூந்தற மெவற்றி னுள்ளு முக்கிய மிதுவே யின்ன
துய்ந்தொளிர் சீவன் முத்த நிலக்கண மூணர்ச்சி மிக்கோய். (சOச)

எவ்வகை யுயிர்க ளேனு மிறையுமோ ரிடருந் தம்மா
லவ்வுயிர்க் குறுமை யோம்பி யளிப்பது சீவன் முத்தர்
தெய்விக வியல்லென் றேதுந் திருந்துநூ லிதனின் மேலா
முய்வரு ளறன்வே றின்மை யுண்மையே வண்மை மைந்த. (௧0௫)

சாற்றுமிப் பரோப கார தருமமே பெரிய தென்னப்
போற்றிதி காச மொன்று புகலுதுங் கேட்டி மைந்த
பேற்றினி லுயர்ந்த தேவப் பிரியனோர் விப்பி ரோன்
றேற்றுமவ் வேதி யற்குந் திருமறு மருமத் தோற்கும். (௧0௬)

முன்னிகழ் சம்வா தத்தின் முதுமறை யவனவ் விண்டு
தன்னெதி ருலகில் யாவன் சாற்றுமைம் மாறு நோக்கா
துன்னிய பரோப கார முளுற்றுவ னவன்பா லீச
னின்னரு ளுவகை கூரு மென்றனன் வினவு மாலோன். (௧0௭)

நன்றுநன் றுலகில் யாவர் நயந்துதம் பொருட்ட லாம
லொன்றிய முயற்சி யேனோர்க் குளுற்றுந ருதுதா னிற்க
வென்றிவெள் விடையோ னற்றால் விழைந்ததி றேவ தென்னை
தன்றனக் கலாமு யற்சி தரினவ ரறிவி லாரே. (௧0௮)

தேவர்கண் முனிவ ரேனோர் செய்யருந் தவம னேக
மாவன யாவுந் தத்த மனுபவக் கலதொன் றுண்டோ
நீவிழைந் துரைத்த தொல்லா நிலையதென் றுரைப்ப மாலத்
தாவரு மறையோன் கூறுஞ் சாற்றிய தற்பு தத்தே. (௧0௯)

அகிலநா யகனின் முன்னோ ரஞ்சியோ டோட வாட்டுந்
தகுவிட மயின்ற மாண்புந் தன்பொருட் டன்மை போலும்
மிகவிழைந் தறுநீ கிர வீரைபல் லிடருற் றேய்ந்து
மிகவுரு தமுத மத்திட் டீந்தது மற்றே போலும். (௧௧0)

மலையமா தவனெம் பெம்மான் மணப்பெருந் திருவோ லக்கம்
புலனுறத் தெரிசித் தேத்தும் புனிதவாழ் வையும் விடுத்துத்
தலையற னிதுவே யென்னுஞ் சமநிலை புடவிக் கீந்த
நிலைமுதற் புரிய னேக நிகழ்ச்சியு மற்றே போலும். (௧௧௧)

சாற்றுப மன்னி யப்பேர்த் தகவனும் பகவன் சார்ந்து
போற்றிய கண்ணுற் றின்பப் பூங்கழன் முடியிற் சூட்டித்
தேற்றுபு சைவ தீக்கை திருத்திமெ யருத்தி வாய்மை
யாற்றினிற் புகுத்த தாதி யனைத்துமாங் கற்றே போலும். (௧௧௨)

திருமுறை கண்ட சோழர் திறன்மனு நீதி கண்ட
வரசருட் சிபிவேந் தாதி யருட்பெருஞ் செல்வர் செய்த
பரிவெலா மற்றே போலும் பகர்ந்தது நன்று நன்று
சூரர்முனி வரர்மு னின்னோர் தூச்செய லுணர்ந்தி லாய்கொல். (ககங)

என்னுளந் தெரிய வோதிற் றென்றிது துணிந்தேன் பூவின்
மின்னுறை மருமத் தண்ணன் மேதகு பரோப கார
தன்னின்மேற் றரும மில்லை சாற்றிய துண்மை யாகு
மன்னது சுவார்த்த முற்று மளிக்குமே விசைப்ப தென்னும். (கக௪)

என்றறிக் கனைய விப்பி ரேசனோர்த் தெதிர்ம றுத்தா
னன்றருண் மைந்த விங்ங னவிற்றிய பரோப கார
வென்றிமா தரும மேன்மை விளம்புவ தினியெ னென்னு
வன்றரு ளமுத நாத னருட்குறி யதிற்க ரந்தான் (கக௫)

திருவமு தேசன் முன்செய் திருவரு ளுன்னி யுன்னி
யுருகிய வுளத்த னுயவ் வுறுவர்கோன் மிருகண் டெம்ப
லொருவிலான் சூத கானத் துறைந்தருண் மந்தி ரேசன்
மருமல ரடிமுப் போதும் வழுத்திவீற் றிருந்தான் மன்னோ. (ககசு)

வேறு.

வீற்றிருந் தமர்மிரு கண்டருள்சேய் மேலெழு மன்புள முந்தவெழுந்
தாற்றினி லழுதிறை மேற்றிசையோ ரருட்குறி யத்தளி யுண்ணிறுவிப்
போற்றியர்ச் சனைதினம் புரிதருமுட் புரிவொடு மச்சிவ லிங்கத்தைச்
சாற்றுப மார்க்கண்ட லிங்கமெனச் சாற்றரி ததன்பெருந் தகைமையென.()

செங்கையி னொளிர்தரு பொன்புரிவேத் திரப்படை யவனிவை யியம்புதலு
மங்கவை வினவிய சனற்குமா னடிகளு மடிதொழு மடியனெனைச்
சங்கையி னொழிவுற வருளுகெனத் தாழ்ந்திது புகலுவன் பெரியன்னை
பங்கனை யாம்பிர வனேசனெனப் பகர்ந்தனை யெந்தைம னிதுகாறும்.(கக அ)

மந்திர நாயக னெனும்பெயரு மத்தியின் மத்தியின் வழங்கினையான்
முந்தபி தானத்தின் பரியாய மோவிது வேறெனி லிடுகுறியோ
சிந்தைசெய் காரணப் பெயரேயோ திகழ்நிப மேலதை விரித்தெளியேன்
புந்தியி னயிர்ப்பற வருளுகெனப் போற்றினன் முதைதன் புதல்வனரோ ()

வினவிய வேத்திரப் படைக்கரன்முன் விளம்புவன் கேண்மதி சனற்குமா
மனுவிறை யெனும்பெய ரதிகுய்ய மாண்பொரு ணிறைதரு நிபநாம
மெனவுண ருதியிது தெளிதருவா னியம்புது மோரிதி காசமெனு
மூனமவ னருளிய வாகேண்மின் முனிவர்க ளெனமொழி தருஞ்சூதன். ()

வேறு

இத்தகு மாகதை சொற்றவர் கேள்விய ரிச்சையர் சாதக ரெவரேனு
மெத்திய னீணிதி யுத்தம சேய்பல மிக்குய ராயுக முதலாய
நத்திக வாழ்முழு துற்றமர் வார்சிவ நற்குரு வாரருள் பெறுவார்பின்
மித்தைய வாவொழி புய்த்துணர் வாரொரு மெய்ப்பர வீடெளி துறுவா
[ரால். (கஉக)

மார்க்கண்டேயச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ருசஅ.

---

# இராமன் மந்திரோபதேசம் பெற்ற சருக்கம்.

—:o:—

சூர்த்த காலை வென்ற சூலு துலங்கு காதை யோதினுஞ்
சீர்த்த ராமன் மந்தி ராதி திறங்கொள் வாய்மை யோதுவா
மார்த்த பாத வன்பு கூர வமர்ந்து கேண்மி யாவெனு
நார்த்த பாத நந்தி நாத னயந்து கூறு மாலரோ. (க)

வேறு

சனற்கு மார கேண்மியா தனக்கு மாரன் மைந்தனு
மெனக்கொண் மாய னுமுன மிழைத்த தீமை யீனரு
மனக்கொ ளாத பாதக மதித்து மாத வப்பிரு
குனக்கி தாகு மென்றமை யுலப்பி லாத யோனியில். (உ)

சென்று சென்று லைகெனுச்செப்பு சாப முற்றுடைச்
தன்று நின்று வேண்டநீ யையி ரண்டு தோற்றயா
னென்ற வாணை லங்கன மெம்மி னுவ தன்றினி
நன்றி னுள்ளுந் தீமையு நவையி னுள்ளு நன்மையும். (ங)

ஆவ செய்கை வகையினென் பதுபி ரத்தி யக்கமே
யாவு நம்மி னோர்ந்தனம் யாது தான வக்குலம்
வீவ தாற்று நன்மையுள் விளைந்த சாப மேற்கொடப்
பரவ நாமு ணச் செலுற் பவத்து ணன்மை வாய்ப்பதால். (ச)

நிருத ராதி துட்டர நீதி நீக்கி நீதியிற்
பொருவி லாத சிட்டரைப் புரக்கு நன்மை வாய்க்குமா
பிருகு சாப மீதருள் பிறந்தை நோக்கி யான்றவர்
திருகு கோப மூந்லஞ் செய்யு மென்ப தேர்ந்தனம். (௬)

என்றி வாதி யொவ்வொன்று யீரவு யோர்ந்து ளந்துணிந்
தன்ற யோத்தி வாழ்தச ரதப்பெ யர்க்கொ ளாற்றல்சால்
வென்றி நாம வேந்தர்கோன் விழுத்த வப்பெ ரும்பய
னொன்றி நின்று வம்மெனு வுற்றெ திர்ந்த ழைத்திட. (௬)

ஆத வன்கு லங்கண்முற் றுற்ற ரும்பெ ருந்தவந
கோதொ ழிந்த கோசல நாட்டி ருங்கொ ழுந்தவம்
பூத லஞ்செய் மாதவம் பொலிந்தொ ருங்க ழைத்திடக்
காதல் கொண்ட விந்திரை காத லன்னெ ழுந்தனன். (௭)

உரைத்த வேந்தர் கோளரி யுசசி மேற்கொ ளும்பலாய்த்
தரைத்த லத்து தித்தனன் றனய னுக்கொ டாதைதன்
வரைத்த டம்பு யத்தினன் மகிசு மக்கும் வென்றிநாம்
விரித்த லென்ன வன்பெயர் விளக்கு மாற்றல் முற்றுமே. (௮)

அரசி ருக்கு மந்நக ரளவி லெத்து ணைத்திற
லரச ருக்கு மேனைய ரனைவ ருக்கும் போர்குறிஇ
வரமு தற்க ணெல்லையும் மருவொ ணாத சீர்த்திதன்
வரமி குத்த பேரினல் வயக்கு மேலு ரைப்பதென். (௯)

தன்னி கர்த்த தநகர் தன்னின் மாலு தித்தபின்
றன்னின் மிக்க தென்னமுச் சகங்க ளுந்து தித்திடு
மென்னி லன்ன சேயினெண் ணிலாத சீர்த்தி யாதுமொன்
றென்னி லாவ தேகொல்வே றியாவ ரானு மாவகொல். (௧௦)

அண்ட மியாவுந் தேசமும் மகர மியாவு முற்றும்வாழ்
தொண்டர் யாரு மாதவர் சுத்த யோகர் சித்தருந
தண்ட ளிர்க்கை யாருமைந் தரும்ப மித்தி டுங்களிப்
பெண்ட ரச்செய் நீர்மையா லிராம நாம மெய்தினன். (௧௧)

வேறு

தாம நாமமி ராம நாமமுன் சார மாலைகுந் தப்பிரான்
காம னேவருட் கந்த னேவெனக் கவினெ டேகலை வளரவே
மாம னேமென வுணர்வு றுவண மனுட னேமென வளர்ந்துபின்
[illegible] மாமக னும்வ சிட்டனைப் போற்றி யாதர வேற்றியே. (௧௨)

போத நூல்பல கேட்டல் சிந்தனை புந்தி தேறுத னிட்டையே
யாதி யாவையு நிரம்ப வாய்ந்துகா மாதி யாநவை யொருங்குநீத்
தேத மில்பொறை கருணை சத்திய மின்சொ லாதிய யாவுமேய்ந்
தோதொ ணாதசீர்ச் சீத வாசமா முறையி னுள்ளுல கெலாமுற. (கங)

அனுசர் மூவரோ டகன மர்ந்தரு ளன்னை தந்தைசொ லவைமுடித்
தினிது மேவுழி முனிவ னுங்குவந் திளவ லோடமைத் திடப்புகுந்
துனல ருந்திறற் றட காவத முனுற்றி மேன்மிது லாபுரிப்
பொனைம ணந்துவந் தன்னை தாதையைப் போற்றி வீற்றிருந் தானரோ. (கச)

வீற்றி ருக்குநாள் வேறொர் நாணனி விரும்பு தாதைசொல் கரும்புதேன்
போற்றி தித்துடல் பூரித் தொண்செவிப் புகுது முன்னெழீஇப் போம்பிரி
வாற்றொ ணாதுரு கிளவல் சானகி யடிதொ டர்ந்திடக் கடிதுசென்
றேற்ற கானக வாச மேகமக் கென்று முள்ளதென் றேகினான். (கரு)

கருத்த மாமர பிலங்க வந்தருள் காளை யேகிய கானன
மிருத்த நம்மதி தெய்வ மானிட மேனி கொண்டிவண் மேவமுன்
னொருத்த மாதவ மென்கொ லென்றளி துலங்கு நாண்மலர் முகங்கணீ
ருகுத்து நீடலை வணங்கி யொண்பதத் தொழிவு றுமலர் பொழிவன. (கசு)

மானி னம்பல பின்பு சானகி வாஞ்சை தீர்கெனு மாறெழு
மானி னம்பல வுங்கோ பாலனென் றறிந்த போனனி யார்ந்தெழுந்
தேனி னம்பல விறைபி தாவெனத் தெரிந்த போலிசை செய்தெழும்
வானி னம்பல மேனி கண்டின மாமெ னத்தொடர் வானெழும். (கஎ)

வேழ நங்குலங் காத்த தெய்வத மேய தென்றெதிர் வீழ்ந்தெழுந்
கேழ னம்முரு மேற்கொ ணாதனைக் கிட்டி னேமெனக் கிளர்ந்தெழும்
பாழி மாவரி நாப சீயவுற் பவபி தாவெனப் பதந்தொழும்
வாழ்கு டாவடி சாம்ப வன்பினர் வணங்கல் போற்பத மலர்தொழும். (கஅ)

குணங்க ணீள்குறு முனிமு னேரொரு குலாதி பன்புகுந் தின்னினி
யணங்கு முற்றொழித் தின்ப வீடரு ளோந்தெ ழுத்துப தேசநன்
மணங்கொளுஞ்செயல் வாய்க்கு மாண்பினை மனங்கொ ளற்கொர்கி மித்தமா
யிணங்கு தாரக சகித வைந்தெழுத் திதழி மாமலர் காட்டுமே. (கக)

நெடிய நீகுறு முனியைத் தாழ்ந்திடர் நீக்கு கென்றுட னேவல்போ
னெடிய பூருக நிரையி ராகவ னீள்க ழற்கணி றைஞ்சுமால்
கடிய மௌவல்சே வடிப ணிந்துன காதன் மாரன்கை வாளியாய்க்
கடியை யென்றல கோது றும்பழி கடத்து கென்றலிற் கவ்வுமால். (உ0)

இன்ன கானனத் தேகி ராகவ னிளவல் சானகி பின்வர
முன்ன ரேபல வளங்கள் கண்டுமென் மொழியு வப்புறக் காட்டிபு
மன்னு தண்டக வனம்பு குந்தவண் வாழு மாதவர் சூழல்வா
யின்ன மந்தவ ராசி பெற்றினி தேகி மாமல யேசன்வாழ். (உக)

உடச முன்வின விப்பு குந்தவ ணெண்ம லர்ப்பதந் தாழ்ந்தெழுந்
தடிக ளும்மடி யடிய னேன்றொழுற் கடியின் மாதவ மென்னெனத்
தடம லர்க்கைகு வித்து நின்றதா சரதி யானன நோக்குபு
நெடிய பானுகு லேச மாசறு நின்வ ரத்துநல் வரத்தென. (உஉ)

முகமன் பற்பல கூறி யாசிகண் மொழிந்தி ருத்துபு முளரிவாழ்
தகவி தெம்மனோர்க் கேய டுத்தத சரத சக்கர வர்த்திமா
மகனி னக்கிவண் வரவ டுத்ததெம் மாதர் மாதவங் கோதிலா
துகம்வ ழுத்தநின் றியலு மாறிட ரொழித்த ளிப்பதை யுன்னியோ. (உங)

வேறு.

மைந்த நின்னிள வடிவு நோக்கலை மல்கு பல்லுரு வகையு நோக்கலை
தந்தை தாயர்போற் றுதலை நோக்கலை சார்வ பௌமனீ தமியை போலவே
யிந்த மாவனம் வந்த காரணம் யாதி யம்பென வெழுந்தி ராமனு
மந்த ணாளமொ லார்க்கு மோரர சருந்த வத்தினோ ரரசு நீயரோ. (உச)

அகில லோகமு மடிப ணிந்திடி னவர வர்க்குளகுறைகண்முற்றொழித்
திகல லங்களும் பரந லங்களு மிணையின் மோக்கவா யிலும ளித்திடத்
தகுமொர் பேரர சாய நீயொரு தமிய னேனையு மரசனென்பதோ
நகையி தாகுமெம் மரச லக்கண நவின்ற துண்மையே ரசமி லாதவன். (உரு)

என்னு மர்த்தமேல் யான்மொ ழித்தகு மெந்தைநின்னரு ளெந்நாளினு
மன்னு நித்திய சுகவி யாபக வரத மாசிவ ஞான வானர
சென்னிலேழையேனிசைப்பதெங்ஙனமென்றமைந்துதன்னகர் நின்றேகிய
இன்ன தென்றுமுற் றிசைத்துமேலுமோரேழைவிண்ணப்பநின்றிருச்செவி.

சாத்தி யாளுக தானு வேநிகர் சதுர முற்றுணர் சாந்த வேந்த வென்
றேத்தி நின்றெதி ரோது மையவிங் கெத்து ணைத்தவந் தான மாதியி
னீத்தி டற்கரும் பவஞ்ச வாஞ்சையா நிறைக டற்கடந் திடுமு பாய மொன்
றூர்த்தி தீர்தர வருடி யாலென வடிப ணிந்தன னலரி மைந்தனே. (உஎ)

அதுவி னுய்மல யாச லத்தெமை யாள கத்திய மாமு னீந்திரன்
கதிர்கு லாதிப வுத்த மக்குண கணங்கள் சேர்கரு ணால கேண்மதி
யதிர்க டற்புவி யாளு பாயமுன் னுய காமுறு மாச ருள்ளக
மெதிரி லாமறை சிவாக மந்துணிந் தியம்பு மந்தண மினிது கேட்டனே. ()

முதுவ சிட்டனிற்குணர்த்துபோதகன்முதுக்குறைந்தெழுசனகன்மாதுலன் மிதமில் கேள்வியொண் கதிரின் மைந்தனீ விதைத்ததொன்றுபின் விளை வொன் றுகுமோ, வதிவி ருப்பநின் கேள்வி யின்னமக் கைய துய்யவான் மெய்ய செய்யவள், பதியு னக்கிது பகரும் பாக்கியம் பலித்த தின்றெமக் கென்று பன்னுமால். (உக)

சாதி யாச்சிர மாதி யொன்றினுந் தவறி லுத்தம ஞான சீலராற்
காதல் கூர்சமு சார சாகரங் கடந்த ருட்களை யிவர்ந்து வாழ்வுறற்
கேத மின்னிக மாக மந்துணிந் தீச னேயெவ ரினுந்தி யேயனென்
றோது மாபதி யொருவ னேயுள முருகு பூசனைக் குரிய நாயகன். (௩௦)

அகில முந்தன துடைமை யாகவைத் தாளு மீசனுக் கனைய பூசனைத்
தகுப ணிக்கண லாதி யாதினுஞ் சாரு மார்வமொன் றில்லை யாதலா
னெகுமு ளத்தொடு மகம்பு றத்தினு நிகம வாகம முறைவ ழாமலப்
பகவ பூசனை யாற்று வானெவன் பவஞ்ச வாரிதி பாற்று வானவன். (௩க)

அனைய பூசனைக் கின்றி யேயமை யாத முக்கிய மாகு மங்கமொன்
றனைய தென்றிடி லரிய மந்தண ரினிய தோதுதுங் கேளி ராகவ
வினையை வெல்வது பவஞ்ச நீர்த்தட மேலெடுப்பது வேத வொண்சிரந்
தனைய டுத்தமெய்ப் பரசி வத்தின தனிச்சொ ரூபசிச் சியார்த்த பூரிதம். ()

பரம வாசக மாயொ ளிர்வது பஞ்ச பாதக நாசஞ் செய்வது
வரம காசிவ ஞான சாதன மந்தி ரேசமாய் வயங்கு நீரது
திரம சாத்தியந் தேவர் மாதவர் தேர்ந்து ளோர்க்குமே செப்பு தற்கது
வுாமன் மத்திய மறையின் மத்திய வுருத்தி ரத்தொளி விரித்த ரத்தினம்.()

ஆய ரத்தினந் தூய மெய்த்திரு வைந்தெ ழுத்தென வறிய வோதுமான்
மேய வன்னமா மந்தி ரேசனின் மிளிர்செ விக்கணே குளிர வுய்க்குதும்
வாய விம்மநு நீகொண் முன்னரோ மற்ற தற்கொரு முக்கி யாங்கமுந்
தோய வேண்டுமென் னதும னுச்சக தூய வெண்டிரு நீறு தாரணம். (௩௪)

பூதி தாரண மின்றி யிம்மனுப் புகலி னிட்பல மென்னு மாமறை
யாத லால்விர சாங்கி யின்விளை வாய சித்திதா யகவெண் ணீற்றினை
யோது நான்முறை பரவப் பூசிமே லொளித ருந்திரி புண்ட ரங்களு
மேதி லாதணி கென்று கூறியாங் கிசைத்த வாவிர சாங்கி நீற்றினை. (௩௫)

முறைவி ளைத்தெடுத் தள்ளி யீதலு முளரி கூம்பிசேர் மலர வாங்குபு
நிறையுத் தூளன புண்ட ரங்கணு னெறிய ணிந்தெதிர் முறைப ணிந்தனன்
கறையி லாமனத் திறையி ராகவன் கலச யோனியக் காகுத் தன்றனைக்
குறைதெ றுஞ்சிவ தீக்கை யாற்றுபு குறித்த மந்திர வழுது குத்தனன். ()

தூய தன்செவி வாயு குத்தவச் சுவைய மந்திர ரமுத மாந்தினன்
வாய பேரின்ப வாரி யிற்றனை மறந்த மர்ந்தொரு வாறெ ழுந்துட
னேய வாரியன் பாத தாமரை நேர்ப ணிந்தடிக் கடியெ ழுந்தநின்
றேய்வி லாக்கரு ணம்பு தேயென துடலு மாவியு முடலு முன்னதே. (௩௭)

செய்கை மாறிலாச் சிறிய னயினேன் செய்கை மாறுநின் றிருவ ருட்பெருஞ்
செய்கை கொள்கிலாச் சீரி தென்பது தேற்ற மாகநேர் தெரிய வந்ததென்
றுய்கை பெற்றசீ ராம னேதவவ் வுடச னதனுங் குடச மாதவ
னுய்கை செய்சிவ நாம மாயிரத் துண்மை யாவையு முணர நல்கினன். (௩௮)

ஆச றச்சிவ தத்து வார்த்தங்க ளனைத்து முள்ளகத் தமையத் தேற்றிமே
லீச னேயொரு வன்றி யேயன்மற் றேனை யோர்களெவ் வெவருஞ் சீவரே
மாச றத்தியா தாக்க ளென்றுமா மறைசொல் சூத்திர வாக்கி யந்தனைத்
தேசு றத்தனி யோது மாசிவ கீதை நூலையுந தெரிய நல்கினன். (௩௯)

இன்ன வாறகத் தியமு னீந்திர னிராம னுக்குநீ றளித்த மேன்மையாற்
றுன்னு றும்பசுத் துவத்தை மாற்றிமேற் றுலங்கு தாரக சகித வைந்தெழுத்
தென்னு மந்திர செபத்தி னற்சிவத் துவவி ளக்கமே லேற வேற்றியப்
பன்னு மந்திரஞ் செபித்தி டும்முறை பாசிவார்ச்சனை விதியு ணர்த்திமேல்.

வேறு.

பொறுதி யாகநாம் புகன்று னக்குமுன்
பெறுதி யென்றமெய்ப் பேறு கொள்கவென்
றிறுதி நீக்குமைந் திருஞ்சா தாக்கியத்
துறுதி லிங்கமொன் றுளிர நல்கினன். (௪௧)

இரவி மைந்தகே ளிவ்வி லிங்கநீ
யுரிய வாயுள்கா றுருவு றமலே
பரவி நாடொறும் பயில ருச்சனை
வரசி வாகம மரபி னுற்றுதி. (௪௨)

மேவு மிவ்வெலாம் வேந்த நிற்கக்
காவ லாம்புறக் காவ லாகவிங்
கீவ கொள்கெனு வேதி கார்முக
மாவ நாழியாங் கவன்கை நல்கினன். (௪௩)

சருவ சத்திமா ரூய சங்கர
னொருவ னேகிக ராய வுத்தமன்
றருச ராசனந் தாவி னுந்தகம்
பொருவி லாவகேர் புகலற் பாலதோ. (௪௪)

மூன்று நல்கிய முனிவர் சேகர
னன்ற கேள்விய னய ராமனைச்
சான்ற பஞ்சவ டித்த லத்தைநீ
யேன்று காண்கென வினிது கூறினான். (௪௫)

முனிவ ருத்தமன் மொழிந்த செஞ்சொலு
மனைய னங்கிரி யம்பு சாதமுந்
தனது சென்னியிற் றழைப்ப ராகவ
னினிதி றைஞ்சின னேத்தி நின்றனன். (௪௬)

பிரிவை நோக்கிடும் பெரிது மேங்கிடும்
வரதன் வாசக மறுக்கொ ணாமையும்
பெரிது நோக்கிடும் பேதுற் றஞ்சுமத்
தரணி பன்றிறஞ் சாற்செ ணாதரோ. (௪௭)

அரிய நூல்களாய்ந் தகந்தெ ளிந்துமெய்க்
குரவ ரானிறை குணத்தி ராமனே
பெருமி டர்ப்படிற் பெரிய வர்ப்பிரி
வருமை யிற்றென வளக்க லாவதோ. (௪௮)

இருத லைப்படு மிதய ராமனு
மொருத லைத்துணிந் தழுவ லன்புளம்
பொருத லைப்பெரும் புணரி வாயனை
மருத லைப்புரீஇ வணங்கி யேகினான். (௪௯)

ஏகி ராகவ னிளவல் சீதையோ
டாகம் வேற்றுமை யறியொ ணாதுநீண்
மாக நீடுகான் வழிக டந்துபோ
யோகை மிக்கபஞ் சவடி யுற்றனன். (௫௦

வேறு

வரம டுத்தகோ தாவரி மாநதிக்
கரைய டுத்தவப் பஞ்சவ டிக்கணே
புரையி ரித்த புனிதனி ராகவன்
விரவி யொத்துழி வீற்றிருந் தானரோ. (௫௧)

அங்க ணேடொறு மைந்தெழுத் தின்செபந்
திங்கள் வேணி யிலிங்க சிவார்ச்சனை
துங்க கீதை பாராயணந் தோமற
நங்கை சானகி நாத னவிற்றுபு. (௫௨)

நாளு நீளுமெய் யன்பு நதியொடே
யாளு மீச னருட்கடற் புக்குலாய்த்
தாளின் ஞானனந் தத்தனித் தண்சுவை
மீளி யுண்டு விளக்கமிக் கானரோ. (௫௩)

இன்ன வாறுசின் னாள்க ளிரிந்திட
மன்னி ராமனை வாஞ்சித் திராவணன்
பின்னை நேர்ந்து பிதற்றின ளன்னதாற்
றன்ன நாசி தனஞ்சிதை வுற்றனள். (௫௪)

அதனி னாற்கர தூடண ரார்த்தெழ
வதைபு ரிந்தந் நிருதர் வரூதினி
சிதைய வென்றமை தேர்ந்தங் கிராவணன்
கதமி குந்துமா ரீசன்ச காயத்தால். (௫௫)

எரி நெருப்பை மடியிலிட் டாலென
வரிய கற்பிற் கரசி யணுவுந்தற்
பிரியொ ணாத பிரியை சனகியைக்
கரவி னுற்றுக் கவர்ந்தனன் காதகன். (௫௬)

அவனி மாதவ மாய பிராட்டியைக்
கவர்பு சென்றபின் காகுத்தன் றம்பியோ
டவச னுய்ச்சரித் தூங்கதர் காட்டிடச்
சவரி யஞ்சனை தன்றனை யன்றனுல். (௫௭)

சுக்கி ரீபனைத் துன்னி யவன்பகைத்
தக்க வாலியைத் தான்செகுத் தாங்கவன்
ஒக்க வோடுறு வாழ்வங் குதவவும்
மிக்க பேருத விக்குள் ளுவந்தரோ. (௫௮)

ராக வன்செய் நலன்மற வாமலன்
போகை யுந்த வுடன்வட மேருமுன்
னாக நீளச லத்தமர் வானர
வாகி னிக்குல முற்றும் வருகென. (௫௯)

வரவி ளித்துத யாத்த மனவரை
விரவு கீட்டிசை மேற்றிசை யாகஙம்
பரமன் வெள்ளிப் பருப்பதங் கூற்றினார்
வரையி னுத்தர யாமிய வம்பலா. (௬0)

இடையி டங்களெங் கெங்குந் துருவிநங்
குடிபு ரந்தவிக் கொற்றவன் றேவியிப்
புடவி வாய்த்தபொன் பூங்கொம் பிருப்பிட
முடனா றிந்தொல்லை யீள்கென வுய்த்தனன் (௬௧)

சென்ற வீரருட் டென்றிசை மாருதி
யன்றி லங்கை யனைக்கணத் தேகினோன்
பொன்றி மேனி யொடுங்கினன் றன்னுயி
ரென்ற ராம னிதயத் திருப்பவும. (௬௨)

சோக முற்ற தென் றோகை யிராகவ
மேக மின்ப மழைவிளை விற்றரு
மோகை யாகென் றுணர்ந்தவி மென்றுகும
சோக வின்னிளைச குழலி னீழலில். (௬௩)

வீற்றி ருந்து மிளிருஞ் சனகியைப்
போற்றி நேர்கண் டணுகிப் புகுந்ததான்
றேற்றி ராகவன் றூதெனத் தென்மொனத்
தேற்றி நல்கினன் றீதிரி மோதிரம். (௬௪)

வாங்கி சென்னிகண் மார்பின் மணந்துகைத்
தாங்கி நோக்குபு தாச ரதிதனை
யாங்க ணேந்தென வன்பிற் பெருகியே
தேங்கு மின்பக் கடலிற் றிளைத்தனள். (௬௫)

வருந்தி யையவென் மாதவ வாழ்வின
தருமை மேனி யனுவும் விகற்பியா
துரிய தம்பி யுடனுறை வோடுற்றே
வருவ தேகொ லணித்தமா வாழ்க்கை யோய. (௬௬)

என்ற கேள்விக் கிறைமுறை யேயிசைத்
தன்றி ராமற் களித்தசூ டாமணி
யொன்று கைக்கொண் டுடன்விடை கொண்டுதாழ்ந்
தென்று சேயமைச் செய்தினன் மீண்டரோ. (௬௭)

கண்டு வந்தனன் காகுத்த தாயினை
யொண்ட ளிர்க்கை யுதவுசூ டாமணி
யெண்ட ருமிஃ தென்றெதி ரிட்டவன்
கொண்ட நோன்புமுன் யாவையுங் கூறினான். (௬௮)

விண்வி ராகவன் மீக்கெழு மூக்கமோ
டனகி யாய சனகி யமர்நிலை
துணையி னேகித் துறுமிடர் மாற்றியாங்
கினிது மீட்டற் கெழுந்தனன் முன்னெழும். (௬௯)

தம்பி பானு தனைய னனுமனே
பம்பு வானர வீர பதாதியோ
டெம்பர் போற்றுற வெல்லையி லண்மிறை
னம்பி ராமன் றனுது நரலையே. (௭௰)

வேறு.

ஆங்கரு மறைகள் போற்று மடவியி னகில மீன்ற
தேங்குயாழ் பழித்த வின்சொற் றிருந்திழை பாகத் தெம்மான்
பூங்கழ லிறைஞ்சும் வாஞ்சை புகுத்தவா னரப தாதி
பாங்குற தவணி ருத்திப் பானுசே யனுமன் றம்பி. (௭௧)

புடைவரக் குணக்கி னீள்கோ புரப்பெரு வாயின் முன்னாப
படியுற நமந்து வேண்டிப் பரவிப்போய் வேத தீர்த்த
முடியுற வணங்கி மூழ்கி முறையின்வெண் ணீறு கண்டித்
தொடைபுனைந் தெழுத்தோ ரைந்துந் துகளறச் செபித்த லாதி. (௭௨)

நித்திய நியமம் யாவு நிகழ்த்துபு சிராத்த மாதி
சுத்தசேத் திரபிண் டாதி துர்ச்சறப் புரிபுட் சென்றாங்
கத்தனை யமல வேதா ரணியனை யகில மூல
வித்தனை வீணா கான விதாடணி யுடனி றைஞ்சி. (௭௩)

அகநெகிழ்ந் துருக நின்றாங் கருந்துதி பலமுன் கூறி
யிகலருமன் பின்மேலு மிறைஞ்சியாங் கரிது நீங்கித்
தகுமுழி யமர்ந்து வாயு தனயன்முன் னுங்கு ரக்கின்
றொகையினை யாழி மீதோர் தூக்குரம் பிலங்கைக் கேக. (௭௪)

ஆற்றுக வெனப்ப ணித்தா னுணை தஞ் சென்னி மேற்கொண்
டேற்றெழு கவிக ளெல்லா மிரவிதோ யிரவி வான
மேற்றழை விருக்க மாதி வேரொடும் பிடுங்கிப் போகட்
டூற்றவார் கலியிற் சேதோர் தினத்தினே சனையேழ் செய்தார். (௭௫)

வரம்பறு வலிமு கத்த வலிமுக பலச மூகம்
வரம்பறு பாரை வானீண் மரம்பல சுரும்ப னேகம்
வரம்பறு மாழி மீதோ வாதுவீழ்த் தியவே கத்தால்
வரம்புறு தடையாற் பொங்கி வருபிச யமமேர் வென்ன. (௭௬)

பிரவசித் தியாண்டுஞ் சென்றெம் பிரானிகே தனத்தி னின்கோ-
புரத்துவா ரத்துஞ் சென்று புகுதவப் பொழுதி யாரு
மரகர முழக்க மேலோ ரார்கலி யென்ன வாய்விட்
*டரகரன் சினக ரத்து ளச்சமுன் னீர்ப்பப் புக்கார். (௭௭)

புக்கவ ரண்டம் விண்டாற் போன்மெனக் கூதறு மோதை
யக்கணந் துரத்திச் சென்றாங் கார்கலி கோயில் வாயிற்
றொக்குளார் கலிப்பே ரோதை சூரலங் கரத்தன் காணு
நக்கன னுரப்பி ஞன்மன் னரலைநீ வரலை யென்பான். (௭௮)

நந்திநா யகனுங் கார ணாதமச சேது வேறாய்ச்
சிந்திய தகர்த்த தாழி சென்றடங் கிற்று முன்போ
லந்தில்வா னரச ணங்க ளச்சமிக் குலைந்த நோக்கி
னைந்திரா கவன்பின் மேல்பா ருன்கியோ னனைசென் றாங்கு. (௭௯)

பின்னரு மன்னு கென்றோர் பேரணை யமைப்பித் தான்மற்
றன்னதும் பெருங்கான் மீன்க ளலைகளா னிலைகு லைந்த
தென்னினிப் புரிது மென்று வேக்கறிக் குளங்க லங்கி
யின்னதென் றொன்றுந் தோன்றா திருந்தன னிராம னந்த. (௮௰)

அம்புதி தடத்தின் பாங்கோ ரகரமீன் பூச வென்ன
விம்பரின் விளங்கும் யாண்டு மிடரற வியல்வான் மீன்க
டம்பெரு வாலிற் சேது தனையடித் துடைத்த நீரா †
னம்பியவ் விராமன் முன்பின் னவிற்றுமக் குரம்பி ரண்டும். (௮௧)

சிதைவுறப் பெற்றும் வாய்மை சீலமுற் குணங்க ளாதி
யிதமிகு புனித ராம னியற்றிய நீரா லன்ன
தகைகுரம் பமைந்த வாழித் தடம்புன லிடமி ரண்டு
துதிதிகழ் கோடி தீர்த்த மெனும்பெயர் துலங்க மன்னும். (௮௨)

முன்னவில் கோடி தீர்த்த முதுமறை வனபு ராணந்
தன்னலன் விரித்துக் கூறத் தயங்கும்பின் னவிநீர்த் தத்தை
மன்னல மணமேற் கோடி தீர்த்தமென் றுலகம் வாழ்த்தி
யின்னலங் கொழிய மூழ்கி யின்னல மெல்லா மெய்தும். (௮௩)

---

* அர - குறிற்கீழாகாரங் குறுகிற்று.

† நீரால், விளங்குமென்றியையும்.

அத்திரு மண*மேற் கோடி யவிர்தட நகரோ மொன்பான்
மெய்த்திரு மணிக டம்முண் மிளிர்குலச் சிறைமா ணிக்க
முத்திசெய் தன்பாற் றேன்று முழுத்தவப் பெருஞ்சீர்த் தென்று
ணுய்த்துணை ரறிவி லேழை யுரையினு ளடங்கற் பாற்றே. (அச)

மங்கையர்க் கரசி யாரு மகிழ்நெடு மாற ஞரு
மெங்கள்சண் பையர்கோ வும்மே விசைத்தமா ணிக்கந் தன்னோ
டங்கத னவதா ரச்சீ ரருமையி னுரிமை நோக்கித்
தங்கிவீற் றிருந்தார் பன்னு ளொன்றிடிற் சான்று வேறென். (அரு)

தன்னிகர் சிவலோ கத்திச சகத்தைதயோற் றேணி யாகி
மன்னுமிம் மணமேற் கோடி வளநகர் பாண்டி நன்னாட்
டின்னள வேணி யாகி யிலங்குமீ தமைக வொன்றுந்
தன்னுளந் தோன்ற தங்கட் டங்கிய ராமன் கேட்ப. (அசு)

ஓரச ரீரி ராம வோரச மாணு நீத
மாரச சூத கான மாரசங் கார ஞான
காரக *மந்தி ரேசன் காரக மகல நின்று
†தாரக மூல மேநந் தாரக மெனத நுணிந்து. (அஎ)

நீதின நீதி நந்தா நெறிபுரி செபதி யான
மாதிபி ரீதி யோனு யமர்ந்தன னுத லாலச
சூதகா னனைம்பு குந்தச் சுயம்பமு தேச நேச
மீதெழ வருச்சித் தானுன் விழைவுமுற் றருளு மென்னு. (அஅ)

வானநின் றெழுந்த தந்த் வாக்கிருந் திவ்வி யாமு
தான்*தொண் செவிவா யுண்டாங் களப்பருங் களிப்புண் மூழ்கி
வானர குழாமி லக்கு மணனருக் கனிலன் சேய்கள்
பானிழு லென்னச் சூழப் படருமா வனச மீபம். (அகூ)

அதரினே ரிடபங் கான்யாற் றக்கரை யானைக் காமுற்
றதனையவ் வாறு கீறி யடைப்பவா னுங்கு நின்று
மெதிர்கரை யேறித் தோழத் தேற்றொடும் புகுதக் கண்டவ்
வெதிரிலான் சீதை மீட்சிக் கீதுநன் னிமித்த மென்றான். (கூo)

---

* மந்திரேசன்-எழுவாய். அது அடுத்த செய்யுளில் அமர்ந்தனனென்னு முற்றுவினை கொண்டு முடிந்தது.

† தாரகமூலம்-பிரணவசகிதசிவபஞ்சாக்கரம்.

பூங்கொம்பொர் கவிதன் பாங்கர்ப் பொன்னிறம் பழுத்த வின்றே
மாங்கனி கொடுசென் றுற்ற மந்தியை வாலி வீட்டி
யாங்கது கைக்கொண் டேகி யமர்பணை யமரக் கண்டா
னீங்கிது போனி மித்த மெமக்குவே றென்கொ லென்றான். (௧௧)

செறியுல கடவிக் கெல்லாஞ் சேகர மென்னு மேன்மை
யறிதரத் தெருட்டு சேக ராடவிக் கணிய னாகப்
பெறுபுமாங் குயிலெ லாமெம் பிரானரு ளுவந்தி ராம
வுறுதியிங் குறுதி யென்றாங் கழைத்தென வொலிப்பச் சென்றான். (௧௨)

பூவைபைங் கிள்ளை சாம்ப புராதன புனித னேமா
தேவசங் கரசம் போசச் சிதாநந்த வமுத நாத
சேவக விமல சோம சேகர மந்தி ரேச
மாவன நிவாச தேச மாதவ பூத நாத. (௧௩)

சண்ணமர் நெற்றி யானே கந்தர கந்த ரேச
தண்ணம ரிதழி வேணித் தற்பர சைல ராசன்
பெண்ணரா சகில மீன்ற பெரியநா யகிச மேத
வண்ணறுஞ் சூத கான வரதவென் றிசைப்பக் கேட்டான். (௧௪)

இன்னன பலவா ங்க ளெண்ணில கண்டு கேட்டுப்
பன்னருங் களிப்பு மேன்மேற் பல்கிய பேரன் புந்த
முன்னரு ளீர்ப்பச் சென்றம் முளரியின் வருண தீர்த்தந்
தன்னினூன் மாபி னுடைச் * சபலவெண் ணீறு சாத்தி. (௧௫)

கண்டிகை பலபூண் டைந்தக் கரமுறை செபித்து நீல
கண்டனீ ணிகேத னத்தங் கைத்தளப் பிலகொண் டேகிக்
கண்டருட் டூல லிங்கங் கைதொழு திறைஞ்சி யின்சொற்
கண்டமர் வலவை நேச கணேசனை யிளைய சேயை. (௧௬)

பணிந்துநந் தீசற் போற்றிப் பராயனு மதிபெற் றேகித்
தணிந்துசே கரசு கங்கா தரவமு தேச நாம
மணிந்துல கருளா நிற்கு மருந்தனை திருந்து வேதந்
துணிந்துரைப் பரிய சோதி சுயம்புலிங் கேசற் கண்டான். (௧௭)

* முன்னிரு நெடிலுங் குறுகிளவாக் கொண்டு சாபால வெனக்கோ
டலு மொன்று.

காண்டலுங் கரணமெல்லாங் கைநெகிழ்ந் திரிய வன்பு
பூண்டவன் றனது போதம் போய்ச்சிவ போத மேத
மாண்டமெய்ஞ் ஞானா னந்த மயபர வசனாய் நீண்ட
சேண்டரு வடியற் றுங்குத் திருமுன நமந்த மர்ந்தான். (௯௮)

எழுந்தொரு வாறு முன்னின் றியம்புவாய் குழறக் கண்ணீர்
பொழிந்துட னனைப்ப விம்மிப் புரிவதொன் றோர்தல் கூடா
தழுந்துமா னந்த வெள்ளத் தரிதெழும் வழுக்கி வீழுந்
தொழுந்தகை யிராம னுங்கச் சுயம்புநே ருற்ற தூய்மை. (௯௯)

இன்னவா றென்ன யாரே யிசைக்குநர் நெடும்போ திங்ஙன்
பன்னருந் திறத்த மைந்த பானுகு லேசனெம்மான்
றன்னரு ளதனா லாற்று சபரியைத் தொண்டினோர்வந்
துன்னவேண் டுவன வெல்லாந் தோமற வினிதி னீட்டி. (௧௦௦)

உழுவலன் போங்க மேன்மே லுயர்சிவா கமநூ லாற்றின்
வழுவறச் சுத்தி யாதி வயக்கிவெற் பளித்த தாயோ
டழலவிர் மேனி யெந்தை யமுதலிங் கேசன் றூய
கழலடி பூசித் துள்ளங் கரைந்தடிக் கடிந மந்து. (௧௦௧)

திருமுனின் றினிய வாய்மை திகழ்துதி புகன்று வேண்டு
மொருவனே யோவா மூவ ரும்பனே யெம்பி ரானே
யருவனே யுருவ னேதா யருவுரு வனேய தீதத்
திருவனே சூதகானச் செல்வனே போற்றி போற்றி. (௧௦௨)

உலகனே யுலகெ லாமா னுடையனே விடைய னேயன்
பலகனே யலகி லானே யமலனே விமல வன்பர்க்
கிலகனே யிலகி லானே யேனைய ரெவர்க்கும் வானோர்
திலகனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧௦௩)

ஆரண முதல்வ போற்றி யாரணன் முடியாய் போற்றி
தாரண நீற்ற போற்றி தாரண பவஞ்ச போற்றி
பாரண காள போற்றி பாரண சூல போற்றி
தோரண வமல கான சேகரச் செல்வ போற்றி. (௧௦௪)

திருவுருப் படிக மோர்வத் திரமது செம்பொ னொன்று
கருமையொன் றருண மொன்று கருதுபா னிறமொன் றுநின்
னுருவமே துணிதல் கூடா தறிலுன சொரூபம் யாரோ
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧௦௫)

அவனவ ளதுவொன் றன்றென் றருமறை யிசைப்ப தன்னை
யவனவ ளிரண்டு மொன்றி யவிருமோ ருருவாய் நிற்றி
யவனெனப் போற்று கோமற் றவளெனப் போற்று கோமன்
சிவசிவ யாதென் றோர்துஞ் சேகா வனத்தாய் போற்றி. (௧௦௬)

அரிபிர மேந்தி ராதி யகிலசீ வருமோ ரொன்றே
யுருவமுற் றுதித்துன் பாலே யொடுங்குவ ருவர்க்க நீதப்
பொருளென விருமை யாகின் பொன்னுரு விடத்துங் கண்டுந்
தெருளிலா மூடர்க் கென்னோ தேற்றமா வனத்தாய் போற்றி. (௧௦௭)

அருநர காழு மூழா லளவிலா முகனென் றந்தோ
வுருவுகண் டிரைஞ்சிர் மூடர்க் குறைப்பதெ னூடல் கூட
லொருவடி வினிலெங் கெய்து முணர்த்தினீ யன்றி யாவர்
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧௦௮)

சீவர்க ளெவரு மின்பந் திளைத்திட விதஞ்செய் தேவ
பாவியேற் கின்று போந்த படரெலாம் படர வீட்டி
யாவிகாத் தருடி யையா வரணநின் சரண மேமா
தேவனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (௧௦௯)

வேறு.

என்று போற்றிநின் றடிக்கடி யிறைஞ்சின னிராம
னன்று மாதவ னனியுவந் தமுதலிங் கத்தி
னின்று மிந்தமர் வேணிய னீலமா மிடற்ற
னென்று நாற்கரன் சாம்பனேற் றிவர்ந்தரு ளொருவன். (௧௧௦)

உளத்தின் மிக்கெழு முவகைநே ருணர்த்துமொண் முறுவல்
வளத்தி னன்சிர மாலிகா பரணன்பால் வண்ணன்
கிளத்து மித்தகு முருவனுய்க் கிடைத்தனன் றனையுட்
டளத்தி ருத்திரா மனையரு ளேக்குப சாற்றும். (௧௧௧)

வருதி ராகவ கேண்மியா மலயமா தவன்முன்
கருதி நிற்குணர்த் தியவரு ளெறியதே கவற்சி
தருதி றற்பல சாகா தரணவாஞ் சையர்க்குச்
சுருதி சொல்லுபா யம்மிது சுத்தநிர்த் தோடம். (௧௧௨)

இதயத் தான்றுக வின்னதே யென்றுமீ திருக்கத்
தனையற் கூந்தலஞ் சானகி பிரிவினிச் சமய
முதயச் சூரனே முதின்மறைத் தாலென வுன்பாற்
றுதையப் பேரிடர் தொலைப்பதற் குபாயமுஞ் சோறும். (௧௧௩)

ஈண்டைக் கோசனை யெட்டினிற் றென்றிசை யிலங்குஞ்
சேண்டக் கார்தொழு தேவிபட் டணத்திரு நகர
மாண்டைக் கேகிநீ யலகில்சத் திகளுட னமருந்
தேண்டற் பாலளாம் விந்தையைச் சிந்தைசெய் தன்பால். (௧௧௪)

ஆழி மீதணை யணைதிறன் குறித்தனை யருச்சித்
தாழின் வேண்டுதி யேலணை யுளுற்றுதற் குரிய
பாழி யாற்றறந் தின்னருள் புரிவளப் படியே
வாழி ராமநீ யவ்வுழிக் குரம்பினை வயக்கி. (௧௧௫)

ஆய பேரணை வழிச்செலீஇ யிலங்கையை யடைந்து
தீய ராவண வதம்புரீஇச சீதையை மீட்டு
மேய விந்திர வரத்தினாற் போர்வயின் விளிந்த
பாய வானர கணமுயிர்த் தெழும்வகை பயிற்றி. (௧௧௬)

உரிய சீதையோ டிளவல்செங கதிர்மக னூதை
பிரியன் வானரப் பெருந்தொகை பீடணன் முன்னோர்
விரிபு சூழ்வர விரைகமழ் புட்பக விமானத்
தரிதி வர்ந்துசென் றயோத்தியிற் பரதனோ டமர்ந்தே. (௧௧௭)

நீதி வேத்தியல் புரிந்துவீற் றிருந்துயிர் நிரைகாத்
தேதி லாமகஞ் சிவப்பிர திட்டைக ளியற்றிக்
கோதி லிச்சிவார்ச் சனைதினம் வழுவறக் குயிற்றிப்
பேதி யாதவிப் பல்வகைப் பெருந்தவப் பேற்றால். (௧௧௮)

ஈற்றி னம்பதத் திரண்டறு நித்திய வின்பப்
பேற்றின் வாழ்கென வாய்மலர்ந் தருளியெம் பிரான்முன்
றேற்றி யாங்கருட் குறியிடைக் கரந்தனன் றொழுது
போற்றி ராகவ னளப்பருங் களிப்பெரும் புணரி. (௧௧௯)

தோய்ந்து மந்திர லிங்கபச் சிமத்தொரு தூய்மை
வாய்ந்த லிங்கமார்க் கண்டலிங் கத்தணி வடபா
லாய்ந்து தாபனம் புரிந்தருச் சித்துமீண் டனைபா
லேய்ந்த வாரமு.தேசனைப் பினும்பணிந் தேத்தி. (௧௨௦)

பொருமி யன்பின்மிக் கிருகணீர் பொழிந்துள முருகிப்
பிரிவி னைந்தொரு வகைபுற விடையருள் பெற்றுங்
கரிது போந்துகோ யிலின்புறத் தொருசிறை யடுத்தவ்
வரன தேவிபட் டணம்புக மதித்தவ ணிருந்தான். (௧௨௧)

## வேறு.

ஈதிவ்வா றுக விதற்குமு னிளவ லிரவிசே யனுமன்சாம் புவனே
யாதிய ராங்காங் கருட்குறி நிறுவி யருச்சனை புரிந்துவந் தடுத்தா
ரோதவற் றிலக்கு மணனருச் சித்த வோரருட் குறியமு தேச
சேதனசுயம்புலிங்கத்தின்றென்மேற்றிசையினூற்குரோசத்திற்றிகழும். ()

நவிலுமக் குறிவாழ் நகரந்தம் பிக்கு நல்லவன் கோட்டையென் றுமத்[யோர்
தவிர்தரு மதன்கிட் டிசையின்முக் குரோசத் தமுதலிங் கேசதென் றிசை
திவள்குரோ சத்தி னெல்லையிற் றிகழுந் திருத்தகு சுக்கிரீ வன்செ
யுவமைதீர்லிங்கமுவ்விட மூத்துப்பேட்டையென்றுரைப்பதின் றெளிரும்.

திருந்துபூ சனைசெய் சுக்கிரீ வன்றன் றிருமுனின் றருந்துதி செயுங்காற்
பெருந்தகை யிலிங்கத் தோள்ளொளிப் பொலிவும் பேரழ கமைதியு நோக்கண்
டருத்துணை யெந்தா யருட்டிரு மேனி யழகனே யென்றகா ரணப்பேர்
பொருந்தியே யொளிகள் சுகிலா தோங்கிப் பொலிதனோர்காணலாமின்றும்

அத்திரு மேனி யழகனுக் கிசைந்த வழகியெம் மன்னையு மனைய
துத்திய நாமந் தான்வடி வழகி யென்றுல கிறைஞ்சிடத் துலங்கு
மத்திரு மேனி யழகனு மனையு மேத்துநர்க் கருணலங் களுமவ்
வுத்தம தலத்தின் சிறப்புமோ ரளப்பின் றுரைத்தவப் பெரும்பதிக்கீழ்பால்.

வருமொரு குரோசத் தெல்லையிற் சாம்பு வன்றெழுத குறியிலங் கிடுமவ்
விருநகர் நாமஞ் சாம்புவ ரேடை யெனப்பொலிந் திலங்குமிவ் வகையே
யொருவிலா வொருவ ரும்புரி யிலிங்க முலப்பில பலப்பல நகரின்
மருவிசின் றிலங்கு மேலினி ராமன் மதித்தவா புரிசெயல் வகுப்பாம். ()

இளவலோ டனுமன் சுக்கிரீ வன்மற் றேவரு மேவரத் தேவி
வளநகர்க் கேகி மந்திர நாதன் வழங்கருள் வழிகுரம் பியற்றிக்
கிளர்தரு மிலங்கை புக்கிரா வணன்முற் கெழுமுபன் னிருதரைப் பொருதக்
களனுற வீட்டி ராவணப் பிரம கத்திரா மேச்சுர மாகும். (கஉஎ)

மாதலத் திராம லிங்கதா பனத்தான் மாற்றுபு வீரகத் தியினை
வேதகா னனத்தைங் கரத்தொரு கோட்டு விமலபூ சனையினால் விலக்கிக்
காதமர் குடக்கா தவளிழ லானைக் காவிறை பூசையாற் கடிந்து
கோதற வயோத்தி புக்கமு தேசன் குளிர்திரு வருணனி குலாவ. (கஉஅ)

மலயமா தவன்றன் பதமலர் சிரமேன் முலரவீற் றிருந்தரு ணெறியே
யுலகெலாம் புரந்து சிவார்ச்சனை யாதி யுத்தம நெறிவழு வாது
நிலவிய வியற்றி வாழ்ந்தன னவற்கு நிலமங் கிரவுப தேச
வலனளித் தமையாற் சூதவ னேசன் மந்திரே சப்பெயர் வாய்ந்தான். (கஉகூ)

அன்னமா வனமல் விராமன்சா னகியை யடுத்துமீட் பதற்குள வுபாய
மென்னென வுசாவி யெம்பிரா னருளா லெண்ணியாங்கெய்துதற் கிடனாய்
மன்னிய வதனாற் றிருவுசாத் தான வண்பெயர் பெற்றதான் மலரோன்
றன்னருந் தனய வென்றுவேத் திரக்கைச் சற்குரு நாதனே தினனால்.()

வேறு.

என்றருணந்தி வாய்மை யிருஞ்சனற் குமரன் கேட்டாங்
கொன்றிய வுளத்த னாகி யுத்தம குரவ ரேறே
நின்றனி முகாம்பு சாத நிறைசொற்றே னுகர்ந்து மேலு
நன்றறி லார்வங் கூர்வ நாடுமென் னெஞ்ச மன்னோ. (கந.க)

இன்னுமிச் சூத கானத் திறைவனை யிறைஞ்சி யாவர்
துன்னுதம் மிட்ட சித்தி தோய்ந்தன ரெந்தை யாற்றும்
பன்னருள் விளக்கம் யாவை பகர்ந்தருள் பெரும வென்றான்
மன்னருணந்தி நாதன் வாய்மலர்ந் தருளு மாதோ. (கந.உ)

அருந்தவ முனிவ கேண்முன் னானந்த தாண்டவத்திற்
புரிந்தெழு மனத்தன் காதி புதல்வன்பொன் மன்றி னின்று
பெருந்திரு நடஞ்செ யீசன் பிரசமென் மலர்த்தாள் பேணித்
திருந்தருந் தவம்பல் காலஞ் செய்துவேட் டமர்ந்தா னன்றே. (கந.ந)

அன்னவன் றவக்கி ரங்கி யருட்டில்லை யம்பலத்திற்
பொன்னடம் புரியெம் யான்முன் போந்தருள் கூர்ந்து காதி
தன்னரும் புதல்வ நீசெய் தவம்பெரி துவந்தும் வேட்ட
தென்னுரை யென்னத் தாழ்ந்திட் டிருகைகூம் புறநின் றோதும். ()

யாவரு முணர்த றேற்றா விறைவனே யேழை நாயேன்
றாவரு நின்னானந்த தாண்டவ தெரிச னத்தின்
மேவிய மனந்து ரப்ப விழைந்துனை யடைந்து ளேன்மா
தேவநின் றிருவுளத்தின் செயலென விறைஞ்சி நின்றான். (கந.ரு)

வருதிகோ சிகனே யிந்த வரம்பெறு சிதம்பரத்திற்
பெரிதுள முவந்து முன்னாட் பேணிரு முனிவர்க் கல்லாற்
புரிதரு நடமின் றாற்றென் புணரியந் தடத்து நல்லோர்
கருதுமோர் நறிய சூத கானன மிலகு மாங்கே. (கந.சு)

நீவிழை நடனங் காட்டி நினக்கருள் புரிது மென்றே
யேவிய நமந்து போற்றி யெம்பிரான் விடைபெற் றேகி
மாவனம் புகுந்து கோசி கன்பினங் கரைந்து வாழ்த்தி
யோவறு தடம்புக் காடி யோதிய பூதி யாடி. (கந.எ)

கண்மணி புனைந்து பஞ்சாக் கரங்கருத் துறச்செ பித்து
வண்மணிக் கோயில் புக்கு மந்திரேச் சுரன்வான் போற்று
மொண்மணி கண்டன் முன்சென் றுளநெகிழ்ந் துருக வேத்தித்
தண்மணிக் கழலி றைஞ்சித் தாண்டவம் விழைந்தி ருந்தான். (௧௩௮)

முன்னருள் புரிந்தாங் கன்ன முனிவற்கு நடன நாதன்
றன்னருட் பெருக்கி னலத் தாண்டவந் தரிசிப் பித்தான்
பன்னரும் பரமா னந்தப் பரவையுட் படிந்து பல்வே
றின்னருட் டுதிகள் கூறி யடிக்கடி யிறைஞ்சி வாழ்ந்தான். (௧௩௯)

இறையவ யார்க்குங் கிட்டா விப்பெரு நடன நாயேன்
குறைதப வளித்தா யெந்தாய் கோதிலா வருட்பெ ருக்கி
னிறையெவர் சொல்ல வல்லார் நீசன்செய் கைமா றுண்டோ
மறையெலா மளப்பி லாத வள்ளலே யென்று தாழ்ந்தான். (௧௪௦)

அளவிலா னந்த ரீக்கூர்ந் தனையனு டோறு மன்ன
பளகிலா போது சூத பாதவ கானத் தாலங்
களனிலா வண்ணல் பாதங் கைதொழு தமர்ந்தான் பன்னாள்
வளனுலாம் புன்னை வேலி மறைவனத் தடைந்தான் பின்னாள். (௧௪௧)

கோசிக னடங்கண் டன்பு கொண்டுவாழ் காதை யீதான்
மாசறு தவத்தோய் பானு மதிமுத லொன்பான் கோள்கள்
பேசுமிவ் வனத்தோர் காலெம் பிரானடி பணிந்து போற்றித்
தேசுறு தவஞ்செய் திட்ட சித்திபெற் றருளின் வாழ்ந்தார். (௧௪௨)

உத்தம முனிவ வேறொன் றுரைத்துநீ யுற்றுக் கேண்மோ
முத்தொழின் மத்தி வாய்ந்த முதுதொழிற் றிதிசெய் தேவன்
றத்துவ மார்க்கம் யார்க்குஞ் சாற்றுமா குரவன் வாய்மை
யுய்த்துணர் மறைநான் காதி யுள்ளவா றுணர்ந்த மேலோன். (௧௪௩)

இப்பெருந் தலைவ னுறயு மிந்திரை கேள்வ னூழி
னப்பெரு வலிக டத்தற் கருமையா லாதி நாளிற்
றுப்புறு மசுரர் காற்றுச் சுரர்கட லமுதுண் டாற்றல்
கைப்பெறு மாபா லாழி கடைந்திடத் தொடங்குங் காலை. (௧௪௪)

விக்கின நீக்க லாக்கல் விளைத்திடும் பெரிய தேவை
யக்கணம் பூசித் தேத்த வயர்த்தமு துணவின் வாஞ்சை
மிக்கெழ வமரர் சூழ வேண்டும்பல் கருவி கூட்டித்
தக்கபா லாழி மாலோன் றான்கடைந் தியல வாங்கே. (௧௪௫)

இந்திரை யிந்தி ராணி யிலங்குவெள் ளிபமுன் னூவ
வந்துவந் தெழலு மீது மற்றெமக் கெமக்கென் றோதி
முந்துமுந் தொல்வொன் றாக முற்றும்பெற் றுளங்க ளித்தார்
சிந்தனை விழைந்த வாறத் தெள்ளமு தெழக்காண் கில்லார். (கசசு)

மெய்விசைத் தீர்த்து வானோர் விசைதரக் கடைந்தா ரற்றூற்
பைவிரி யரவாற் றுதப் பர்வையும் வறப்பத் தன்வாய்
மைவிரி யாலங் கால மற்றெமக் கெமக்கென் றோர்முன்
கைவிரித் துதறி யஞ்சிக் கால்விசை கால்வி சைத்தே. (கசஎ)

முழுவிசை யிதுவே யென்ன முற்றொருங் கோடி னூரப்
பொழுதிறை பாணித் தான்மா னணித்தான் பொருக்கென் றோடா
வழுவினவ் வால மீற்றின் வன்னியிற் சுடவெண் மேனி
பழுதுறீஇக் கரிய னாகிப் படர்கதி வலியி னுய்ந்தான். (கசஅ)

வருவிடந் துரப்பச் சென்ற மாயன்முன் வானோ ரச்ச
மொருவிடா தோடி யோடி யுலகெலா முழன்று மந்தோ
வெருவிட மன்றி யாண்டும் வேற்றிட மின்றி நைந்து
பொருவிடை யமலன் முக்கட் புராரிபே ரருள்கை கூட. (கசகூ)

அடுத்தவ ரிடுக்கண் டீர்க்கு மமுதசஞ் சீவி யாயிப்
படிக்கணே வயங்குஞ் சூத பாதவ கானத் தெய்தி
நடுக்கமுற் றொழிந்து ஞாழைக் கோபுர வாயி னண்ணிப்
பொடிக்கொள்பொன் மேனி யெம்மான் கோயிலுட் புக்கோ விட்டார்.

அண்ணலெம் மந்தி ரேச னடியின்கீ ழலறி வீழ்ந்தா
ருண்ணெகிழ்ந் துருகு மாயோ னேதுமீ தும்பர் கோவே
துண்ணென விரிந்த நஞ்சந் துரப்பநொந் தலைந்தா கூழிற்
றண்ணரு ளீர்ப்பப் போந்துன் சந்நிதி யடைந்தே மெந்தாய். (கருக)

ஒருகணந் தாழ்க்கி னெம்மை யுடன்றுடன் றொலைக்கு நஞ்சம்
வருகண மீற்றி லாடு மயானயித் தான மாகிப்
பெருகண வுசாத்தா னப்பேர் பிரியுமால் விரியு நஞ்ச
மருகண வுறும லெம்மை யளித்தியா லருளின் வள்ளால். (கருஉ)

வேறு.

என்று மாதவ னிணையடி மாதவ னிறைஞ்சி
நின்று வேண்டலு நின்மல னாருரு ணிலையாற்
றென்றி சாமுக வாயிலின் வழிவெளிச் சென்று
பொன்று றுத்திறல் வைரவச் செம்மன்மேற் றிசைபோய். (கருங)

ஐங்கு ரோசத்தி னெல்லையி னவ்விட மமரா
ரெங்கு ளாரென வினவலிற் கொதித்திரைந் தெழலுஞ்
செங்கை நீட்டுபு கவர்ந்தனன் றிருவுசாத் தானத்
தங்க ணுதனை யிடைப்புக வருட்காத் தளித்தான். (கருச)

அனைய வல்லிட மங்கையி னங்கயின் றகில
ஈனைய நீலகண் டேசநா மங்கொடந் நிலையிற்
புனைய ருட்டிருக் கோயில்கொண் டருளியப் புராரி
யெனையு மாள்பரன் வீற்றிருந் தருளுவா னென்றும். (கருரு)

இந்த மாதலத் தவ்விட மெங்கைகை யளித்த
மைந்த னுமவடு கேசன்றென் மாதிர முகனு
மெந்த நாளுமத் தளியில்வீற் றிருந்தருள புரியு
மந்த நற்றலத் துற்றருள் பெற்றுளா மனேகர். (கருசு)

இன்ன நற்றலந் தாமாங் கோட்டையென் றிசைப்ப
வின்ன தியாவையுந் தருமய னகரின் பிக் கிலங்கு
மன்னு சீகண்ட நாதனுங் கருள்செயல் வாய
மன்னு தாயறம் வளர்த்தநா யகிபெயர் வயக்கும். (கருஎ)

அறம்வ ளர்ப்பது நாமிரு நாழிநெல் லாலெத்
திறனி வர்க்கொடச் செயல்விரிக் குதுமெனத் தெரிந்தம்
முறைய ளித்தநெல் லாலுல கூட்டிவூ தகுநீர்
நிறைவ ளத்தவே ளாளர்கூட் டம்மவ ணிலாவும். (கருஅ)

என்னை யாளறம் வளர்த்தவ ளெண்ணிய செயலை
முன்னி யாங்குமுற் றினரிவர் முதத்தினெம் மணித்தாய்
மன்னி வாழ்கெனத் திருவுளங் கொண்டமாண் பாலோ
வன்னார் கூட்டமிக் கவிருமந் நகருமப் பாங்கும். (கருகூ)

விடம யின்றரு ளண்ணறன் சூதமா விபினத்
திடைமி டைந்தமான் முதலினோர்க் கருள்புரிந் தினிநீர்
கடல்க டைந்திடிற் கணேசனைப் பூசித்தே கடைமி
னிடரொ ழிந்திடுஞ் சென்மினென் றிசைத்தன னெம்மான். (கசுo)

அன்ன வாறரு டலைக்கொடு மான்முத லமரா
நன்ன ரேகின ரயன்றிருக் குமரமே னலங்கேண்
முன்னோ ரோர்பகற் கௌசிமன் மனுவிறை முளரி
யன்ன சேவடி பணிந்தக லிகைதனை யடைந்தான். (கசுக)

குருகு லத்தினில் வருதிற லொருகுலக் கோமா
னுருகு மன்பினிம் மந்திரேச் சுரனடி யுன்னிப்
பெருகு பூசனைப் பேற்றின்வா னுருப்பசி பிரியா
தருகு வாழ்மனை யாப்பெறீஇ யின்பமுற் றமர்ந்தான். (௧௬௨)

சசிமு கத்துவான் சசிமுறு ணகுடன்றற் சார
நசைமி குத்தமை யுணர்ந்தொரீஇ வெரீஇயிவ ணண்ணிப்
பசைமி குத்துள மந்திரேச் சுரனடி பணிந்தே
வசைரி குத்தவந் நகுடற்கு விபத்தினை வழங்கி. (௧௬௩)

அண்ணன் மந்திரேச் சுரனருள் பெற்றினி தடைந்து
விண்ணி லாகண்ட லன்றனை வேட்டெதி ருவப்ப
வுண்ணி லாவுமின் புறப்பொலிந் துடன்றழீஇ யமர்ந்தா
ளெண்ணி யிந்திரன் மந்திரேச சுரனடி யிறைஞ்சி. (௧௬௪)

அருள்பெற் றுங்கெதிர் விருத்திரற் றடிந்தினி தமர்ந்தான்
றெருள்செ யாயுள்வே தியர்களச் சுவினிதே விருவர்
மருவி மந்திரேச் சுரனடி வழுத்திவா னவரோ
டொருவு றுதவிப் பாகநேர் பெற்றினி துவந்தார். (௧௬௫)

வேறு.

இப்படி யளப்பி லாதா ரிணையடி சூத கானத்
தப்படி முடியாற் போற்றி யடிக்கடி மலர்வாழ் வுற்று
ரெப்படி யுரைப்ப தெம்மா விருட்கடி மனத்தோ யென்றுன்
றுப்படி வேணி நந்தி தொழுதடி பரவிக் கேட்டான். (௧௬௬)

ஆயசீர்ச் சனற்கு மார னறிர வனத்தெம் பெம்மான்
றூயமான் மியத்தின் மேன்மேற றொடர்ந்தெழு மார்வந் தாண்ட
மாயன்முன் மந்தி ரேசன் வாரிமா முகற்பூ சித்தே
நீயரி கடைகென் றேய நறையருள் பெற்று னன்றே. (௧௬௭)

பின்னரம் முராரி செய்த பெற்றியெ னுற்ற தென்கொ
லன்னது மருடி யாலோ வண்ணலென் றடியிற் றாழ்ந்தான்
மன்னரு ணந்தி யெந்தை மற்றவற் கவைவி ரித்துச்
சொன்னவா கேண்மி னென்னுச் சூதன்மா தவர்கட் கோதும். (௧௬௮)

வேறு.

அளியி னீடிய ராகவ னனுர்முன் வீடியவாழ்வுற வருள் செய் காதையை யாதிய, வொளிரி மான்மிய மோதின ருடன்வி னுயினர் நீள்பகை யொரு வொ னுவிட மாதிய, பளகெ லாமெளி தோடிய படியில் சீரொழி லார்மனை பலம கார்முத வாரிக, வளனு லாவுபல் போகமு மருவி யேசிவ ஞானமெய் வழிசெல் வாரொரு வீடரோ. (௧௬௯)

இராமன் மந்திரோபதேசம்பெற்ற சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௩௫௯.

# அமுத நிவேதனச் சருக்கம்.

தசரதன் மைந்த னமீளி தளர்வொழி புய்ந்து நீடுவாழ்வி
னிசைதரு மந்தி ரோபதேச மினிதுறு நன்றி யோதினுமுன்
னசையமு தங்கொ ணுமுராரி நகமகள் கொண்க னூர்முனியு
நிசசரி தஞ்சொல் வாமெனவு ணிகழ்த்தர நந்தி நாதனோதும். (க)

வேறு.

சூதவன நாத னமர் தூசசரிதத் திடைமேன்மேற்
காதல்வளர் சனற்குமர கரிசறுமா தவகேண்முன்
மாதவனெம் பிரானளித்த மலியருடன் றலைமிசைவைத்
தாதரமிக் குறுதியினி யமுதுறுதி யெனச்சூழும். (உ)

சுரராசுரர் குழாந்தொடரத் தும்பிமுக நம்பியிரு
வரகமல மலரடிகண் மறவாம லுறவாழ்த்திப்
பரவுபொருள் பலகொடுசெ பரியைவிதி வழியாற்றிக்
கரமலரஞ் சலிமுடிமேற் கவினுறநின் றனன்றுதிப்பான். (ந)

பிரணவமாந் தனிக்கூடம் பெயராத குஞ்சரமே
பிரணவமா மாளானம் பிரியாத புகர்முகமே
பிரணவமா மலர்வாவிப் பெரிதாடும் போதகமே
பிரணவமாஞ் சேவகத்திற் பிறங்குமணி வாரணமே. (ச)

ஓங்கார வோங்கலகத் துதித்துலவுங் கிரிசரமே
யோங்காரத் தீங்குடிஞை யுள்ளவிரு நதிசரமே
யோங்காரத் தேங்கான மொருவாத வனசரமே
யோங்காரப் பெருவீதி யுலாவருதந் தாவளமே. (ரு)

தாரகமே முகமாகத் தயங்குபெரு மதங்கயமே
தாரகமே திருவுருவாத் தனிவிளங்கு மாதிரமே
தாரகமாம் பிடிகளிற்றிற் றனியெழுந்த கயமுனியே
தாரகத்தி னுள்ளுயிராய்த் தணவரிய குணகரியே. (சு)

திருவருளா மதவெள்ளந் திரைகொழிக்குஞ் சயவரையே
கிரியையறி விச்சையெனுங் கிளர்மதமூன் றொழுக்கிபமே
யிரவுபக லற்றொளிரு மிடத்தமருங் கடக்களிறே
வரவொடுபோக் கிலாதெங்கு மருவிநிறை மதாவளமே. (எ)

பரவுமலப் பெருஞ்சேற்றைப் படர்ந்துழக்குங் கறையடியே
விரவுபவப் பெருங்காட்டை விரைந்தழிக்கும் புழைக்கரமே
வரவயிரா வணமுகைத்து வருங்களப நால்வாயே
யரவுதர பந்தனமா யார்த்தபெருஞ் சீர்த்தகரே. (அ)

ஐங்கரநால் வாய்முக்க ணருளிருதா ளொருமுனியே
சங்கரனீள் சடைக்காட்டிற் றனிவிளையாட் டியல்கயமே
கங்கையுத கம்புழைக்கைக் கவர்ந்திறைக்குங் கயந்தலையே
செங்கரவேற் கோளரியோ டேனுதித்த சிந்துரமே. (கூ)

மறைமுடிப்பா துகையினடி மலர்சாத்தந் துடியடியே
மறையணிநூ புரமாக வளையணியா வேழமே
மறைபுகன்மூ லப்பொருளா வழுத்தியன்மா தங்கமே
மறையுமணு குதற்கருஞ்சீர் வளாகளப கேசரமே. (க0)

கணராச குணராச கவிராச புவிவாச
பணராச சடிலமகி பதிராச நிதிராச
வணராச மலரிதழி வனைராச வனைவலவை
மணராச துணர்வாச மலரடிக ளிணை போற்றி. (கக)

அகிலமெலா முபக்கிரமத் தன்பிணிணை யேயிறைஞ்சத்
தகவுறுமச் செயன்முழுதுந் தனிமுடிப்பாய் வனிமுடிப்பாய்
திகழுறயாந் தொடங்குறுமிச் செயன்முடிப்பாய் பயமொழித்தெம்
பகவதிரு வருள்பொழிபூம் பதத்துணையே துணையென்றே. (கஉ)

இன்னனபஃ றுதிபுகன்றவ் விறையருளா னிறையுவகை
துன்னியசென் றம்முகுந்தன் சூதவன நாதனடி
சென்னியுற மறவாத சிந்தையனுய்ப் பாலாழி
முன்னிலையிற் சுராசுரரான் மோதமுறக் கடைவித்தான். (கங)

ஆங்கெழுந்த தினியசுவை யாரமுத மதுகடத்தின்
பாங்குறப்பூ ரிதம்புரிந்து பாங்குறவைத் தனன்பின்னர்த்
தேங்குசுரா சுரரனைய திருமார்ப னடிதாழ்ந்தில்
வோங்கமுத முறைபகிர்ந்திங் குதவுகென வேண்டினரால். (கச)

அதுவினவு மரியவரை யழைத்தசுர சுரகுலங்காள்
விதுமுடியாம் பிரவனத்தெம் விமலனரு ளாலிந்த
முதுசுவையா ரமுதெமக்கு முற்றுறப்பெற் றனயவனுக்
கிதுமனிவே தனம்புரிந்தவ் விரும்பிரசா தங்கொளலே. (கரு)

மரபாகும் பொருத்திருமின் வல்லையமு தளிப்பனென
வுரையாடி யமுதகட மொருங்குடன்கைக் கொண்டேகி
விரையார்தண் சூதவனம் விரையாவந் தனையசுவைச்
சுரையார்பொற் றகும்பொருபாற் றுரிசறவைத் தமுதேசன். (கசு)

கழன்மறவா மனத்தொடுமோர்க் கண்டதோ யந்தோய்ந்து
நிழன்மறையாக் கண்டிகைவெண் ணீறணிந்தைந் தெழுத்தோதிப்
பழமறைபோற் றருமமுத பரமசுயம் பிலிங்கேசற்
றொழன்முறையா னயந்தேத்தித் தூநறுமா மலராதி. (கஎ)

அருச்சனைக்காம் பொருள்பலவு மமைத்தடிபூ சித்தனைய
மருச்சுவைத்தண் ணமுதகட மலிதரநேர் வைத்தண்ணல்
கருச்சுழியி லுறாதருட்செங் கைந்நீட்டி யெனைமெயெடுக்குந்
திருச்சுடரே யமுதேசா சிறியேற்கன் றிருவருளாய். (கஅ)

ஆழிகடைந் தெடுத்ததிரு வமுதிதுநஞ் சமுதாக்கொள்
வாழிதிருக் குமுதமலர் மதுவாக்கொண் டருளியென
பாழிவினை யொழித்தினருள் பாலியெனப் பலமுறைதாழ்ந்
தேழிசையா மறையனந்த மெடுத்தேத்தி யெதிரிறைஞ்சி. (ககூ)

பூசனைமுற் றுறமுடித்தப் புனிதநிவே தனவமுத
நேசனையாச் சண்டேசர்க் குளபாக நிவேதனஞ்செய்
தீசனைநல் வாசனையா ரிதழிமதி நதிவேணித்
தேசனைமீட் டும்பரவிச் சென்றனனவ் வமுதனெனும். (உ0)

அன்னதிரு வமுதநகர்த் தசனுலோ வதுமேனித்
துன்னியோ முற்கலுழன் றனையமுதத் துளியானோ
மன்னமிர்தந் தருதானவ் வடிவினுணர்த் திடவதுவாய்
முன்னரே முளைத்தெழுந்த முறையேயோ நாமறியோம். (உக)

அத்தகைய மாவனத்தவ் வருளிலிங்க மமுதமய
சுத்தவடி வாகவே துலங்கியொளிர் தருமென்றும்
வித்தகசே ளவ்வமுத மிளிர்கடங்கொண் டேகியமால்
கொத்தசுர ருணிலமரர் குலக்கிடா மெனக்குறித்தே. (உஉ)

அவ்வசுரர் தமைவஞ்சித் தமரருக்கே யமுதமளித்
தொவ்வரும்பாற் கடலடைந்தாங் குரகபதிக் கொளிர்சூத
இவ்வியகான் விடந்துரத்தச் சென்றதுமந் திரநாதன்
றெவ்விடமுண் டுயிரளித்த திருவருளு மதன்மேலும். (உங)

எண்ணியவா றமுதுகொளற் கிடர்புகுதா வுபாயமினி
துண்ணிலவ வுரைத்தருளி யுதுகிடைப்பித் தருளியதுந்
தண்ணியவின் னமுதநிவே தனங்கொண்டு பிரசாத
மண்ணலரு டாப்பெற்றுங் கமாருண வளித்ததுவும். (௨௪)

ஆதியவச் சூதவனத் தமுதேச னருளினைத்து
மோதியமர்ந் தனன்கேட்ட வுரகேச னேதியுளத்
தாதரமிக் குறைத்திடநின் றமுதேச தெரிசனமெப்
போதுகிடைத் திடுமினுமென் றப்பரமன் பதப்போதே. (௨௫)

மனத்திருத்தி வேண்டியவா மருதன்பர்க் கருடொழிலோய்
கனத்திருத்தி வைத்தமணி கண்டவெனக் கஞ்சலைநீ
யெனத்திருத்தி யுறவருளி யெளியேனைக் குளிர்சூத
வனத்திருத்தி நின்காட்சி வழங்கியநான் பெறுவேனே. (௨௬)

என்றுரைத்தங் கன்புநனி யெழுந்துசெல வினிதிருந்தா
னென்றுரைத்த நந்திகழ லிறைஞ்சியவம் முனிக்கதன்மே
னன்றுரைத்த வாறுமக்கு நாமுரைத்தல் கேண்மினென
நன்றுரைத்த வச்சூத நற்றவர்சோ னயந்துரைக்கும். (௨௭)

வேறு.

முகுந்த னுதவுநி வேதனமு தங்கொள் சரிதமி தோதினோ
ருகந்து வினவிய சீரினோ ருளங்கொள் செயல்கள்கை கூடுவார்
மிகுந்து வளரிக வாழ்வெலாம் விழைந்த படிநுகர் வார்பினீள்
சுகந்த மலரடி நீழல்வாழ் துலங்கு சிவகதி சேர்வரே. (௨௮)

அமுதநிவேதனச்சருக்க முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்—௬௩௮.

---

௳

# இந்திரன் றிருவிழாச் சருக்கம்.

சந்திர சேகர னாரமு தங்கொள மாலருள் சீரிது
மந்திர நாதனு லாவரு மங்கல நீள்விழா முறை
யிந்திர னேதக வேபுரி யின்பினி யோதுது நாமென
நந்திரன் பாதக மோசக நந்திபி ரானவில் வானரோ. (௧)

வேறு.

மைந்தகே ளனந்த ணுங்கு வந்தமு தேசற் கந்நாண்
மைந்தம ரிராச சூடா மணியெனும் வளவற் கூய
மைந்தபல் வளந்து வணற மாபினி லுவகை மல்கி
* மைந்தறப் புரிம கோற்ச வத்திரு மாண்பு முற்றும். (௨)

வானநா டளிக்குஞ் சீர்த்தி மகபதி யுணர்ந்து சூத
கானநா டளிகு ணத்திற் கனிந்தமு தேசன்காள
பானறு டளிக்குட் போந்து பாவியத் திருவி ழாச்சீர்
மேனறு டளிக்கு லாவ விழுத்தக விதியாற் செய்தான். (௩)

அனந்தன்மூன் னியற்று வித்தார கனந்தரம் வலாரி யாற்றும்
வனந்தரு மனைய வாய்மை மகோற்சவத் திறஞ்சொல் வாமென்
றினநதரு முனிவர் வானோ ரனையர் தமையொ துக்குங்
கனந்தரு வேத்தி யக்கைக கண்ணுதல் கழறு கிற்கும். (௪)

வினவுதி சனற்கு மார வித்தக முனிவ பேறே
யனகனும் பனக வேந்த னுற்றுமத திருவி ழாச்சீர்
தனகமோர்ந் தெழுசு நாசி தண்ணரு ளமுத நாதன்
கனகவம் போரு கப்பூங் கழற்பதி கருத்த னுகி. (௫)

தழைத்தெழு மன்பு முன்போ தரச்சதா கதியைத் தன்முன்
னழைத்தனி லேச கேட்டி யாம்பிர கானத் தெம்முட்
குழைத்தரு ளுருவாய் மன்னுங் குலவமு தேசற் கிந்நாண்
மழைத்தரு சைத்தி ரோற்ச வம்புரி வாஞ்சை யுற்றும். (௬)

ஆதலி னமுத சூத வணிவனம் விரையச் சென்று
காதலி னுங்கு முன்னர்க் கவினிறை செயல்க ளெல்லா
மோதல் னதிக மென்ன வுஞற்றுகென் றனன்கேட் டாங்கு
போதலி னுர்வ ரிக்குப் பொருக்கென வெழுந்தான் மன்னோ. (௭)

ஆசுக மளிப்ப திந்த வருட்சிவ பணியே யன்றோ
வாசுக† மளித்து மாற்று மமுதலிங் கேச னம்பா
லாசுக வளிப்பா னுக வருட்டொடர் பிணித்தான் போன்மென்
றாசுக வேந்தன் மீது யார்வமுந் துறச்செல் கின்றான். (௮)

* மைந்து - மயக்கம்.

† உகம் - உலகம்.

செல்வுழி மயற்கூ யீது செப்பும்வான் றபதி கேட்டி
மல்வரு சைத்தி ரோற்ச வந்தனிச் சூத கானத்
தெல்வள ரமுத நாதற் கியற்றிய விழைந்து மாங்கட்
பல்வகை யணிகண் முன்போய்ப் பயிற்றுதி வல்லே யென்று. (கூ)

இந்திர ஞணை யாமீ தென்பது மிசைத்தான் கேட்ட
தந்திர வழிசார் பெல்லாந் தணவறத் தெளிவான் றச்சன்
மந்திர நாதன் சூத வனத்துட னனுச ரோடும்
வந்திர வகற்றுந் தூய மார்க்கண்ட தோயந் தோய்ந்து. (௧0)

தளிபுகுந் தமுத நாதன் சந்நிதி தாழ்ந்தி றைஞ்சி
யளிமிகுந் தூந்தத் தான்முன் ஞற்றுமக் கோயிலெல்லாங்
களிமிகுந் தெழில்வி ளைக்குங் கான்முளை தன்னைக் கண்டாங்
கொளிபுகுந் திழுக்கக் கண்ணுற் றுரைப்பரு முவகை கூர்ந்தான். (௧௧)

இயலெழி லுலக மெல்லா மிலங்கினு மிளஞ்சேய்க் கின்றோர்
செயலெழில் புணர்ப்பர் காதற் றிறத்தினச் செய்தி போல
வயலெழில் வேண்டா தென்று மவிருமத் திருக்கோ யிற்கு
வியலெழில் வகைக ளெல்லாம் விழுத்தக விழைந்து செய்வான். (௧௨)

நவின்முதற் கோபு ரம்முன் னந்திமண் டபத்து நீசி
யவிர்திசை யிடைவ சந்த மண்டபத் தகத்தி டைக்க
ணுவமனெவ் வுலகத் துள்ளு முள்ளதன் றிதற்கென் றோதத்
திவியமா மணிப்பொன் வேதி சிறப்பநூ றிகழக் கண்டான். (௧௩)

நிலவொளி வயிரத் தம்ப நிரையதி னிறுவி மேனின்
றிலகொளித் துகிர்க்கு டஞ்சா ரிந்திர நீலப் போதி
குலவொளித் தரள விட்டங் கோதில்செம் மணிவி டங்கங்
கலவொளி நிலமேன் மூன்று கவினவோர் விமானங் கண்டான். (௧௪)

தூமணித் தூபி யுச்சித் தொழுமணி * நிரைத்தா னந்தத்
தேமணி விமானக் கேற்குந் திறமணி யுறுப்பெ லாமுங்
கோமணி நிரையின் யாத்துக் குலமணி கிரிடை யோடு
மாமணி கண்டன் மேவும் வனமணி பீடங் கண்டான். (௧௫)

அத்தகு வேதி கைக்காங் காயபொன் மணிச்சோ பானம்
வைத்தது சூழத் தூநீர் வந்துபோம் வழிய மைத்துச்
சுத்தநீ ராங்கி யாத்துத் தூநறு மலர்ப ரப்பிச்
சித்திர நிரைக ளெல்லாந் திறத்திற ஞகக் கண்டான். (௧௬)

---

* மணி -- இடைக்குறை.

பிறங்குகண் ணடியோ வென்னப் பித்திகை யாதி யேனைத்
திறங்குல வணிக ளெல்லாந் திருத்தக வமைத்துள் ளாலம்
மறங்குசெல் வியவ சந்த மண்டபப் புறம்பு சூழக்
கறங்குசீ ரிளம ரக்காக் கமழ்ந்துல களப்பக் கண்டான். (௧௭)

திருத்தகு மபிமு கச்சீர்த் தெனுதுவா யிலினை ரெம்மா
னுருத்தக வெழுந்து பத்தி யுலாநடைக் காவ ணந்தான்
குருத்தகு விதான மாதி குலமணித் தொங்க லாதி
மருத்தகு மாலை யாதி மலிந்தொளி வயங்கக் கண்டான். (௧௮)

மரகதத் திலைக டண்டு மணிபொனாற் குலைய மைத்து
விரவுபூத் துகிரிற் றூக்கும் விழுமிய வாழை வெண்பொ
னுரைதுவர்ப் பழுக்காய் முத்தி னலர்முகை யாதிப் பூக
நிரைகள்பல் வகைய கன்ன னிரைநிரை யாகக் கண்டான். (௧௯)

நிலனெலாம் பளிங்கிற் சோதி நிலவெழச் சமன்செய் தன்ன
தலனெலா மதித ழூடம்பர் றூரகா கணங்க ளென்ன
நலனெலா நிறைந்த தூய நகுமணி நிரைக ளாய
குலனெலாம் விளக்க மாகிக் கொழுஞ்சுடர் பரப்பக் கண்டான். (௨0)

விரையெலாம் விராய சாந்த மெழுக்கெலா முகனுஞ் செய்தான்
விரையெலாம் விராய பன்னீர் மேலெலா மணப்பப் பெய்தான்
விரையெலாம் விராய தூபம் விசும்பெலாங் கமழச் செய்தான்
விரையெலாம் விராய சுண்ண விதமெலாம் விரியப் பெய்தான். (௨௧)

இடமிடந் தோறுஞ் செம்பொ னெழின்மணி குயின்று தூய
வடிபுன னிறைத்துச் சென்னி மாவிலை மணிப்பொற் றேங்காய்
முடிதரு கருப்பை வாச மொய்ம்மலர் மாலை சேர்த்தி
நெடியொளிர் பூரகும்ப நிரைநிரை யாக வைத்தான். (௨௨)

இன்னன மேலு மேலு மெண்ணில வெண்ணி யெண்ணி
மன்னிய புரிஇவ் சந்த மண்டப முதற்கோ டித்தாங்
கென்னையாண் மந்தி ரேச னிமாசலை யாவு மீன்ற
வன்னைவாழ் நிகேத னங்கட் களவிலா வணிகள் செய்தான். (௨௩)

தினமரு தமர்ந்து போற்றுந் திருத்தொண்டி னிலையர் தாமு
மினமரு தியாமுன் றொண்டாற் றிருந்தளி யிதுவன் றென்று
மனமரு தையுற் றெந்தை வடிவினுற் றெளிவ வென்று
லனமரு விழைவி னூற்று யணிநிலை யளக்கற் பாற்றே. (௨௪)

உலகெலாந் தழைக்க வெம்மா னுலாவரத் தவஞ்செய் வீதி
நிலனெலாந் தருப்ப ணத்தி னிழலெழத் தூய்மை செய்தத்
தலனெலாம் வெண்ம ணற்றூந் தன்மையிற் றாள நண்மைக்
குலனெலாம் பரப்பி வேணிக் குடிஞையென் றுவப்பச்செய்தான். (உ௫)

அம்மறு கிருபாற் கன்ன லரம்பைபூ கதவொ ழுக்க
மம்மறு கனைய கங்கை யாற்றிரு கரைநி லாவுஞ்
செம்மலர்க் கதலி யாதிச் செறிவென நிழுவி மீது
செம்மணித் தொடைய லாதி திகழ்மக ரிகைகள் சேர்த்தான். (உ௬)

இவ்வகை யனை யாவு மெழில்வகை நிரம்ப முற்றி
யவ்வகை மயன்முற் சென்றாங் கனிலனுக் குணர்த்த வன்றே
னுய்வகை முன்ன ரேய வும்பர்கோற் குணர்த்த வொல்லைச்
செய்வகை யமரர் சூழத் தேவர்கோ னுங்குப் போந்தான். (உ௭)

ஆரரு ளீர்ப்ப முன்னின் றன்புபின் றள்ள வுள்ளம்
பேரரு ளுலகெ லாஞ்செய் பெரியநா யகிபான் மேய
சீரரு ளமுத நாதன் சேவடி தாழ்ந்து பல்கா
னேரருள் வெள்ள மூழ்கி நின்றுபஃ றுதிந வின்றான். (உ௮)

காளகந் தரம கேச கனகக *தரமா னேச
†காளகந் தரக்கு மோச கவினகந் தரமா னூச
‡காள¶கந் தரசு தேச கனந்தகந் தரச பேச
||காளகந் தரச சூத கானகந் தரர் வாச. (உ௯)

வந்தனை கரண மூன்று மாறுற வழிசெய் வார்க்கு
வந்தனை யினுமி ரக்க மலியருள் பொலிய வாங்கு
வந்தனைத் தின்பமுற்றும் வழங்கமு தேச வாணி
வுந்தனைத் துலகும் போற்று மாவனத் தரசே போற்றி. (௩0)

*நாகவ ரசன வாத நகுமணிச் சுடிகை யுச்சி
நாகவ ரசன பூசை நயநதவ தருமே காச
நாகவ ரசன காதி நற்றவ குரவ வாசை
நாகவ ரசனம் போற்று நறியமா வனத்தாய்போற்றி. (௩௧)

---

* தரம் - மலை. † காளகம் - க்ரியபாவம். ‡ காளம் - மேகம். ¶ கம் - சிரசு. || காளம் - சூலம்.

* நா - கவர் எனப்பிரிக்க.

தருமமால் விடையாய் போற்றி சைலயோர் புடையாய் போற்றி
யிருண்மனத் தடையாய் போற்றி யிதழியந் தொடையாய் போற்றி
சருமமுற் றிடையாய் போற்றி சதுர்மறை நடையாய் போற்றி
வருமயிற் படையாய்போற்றி மாவன முடையாய் போற்றி. (௩௨)

அறிவளர் மனத்தாய் போற்றி யடையலர்ச் சினத்தாய் போற்றி
களிவள ரினத்தாய் போற்றி காளமேக சனத்தாய் போற்றி
துளிவளர் கனத்தாய் போற்றி தூயசோ பனத்தாய் போற்றி
நளிவளர் தனத்தாய் போற்றி நவிலுமா வனத்தாய் போற்றி. (௩௩)

வேறு.

என்றிவ் வாதி துதிக ளியம்பிநேர்
நின்று செங்கா நீண்முடி மேலெழீஇச்
சென்று கூம்புறச் சிந்தை மலர்ந்துதா
ளொன்று மன்பி னுவந்திது வேண்டுமால். (௩௪)

ஐய வாரமு தேச வசலைபான்
மெய்ய மந்திர நாத விதாநிதிச்
செய்ய வேணிய சின்னஞ் சிறியனே
னுய்ய வேண்டிநின் சந்நிதி யுற்றனன். (௩௫)

உற்று ளேனின் சைத்திர வுற்சவ
முற்று நான்முறை தொட்டு முடித்திட
ரெற்றி வாழ்விருப் பெய்தின னேழையேன்
*பெற்று கந்தநின் பேரருள் வேண்டுமால். (௩௬)

நலம தொன்றுறற் கெண்ணி னடுவிடர்
பலபு குந்திடும் பண்பினர்க் கும்மெனி
னலம தொன்றுமி ஞெயினேற் கன்னவை
பலமுற் றெய்தல் பகர்தலும் வேண்டுமோ. (௩௭)

செய்த வோத லியாதுந் தெரிதராப்
பைதல் வாழ்க்கையுட் பட்டுழ லேழைபா
லுய்த லில்லை ராதமொ ராயிர
நைத லெய்துற நண்ணினு மண்ணலே. (௩௮)

திருவு ளம்பொறுத் தாள்கெனத் தேவர்கோன்
மருவு ளம்புயத் தாளின் வணங்கிமேல்
வெருவு ளந்தெறு நந்திமுன் வேண்டுபு
தருவு ளம்புரி யாணை தலைக்கொளா. (௩௯)

* பெற்று - கடைக்குறை.

தன்ன தேவர் குழாத்தினைத் தானழைஇத்
தன்ன மும்மனம் வேறொன்றிற் சார்ந்திடா
தின்ன வுற்சவத் தின்புற நீர்விழைந்
தின்ன ரின்ன வியற்றுகென் றேவினான். (சo)

ஆசை யாசையிற் போற்று மமரரை
நேச மிக்க நிமல னமரங்கா
ளேசி லாத விழாவிங் கியற்றுதல்
பேசி னுந்துணைப் பேறுகொண் டேயென. (சக)

முகம னோதி யவருண் முதிர்நிதித்
தகவற் கோதுவன் றக்கிணை யாதிய
தொகுபொன் னொடொறுங் காலந் தொறுந்தொறு
மிகவ ளிக்கும் வினைநினக் கென்றனன். (சஉ)

எழு நாக்கொ ளெரியினை நோக்குபு
வாழி வேண்டிடந் தோறும் வகைப்பல
கேழின் மிக்க சுவையிற் கெழுமுனா
வூழி னுக்குந் தொழிலுனக் கென்றனன். (சந)

அனில கேட்டி யனகன் சினகரம்
புனித வீதிக ளாதிய பூவெலா
மினிய கண்ணடி யென்ன விளக்குமவ்
வினைப ரிக்குதி யென்று விளம்பினான். (சச)

வருண வாதனச் சோதனி மாண்பணி
புரியி டந்தொறும் பூம்புன றாம்பணி
மருவ ழுக்கின் மெழுக்கு மலர்பணி
யுரிய வுன்றனக் கென்றன னும்பர்கோன். (சரு)

நிருதி யீண்டு நிருத ரசுரர்கள்
பெரிய பூதர்முற் பேத வகையினோர்
புரியுந் தீவினை யாண்டும் புகாதுநின்
றரிதி னோம்பனிற் காமென் றறைந்தனன். (சசு)

நடுவ கேள்வரு நாற்புறத் தோர்களு
மிடையொ ருக்கை நடுவின் விலக்கிநின்
றிடரு றாநெறி செல்ல வியக்குகோ
லுடைய கைத்தொழி னிற்கென் றுரைத்தனன். (சஎ)

கோதி லுற்சவங் கொண்டருண் மண்டபத்
தாதி வீதி யெழுச்சியி லண்மிகின்
றோது கோற்றெழி லாற்று முரிமைசிற்
கேத கும்பணி யீசகொள் கென்றனன். (சஅ)

எற்ற வேற்ற பணிக ளியம்புபு
சாற்று சோதிடர் யார்க்குந் தனிக்குரு
போற்று தன்குரு வாம்பொன் னவன்மலர்க்
காற்று ணேக்க ணமந்து கழறுவான். (சகூ)

ஐய மந்திர நாத னருள்விழாச்
செய்ய லாந்தின மோரை சிறப்புற
வைய வோர்ந்துரைத் தாள்கென வோர்ந்தவம்
மெய்ய ஞானியென் றோதினன் மேதக. (ருo)

நாளை யென்று தொடங்க நலந்தரு
நாளை யோதிய நற்றவர்ப் போற்றியந்
நாளை யேதன் னவையொழித் தின்பரு
* ஞானை யென்று நயந்தன னாகர்கோன். (ருக)

வேறு.

தந்திர நாதன் வேத தத்துவப் பொருளாய் நின்ற
மந்திர நாதன் செய்ய மகோற்சவத் திருநா ளிந்நாள்
வந்திர வகற்று காட்சி மனம்விழி குளிர்ப்பக் காண்கென்
றிந்திரன் முடங்க றீட்டி யெங்கணு மினிதுய்த் தானல். (ருஉ)

உய்த்திடு முடங்கல் கண்டா ரொய்யென மண்ணோர் விண்ணோர்
பத்தியி னிறைஞ்சி யேற்றுப் பனிமலர் தூய்ப்பூ சித்தா
ரித்திசை யன்றே சேர்த்த தெத்திசை களினு மென்னா
வத்திகழ் சூத கான மடுத்துநாற் றிசையுஞ் சூழ்ந்தார். (ருங)

புல்லொடுஞ் சமிதை யோடு நூலொடும் போது வாரு
மில்லொடும் வேள்வித் தீக்கை யிசைபொடு மேகு வாருஞ்
செல்லொடு தோய்கா னின்று தவத்தொடுஞ் செல்லுவாருங்
கல்லொடு தோய்ந்த வாசக் கதிரொடுங் கமனிப் பாரும். (ருச)

சமையம்வாய்ப் புறப்பெற் றெம்மான் றகும்பணி செய்கிற் பாரு
மமைவிசே டாதி வாய்ப்புற் றகம்புறத் தருச்சிப் பாருங்
கமைநடச் சிலம்பி னோசை கண்டுகேட் டுருக்கொள் வாருந்
தமையுணர்ந் தமைந்து சார்ந்து தாமிரண் டறவாழ் வாரும். (ருரு)

---

* ஐ-சாரியை

ஏற்புடை வேட்டன் முன்மூ விருதொழி லியற்று வாரு
நாற்படை சூழ வாழு நானிலப் புயத்தி னாரு
மேற்படை துலாக்கோ லாக மிளிர்ந்தி விளைவி னாருஞ்
சாற்படைத் தொழின்மீக் கூர்ந்து சகமுழு துயவிப் பாரும். (ருசு)

களிறொடு பிடிக ளென்னக் களியொடு நடவு வாரு
மிளிர்மதி லோடு நீங்கா மின்னென விரவு வாருங்
கிளியொடு மின்சொ லாடிக் கிளர்வொடு மேகு வாரு
மளியொடு புயத்த லங்க லலங்கசே ரண்மு வாரும். (ருஎ)

ஆமிவ ராதி யானோ ரனைவரு மாங்காங் கன்பான்
மாமகிழ் பூப்ப வன்னோர் மரபுறு நிலையுட் கொள்கை
தாமுணர்ந் தவர வர்க்காந் தரத்தினெட் டூணை யுங்குன்று
தேமுற வசித்தற் கொத்த வசதியி னிருப்பச் செய்தான். (ருஅ)

இன்னன வேளை யாவை யெழில்விழா விற்கு வேண்டு
மன்னன வங்ங னாக வமைத்தன னாக வானோர்
மன்னனச் சிறப்பு நோக்கி வான்வரு பானு தானுந்
துன்னன விழவு காண்பான் றேயமே னரலை புக்கான். (ருகூ)

புள்ளின நாளை யென்னப் புராரிதன் றிருவி ழாவைத்
* தெள்ளின நமரங் காணுந் தெரிசன யதத மாக
† வள்ளினம் வருதல் வேண்டும் வம்மினங் குடம்பைக் கென்று
நள்ளின வழைத்தல் போன்று நரன்றன செல்வ வானில். (சு0)

உலகெலாம் பொதுவிற் கொள்வா னுள்ளமு நிறைக்கா நின்ற
நிலவுகண் டோர்புள் ளோகை நிமிரமற றோபுள் ளந்தோ
நலிவுற லகில லோக நாயகன் கருணை யொன்றே
பொலிவுறு மின்ப துன்பம் வினைவழிப் புகட்டல் காட்டும். (சுக)

ஆயதோர் காலை மாலை யவிர்மதி யமரர் கோமான்
மேயதோர் பணியு நம்பால் விதித்தில னாத லாலத்
தூயதோர் விழாவி னுஞ்செய் தூப்பணி நிகரின் றென்மார்
சேயதோர் பணிசெய் கென்னுத் தெளிகடற் குளித்தெழுந்தான். (சுஉ)

எழுந்திடு மதியோன் செய்த தென்னென வுரைத்து மம்மா
தழுந்தம பணிசெய் வானோர் தாம்வழி வந்த வேனோ
ரழுந்தம ரேசனாதி யனைவர்க்கு மழுத மாரப்
பொழிந்தயர் வொழித்து மேலும் பிரிபணிக் காற்றல் செய்தான். (சுங)

---

* தெள்ளின-முற்றெச்சம். † வள்ளினம்-இருவுமது.

புனிதன்முன் னால வாயிற் புரிந்தருள் புண்ணி யாக
வினையுறு சாந்தி போற்றன் விழுத்தகு கிரணை சிதங்
கனியமு தனைய சூத கானனை முற்றும் பெய்தாங்
கினியமா புண்ணி யாக மியற்றினன் மதியோ னென்பார். (௬௪)

சார்ந்ததன் வண்ண மாதல் சாற்றுயிர்க் கியல்ப தென்ப
சார்ந்ததன் வண்ண மாமுன் றழுவெறி கொடுங்கா றிங்கட்
சார்ந்ததன் வண்ணஞ் செய்த சாற்றரு வுயிர்போற் றானுஞ்
சார்ந்ததன் வண்ணத் தாலோ தகுமிதென் றுவப்பிற் சால்வார். (௬௫)

வாட்டமிக களிக்குங் காலம் பிரிவென்ப மகிழ்கூ டென்ப
வூட்டமிக் களிக்குங் காலங் கலப்பென்ப வுண்மை தெய்வ
நாட்டமிக் களிக்கு மல்லி நலியநற் பணிகள் செயதோர்
கூட்டமிக் களிக்கு மல்லீ தெனக்கலாய்க் குலவி னால். (௬௬)

நாளொன்றை யொருபால் வெப்ப நண்ணவோர் பாதி தட்ப
மாளொன்று வைத்து துய்வா னவிகட் கெனப கண்டாம்
வாளொன்று வெயிலி னெய்த்த வருத்தமுற் றவிர்வெண் டிங்கண்
மீளென்று விலக்கிற் றென்ன விழுந்தக வழுத்து வாரால். (௬௭)

இந்துசண் டுற்ற செய்கை யின்னன வாக விப்பான்
முந்துசண் டுறக்கு டாது மூரிநீர் மூழ்கும் பானு
வந்துகண் டுமைகோன் செல்வ மலிவிழா வின்பு துய்ப்பா
னந்துகண் டுறுகு றுது நாலைமீ தெழுந்தான் மன்றே. (௬௮)

வருபிர தீசி வேலை தோயுநான் மரீசி போன்
றரிசன முறநி லைத்த தன்மையா நன்மையாமோ
வரியமேல் கடற்க ளித்தோ னணியகிழ் கடலெ ழுந்து
துரிசறுத் தருளை மப்பர் தோற்றமுந் துணையப் பெற்றான். (௬௯)

ஞாயிறுங் குத்த ராய ணத்தனு யுதீசி செல்வோ
னுயினு மருளாற் கீழை யார்கவி யெழீஇ விழாவி
னேயமிக் கிர்த்த லாலந் நிலையொழிந் தமுத நாதன்
கோயிலூர் நேர தாகக் குறித்துவா னிவந்து வந்தான். (௭௰)

வருடங்க டோறு மெந்தை மந்திர நாதன் செய்ய
வருடங்கு சைத்தி ரோற்ச வந்தரி சித்தற் காகு
மருவுந்தன் மையினை யோரார் மாதமுன் றகன்ற தாலே
தெருடந்த விரவி நேரேசெல்வதென் றுரைப்பர் மாதோ. (௭௧)

நாயக னுளத்திற் கேற்ப நடத்தலே குலத்திற் போந்த
தூயகற் பினர்மாண் பென்னுந் துணிவினைக் காட்டி யாங்குத்
தோயமுற் றெழுந்து கொண்கன் சுடர்முக மலர்ச்சி நோக்கி
மேயமுண் டகங்க டங்கண் மிளிர்முக மலர்ந்த மாதோ. (௭௨)

தாவில்சீர்க் குலமா தர்க்குத் தந்துணை நோவி னோதல்
சாவினிற் சாத லேயாந் தலையளி யென்ப தேற்று
மேவிய விரவி நேரில் விதுமுக வொளிம ழுங்கக்
காவியங் குமுதப் போதங் கண்முகங் கூம்பிற் றம்மா. (௭௩)

செயலொழி வுறக்க மீண்டு செயல்விழிப் பன்றி வேறு
மயறரு முறக்க மில்லா வானவ ரோடு மேனை
முயல்வினை மாந்தர் யாரு முந்துறப் புரியுந் தத்த
மியல்பணி யுள்ள மூக்க வெழுந்தன ரியற்று கிற்பார். (௭௪)

தேவர்கோன் குரவன் சொன்ன சித்திரைத் திங்க ளிந்து
மீவளர் பக்கத் தைந்தின் மிருகசீ ரிடநா டன்னி
லோவறு செயமு கூர்த்த மொன்றரு ணோத யந்தான்
மேவுமப் பொழுதே யன்பு மீக்கிளர்ந் தெழவெ ழுந்தான். (௭௫)

நித்திய மாதி மூன்று நிமலனா கமத்தி னூற்ற
லொத்திய றமக்கே நல்க வுறுமதி காரம் வாய்ந்தோர்
சத்திய சிவதீக் காதி சமசகார முற்றும் பெற்றோர்
முத்திசெய் பரம னைந்து முகோற்பனர் வழிவந் துற்றோர். (௭௬)

வேறு.

ஆயசிவத் துவிசர் சூழீ இ யமர்ந்ததிருக் கூட்ட முன்போய்
நேயரிகப் பணிந்தெழுந்து நேர்நின்றவ் வானவர்கோ
னாயகனை யான்மார்த்தம் பரார்த்தமென நவிற்றிருபாற்
றூயசிவார்ச் சனைபுரிந்தே யுலகமெலாந் தொழச்சிறந்தீர். (௭௭)

எந்தையமு தேசனுக்கிண் டியற்றுவிழாத் தொடக்கமுத
லந்தம்வரை புரிசெயலு மன்றியுநித் தியமுதலு
வந்தசெயன் முழுவதுநும் மாண்செயலே யெனவோர்ந்து
மிந்தவிழா வியற்றுகென யான்வேண்டன் மிகையன்றே.* (௭௮)

அமரரெலாந் தொழுவானத் தரசேநின் மொழியென்னே
நிமலன்மகோற் சவமிதனை நீவேண்டி நடத்துதலா
லெமதுசெய லியற்றுதொழி லேவுபெருஞ் செயனினதாற்
கமைதருகர்த் துருத்துவநின் கண்ணதெனா வுவந்தோதி. (௭௯)

* என்றுனென்பதவாய் நிலையாற்கொள்க.

அனுமதிபெற் றகமதியா லதைராச வனுஞையெனும்
வினைவிளக்கி யோதியுணர் வேதியர்தம் மனுஞையும்பெற்
றெனையருளு மழுதேச னிமாசலைபூ சனைசிறப்ப
வினிதுபுரிந் ததிர்வேண்ட லெனுந்தேவா னுஞைபெற்றார். (அ0)

அக்கடவுண் மாமறையோ ரனையமகோற் சவமிடையோர்
விக்கினமு முறாதினிது வேண்டியவா முடித்தருள்வான்
மிக்கமறை முதற்பொருளாம் விநாயகனை விதிமுறையாற்
பொக்கமிலாப் போன்பாற் பூசித்தா ரருள்பெற்றார். (அக)

பின்னனைய விழாவினுக்காம் பெருநிதியந் தாய்தாக
வன்னதனர்ச் சனைபுண்ணி யாகவா சனமாதி
முன்னருஞற் றிணர்வாத்து சாந்திவினை முறைபுரிந்தார்
தன்னிகர்மா மறைபரவுந் தனிவில்வ தருமூலம். (அஉ)

தனிலமுத நாதனிரு தனையரொடு மிடத்தமர்ந்த
வனிதையொடும் பிதாவிருகால் வாங்கியவோர் காலினொடும்
புனிதவயிற் றேவினொடும் புடைமிளிர்பல் வரிசையொடு
மினிதினெழுந் தருளிவீற் றிருந்தருளப் புரிந்ததற்பின். (அங)

விதிமுறையிற் பூசனையவ் விருக்கமு மைத்தியற்றித்
துதிசெய்திருத் திகையதன்பாற் றெருட்டெடுத்துப் பட்டடுத்த
கதிர்மணிசூழ் பொற்கலத்திற் கைக்கொண்டு பங்கமுறப்
புதியமதி வேணியொடும் பொற்கோயில் புக்காரால். (அச)

இன்னமுறை யேமிருச்சங் கிரகணமாங் கியற்றியபின்
னன்னமிருத் திகைமுக்கூ றாக்கியவை யொவ்வொர்வகைச்
சொன்னமுளைப் பாலிகையிற் றாயேற்றின் றுவசமொடு
மன்னுவிழாத் திர்த்தமென்மூ வகைக்குரித்தா முளைதெளித்தார். (அரு)

இவ்வகைசெய் தங்குரார்ப் பணமிரட்சா பந்தனமீற்
றெவ்வமறப் புரிந்துவிடை யெழுதுபடம் பூசித்துத்
தவ்விறுவ சாதிவா சனம்பேரி தாடனமுற்
கைவருபல் வினைகளுமக் கரிசறுமெல் லியின்முடித்தார். (அசு)

எண்டிசைகா வலர்களுமாங் கிருந்தொண்டு புரிந்துறினும்
பண்டிசைநூல் வழாதுதிசா பந்தனமம் முறைபயிற்றி
வண்டருமக் கிராமதே வார்ச்சனமு மாபியற்றித்
தொண்டர்மகிழ் தாவிமயத் தோகையொடு மழுதேசன். (அஎ)

தனக்கினிய விசேடபூ சனையாற்றி மகிழ்ந்தேத்தி
மனக்கினிய வருடருசோ மாக்கந்தர் தமைத்தொண்ட
ரினக்கினிய மண்டபத்தி னெழுந்தருள்வித் தெதிர்மரபின்
வனக்கினிய மால்விடைமுன் வரைந்தபடந் தசைத்துயர்த்தார். (அஅ)

ஓதுமுறை மாதுவசா ரோகணமீ தாருற்றியுடன்
மேதகவெண் கொடிகளினு மிடையுயர்த்தாங் குடன்யாக
வேதிதிகழ் சாலைபுகூஉ மேவுபரி வாரமுடன்
மேதகுயா கேசகடம் விதிமுறைபூ சனையாற்றி. (அகூ)

கோதான விலிங்கிநவ குண்டமுற முறையங்கி
யாதான முதலான வாற்றியா குதிகளெலா
மீதானம் புரிந்தீண்டிவ் விதத்தங்கி விளைதகழ
மாதான மமர்ந்தருள்சோ மாக்கந்தர் திருமுனுறீஇ. (கூ0)

அளிபெருக கனிசிறப்பி னமர்தருபூ சனையாற்றிக்
களிபெருக வாங்கோரி கவினவிரண் டணிந்தவற்றி
னொளிபெருக வெம்பெருமா னொன்றினுமை யொன்றிவர்ந்து
தளிபெருக வலம்போந்த தகவின்மகச் சாலைதனில். (கூக)

எழுந்தருளி வந்தனைய விருஞ்சாலை யபிமுகமாய்த்
தழுந்தகைய பச்சிமநேர் தான்பூர்வ முகத்தருளே
பொழிந்தருளி நின்றருளப் புரிந்துமகம் பூர்த்தியுற
மொழிந்தமுறை பூரணா குதியினிது முடித்ததன்மேல். (கூஉ)

அன்னமகச் சாலைநடு வமர்ந்துயர்ந்த வேதிகையின்
மன்னமுத நாதனிடம் வளர்பெரிய நாயகிதஞ்
சொன்னகடத் திரும்பூசை தொடரவிரு பாங்கரினு
நன்னர்மகா தீபாதி நலம்பெருகு முறைபுரிந்தார். (கூங)

சான்றசிவத் துவிசரிவர் தம்பகும்ப விம்பமெனு
மூன்றினுமிம் முறைபூசை முடித்திடவத் திருக்காட்சி
யேன்றுலகுக் களித்தவணின் றெழுந்தருளி யெம்பெருமா
னொன்றதிரு வீதியெலம் மன்னையொடு முலாத்தருவான். (கூச)

பானுமதி யெனுமிருவர் பல்லுருக்கொண் டெம்பெருமாற்
கானபணி புரிந்துய்வா னடுத்திருபால் வரலேய்ப்ப
மேனிமிர்வுற் றவிர்செம்மை வெண்மையன விரிகவிகைக்
கானிரை நிரையாகக் கவிந்துநிழ னனிபரப்ப. (கூரு)

ஒருபாறன் பாலாக வுமைகவர்ந்தா டவம்புரிந்தா
னிருபாலும் பெறப்பணியீண் டியற்றுவலென் றமைத்தனன்பல்
லுருவாகிக் கங்கைதன தொண்டினைவீ சுறுசெயல்போற்
றருவான மகளிர்பலர் சாமரைகள் புடையிரட்ட. (௯௬)

பின்புதமை மடிக்கிடத்திப் பெருந்தானைச் சிறுகால்செய்
தின்புதவு மம்மையப்பர்க் கீண்டிதுசெய் திடன்முறையென்
றன்புதரு தொண்டர்பல வருஞ்செயல்வீ சனகொண்டு
முன்புதனித் தனிவிசிறு முழுமணக்கான் முகட்டிப்ப. (௯௭)

தொடர்பிருபா லாலவட்டஞ் சுருட்டிக்கை யர்த்திசை
மிடையுமெருக் கொதுங்குமுடி விடையொளிர்பொற் சோதிவை
விடியகல்வான் பறந்தோடிமிய லிருபுள் ளினைவுறத
கொடிகடமக் கோரமாயக் குலவுவிடைக் கொடியுறுமா. (௯௮)

யாமிதுகா றந்தோநம் மிருநடனத் திறநேரா
ஆமர்மூன நடித்தலுத்தோ மோதுநட விகற்பமெலா
மேமுறவோர்த் திடுமெம்மா னிதுவன்றே பெருமபேறெ
ருமகல்வா னரமகளி ராங்குமெனதிர் நடித்துவர. (௯௯)

நாதமெலா மொடுங்குழிமுன் னண்ணியவா பின்புபல
பேதமுற விறைவன்முனம் பெருகவிரித் தெழுவவெ
வேதவொலி தமிழ்வேத மிக்கவொலி மெசர்க்கபம
கீதவொலி பல்லிபத்தின் கிளவொலிகள் வளர்ந்துவர. (௧௦௦)

இருபாலு மெசுர்வேத மெடுத்தோது மிசைபெருக
மருவாசின் றேனையமா மறையொலியின் மல்கிவரத்
தருவாய்மைத் தமிழ்வேதஞ் சுந்தியின் மன்னிவர
வொருவாத சிவநாம கீர்த்தனத்தி னோசையெழ. (௧௦௧)

வீணைமுதற் றந்திரிகண் மேயபல கருவியிசை
காணமர்வேய்ங் குழலாதி துளைவகைய கருவியிசை
யேணமர்தோற் கருவியிசை யியைதருதா ளத்தினிசை
கோணரிதாய் மிடற்றெழுந்து குலவுமிசைக் குலம்பெருக. (௧௦௨)

வந்தியர்மா கதர்சூதர் மலிதருமங் கலம்வீரம்
பந்தியமா புகழ்முறையே பண்புறநின் றெதிர்பாட
முந்தியசீர்ப் பாவாணர் முதிர்சுவைகாற் கவிசூட
விந்தியநீத் தவர்போற்று மிருந்துதிபற் பலகூட. (௧௦௩)

குருக்கொண்ட மதிமௌலிக் குழகனருட் டுவெள்ள
முருக்கொண்டந் திறம்பொலிந்தெல் லுயிர்களுமளித் துறல்போலத்
திருத்தொண்டர் திருமேனித் திருவெண்ணீற் றொளிபரவக்
கருத்தொன்று மரவோசை கண்மலர்நீர் திரைவிரவ. (௧0௪)

திருவருளி னடங்கியலர் சிந்தைதெளிந் தன்புருகு
நாமிகுமெய் யடியர்சிவ தசபுரா ணத்தடைவின்
வருமரிய பெருமகிமை வகைநவியு வகைசிறப்பப்
பரவினவு நர்களிப்பப் பரிவினொடு தோதிவர (௧0௫)

விண்மாரி யெனப்பொழியும் விழிமாரி யனபாதருங்
கண்மாரி சொரிவிரைப்பூங் கவினமாரி சிவஞான
வண்மாரி தருதமிழ்மா மறைமாரி யுடன்பதினெண்
பண்மாரி முதலாய பலமாரி நலம்பெருக. (௧0௬)

எமதுரியு மேகாச மெனவகுத்துச் சிறப்பளித்தோ
னமையருளு மெனவடுத்தாங் கிபமணிந்து முன்போதக
கமைதருமா மறைபரியாக காதலித்தா னுதலினு
னமையருள்வா னெனப்பரிக ணடமபுரிந்தங் குடன்போத. (௧0௭)

சிவனெனுநா மந்தனக்கே யுரியனென மறைதெளித்த
திவியதமிழ்ச் சுருதிபுகல் செழும்பொருளோ தேற்றுதல்போற்
சுவணகட முதற்றேவ மங்கலமாந் தொகையெட்டு
மவிரிழைவான் மடவாரக ளண்ததாக வெடுத்தேக. (௧0௮)

என்னெனவோ துதுமெல்லா முடையபிரான் றிருவெழுச்சிக
கின்னமற் றென்னவுமாங் கெயதமலர் மணிமறுகின்
முன்னவன்மா தேவனிறை முக்கண்ணன்வந் தானென்று
சின்னமெலா மெடுத்தோதத் திருவுலாப் புறம்போந்தான். (௧0௯)

திருக்கோயின் முன்போந்து தேவமினு ரெடுத்தேந்துங்
கருப்பூரச் சுடர்முதல கவினுறமும் முறைசூழ்த
தருக்காதி சைவர்செய்பூ சனையேற்றுட் சென்றருளி
விருப்பூரு மணியணைமேல் வீற்றிருந்தா னமுதேசன். (௧௧0)

இம்முறைநா ளேறேற விருஞ்சிறப்பு நனியேற
வம்மவிரு பொழுதுமெழுந் தருள்பவனி யெவரிசைப்பார்
நம்மையருள் ளணைபெரிய நாயகியோ டமுதேசன்
[illegible]மயுல் குயதூரு முறை[illegible]ர்தி வகைமொழிவாம். (௧௧௧)

வேறு.

பின்னர் வழிநாட் காலையிலெம் பிராட்டி யோடு மாந்தோளி
தன்னி லிறைவ னுலாக்காட்சி தந்தந் நாளின் மாலையினிற்
பன்னவரிய சித்திலப்பூம் பந்தர் நிழற்கீ ழமேசன்
மன்னு காழி மணியெழுச்சி மாண்பு நினைப்பித் துலாப்போந்தான். (௧௧௨)

மூன்றா நாளிற் காலையுலா முன்னை முறைபோந் தன்றிரவிற்
றோன்றுந் தல்குற குடைந்தபணி தன்னைச் சுமப்ப வுமைபோதக்
கோன்றா னிவண்சார் பிரிவாற்றாத் துணைத்தி னடைந்து தரித்ததெனச்
சான்றோர் பரவு கயிலாயத் தனிவா கனமேற் பிரானூர்ந்தான். (௧௧௩)

வருநான் கெனுநாட் காலையுலா மரபிற் போந்தவ் விரவினடை
தெருளோ திமமூர்ந் துமைபோதத் திகழ்சே வடிநான் முடிசூட்டும்
பெருவாழ் வினுமீ ததிகமெனப் பேணு நந்தி மிசையவற்குப்
பொருவா முன்னூற் சிவஞான போத மளித்தோ னுலாப்போந்தான். (௧௧௪)

ஐந்தென் றிடுநாட் காலையுலா வடைவிற் போந்தந் நிசிகரத்து
கந்தின் சொல்லா ரமுதருத்து கருணைக் கிதுகைம் மாறெனவே போன்
முந்துங் கிளியூர் தரவுமையெம் முதல்வன் கணேச னெனற்கிசைய
வுந்தும் பூதந் தனைவசந்த விழாக்கொண் டூர்ந்தா னும்பர்பிரான். (௧௧௫)

இருமூன் றெனுநாட் காலையுலா வெழிலார் தரப்போந் தந்நிசியெம்
பெருமான் றனையூ டலின்வெவ லும்பெற்றி புறத்துந் தெரிப்பதென
வரியூர்ந் துமைபோ தரவெம்மா னயிரா வணமூர்ந் தேதுகயிலைக்
கிரியூர் பட்ட வாத்தனமாங் கிழமை தெரிதாங் குலாப்போந்தான். (௧௧௬)

அறமே வேழா நாட்காலை யருமை யுலாப்போந் தனறிரவி
லறமே யுருவா யென்றும்வள ரறமே புரிவா ளதுதெரித்தாங்
கறமே யுருவாம் விடையூர வண்ண லுருவிற் கலந்திடர்முற்
றறமே வியதோர் தொடர்புணர்த்தாங் கருமால் விடையூர்ந் தருள்புரிந்தான்

இருநான் கெனுநாட் காலையுலா விணங்கப் போந்தெவ் வுயிர்க்கு முனு
வொருவா தூட்டி வளர்க்குமுயிர்த் தாய்தானென்ப துணர்த்தாங்குத்
திருவார் காம தேனுவுமை செலுத்த மால்பின் னவதாரத்
துருவா யருள்வேட் டிவண்மேற்கொண் டேற்றா னெனப்பாய் மாவூர்ந்தான்.

ஒன்பா னாளி னுமையொருகோட் டும்பன் மயிர்சேய் சண்டீச
னென்பா ரொவ்வோர் மாமணித்தே ரிவர்ந்து திருவா மணிமறுகி
லன்பா லுடன்போ தரவெம்மா னமுத நாத னணிமணித்தே
ரின்பா லூர்ந்தாங் கருட்கோலத் தெழிலார் காட்சி யினிதளித்தான். ([illegible])

திருபா ஞனிற் சிறுகாலை யுடையா னுடையா ளுடன்காட்சி
தருவாழ் வருளி யுவந்துதனித் தனிவெள் விடைமே னிருமலமாந்
தெருண்மா தீர்த்த தனிற்போந்து தீர்த்தங் கொடுத்தாங் குலகமெலாம்
பெருவாழ்வளித்தாங்கருள்வெள்ளப்பெருநீர்தோய்ந்தின்புறப் புரிந்தான். ()

பின்னர் யாக விசர்ச்சனநூல் பிறங்க வாற்றி யாகேச
சொன்ன கடநீ ரமுதேச சுயம்பு மூர்த்திக் கபிடேக
நன்ன ரியற்றி விசேடார்ச்ச னைமுன புரிந்தவ் வமுதேசன்
முன்னர் விடைமான் கொடியிறக்கி முதரீக கூரந்தார் சிவத்துவிசர். (கஉக)

சுற்றிற் புரிசண் டேசவிழா விலங்கப் புரிந்தா ரெண்டிசையும்
போற்றுபால ரங்கு ரங்கள் புனைந்த விரட்டை விசர்ச்சனங்க
ளாற்றிற் புரிந்தா ரமுதேச னன்னை பெரிய நாயகித்தன்
சாற்று கலியா ணோற்சவமுந் தயங்க மரபின முறைபுரிந்தார் (கஉஉ)

வருநா டோறுந் தனிவசந்த மணிமண் டபத்தில் வீற்றிருந்து
இருவார் விழாகொண் டருளியவச் சிறப்பி னனந்த மடங்கின்றுட்
பெருகா திற்பப் புதுநீர்சூழ் பிறங்க யாதது நறுமலாமெய
தொருவா நாப்பண் மணிபீடத் துமையோ டெமையா ளமுதேசன். (கஉந)

தனக்கு நபன கும்பாதி சாபித கருச்சிக தூறுமரபின்
மனக்கொண் டினிய வபிடேக வகைகள் பெருக நனிபுரிந்தோ
தனக்கு வால்வாக காதிந்வேண் தனமா பூசைச் சிறப்பியற்றி
மனக்கு மகிழ்கூர் விடாயுாற்று மாண்பின் விழாச்சீ ரியக்கினர். (கஉச)

உடனுங் கெழுந்தட் சூழன்முத லோரைந் தாவ ரணங்களினும
புடைமா மறைதே வாரசிவ புராண நிருத்த வாத்தியங்க
ளிடனீ ளோதை யோரொளமு யிலங்கி முறையே தொடர்ந்துவர
நடநா யகன்சூழ் போந்திருக்கை நணிவீற் றிருக்கு நலம்புரிந்தார். (கஉரு)

சாற்று மிவ்வா றமுதேசன சைதனி போற்ச வஞ்சிறப்ப
வாற்றின் முடித்த சிவத்துவிச ரவிர்வெண் பூதி பிரசாதம்
போற்று வலாரிக் களித்தாசி புகன்றிவ் வரிய பெரும்பயனீ
யேற்று வாழ்கென் றுபசரித்தா ரிறைஞ்சியேற்றாங் குடல்பொடித்தான்.

பின்ன ரனைய சிவத்துவிசப் பெரியர்க் கரிய வணியாதி
மன்ன வணிந்து மாபூசை வயக்கிச் சிவிகை களி னிவர்ந்தாங்
கன்னார் வீதி வலம்போந்தாங் கமரா சிரியோற் சவமுறையே
நன்ன ரியற்றி யடியுறைக ணயப்ப நனிதங் குளமகிழ்ந்தான். (கஉஎ)

அடைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்துருகு மன்பு பெருக வருள்வெள்ளத்
துடைந்து பணிந்தாங் கமுதேசன் குளிர்தா மரைச்சே வடிநிழற்கீழ்
மிடைந்து தனிவீற் றிருக்குமன மீட்க லாற்றான் புறவிடைபெற்
றடைந்து வினைநீங் கியமகவா னும்பரோடு மும்ப ருற்றான். (கoஅ)

என்னை யுரைத்தாஞ் சூதவனத் தெய்தி யுய்ந்தார் பெருந்தொகையே
யன்னை யிற்றும்பே ரருளுடையா னமுத நாத னடைந்தனவே
முன்னை வினைதீர்த் தருள்வானைக் கண் முற்று முகம்பற் பலகோடி
தன்னை நிலைசெய் தாயிலுமா சேடன் றனக்குஞ் சாற்றரிதே. ()

மலர்மெய்ஞ் ஞான சனற்கு மைந்தர்க் கன்னிகாம் விரிப்பதையென்
னுலகி லுயிர்க டிருவருள்பெற் றுய்யுமாறு நூல்சொல் சாதனம்பற்
பலவன் னவையா வருக்குமுறை பயிற்ற வருமையவைக்கெல்லாந்
இலக மியற்றற் கிலகு நிது சிவபுராண சிரவணமே. (ககo)

சிவபு ராண சிரவணமே செவிநூற் பலசொற் சாதகமெல்லாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்குஞ் செல்வத் திறங்களெலாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கு மனைநன் மக்களெலாஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கும் பல்வா றின்பமெலாம். (ககக)

சிவபு ராண சிரவணமே சித்த சுத்தி முதலளிப்ப
சிவபு ராண சிரவணமே செறிமும் மலத்தைத் தெறுவதுவே
சிவபு ராண சிரவணமே சீவ குணநீக் களிப்பதுவே
சிவபு ராண சிரவணமே திகழ்பே ரின்ப மருள்வதுவே. (ககஉ)

ஆன முறையா லவற்றிடையிக் கருமை திகழிச் சூதவன
மேன புராண முழுதேனு மேவு சருக்க மொன்றேனு
மான கவிகள் பலசிலவு மற்றொன் றேனு மியதிபெற
ஞான முறவோ துதல்கேட்ட னயக்கு மவரே பிறந்தவராம். (ககங)

இன்ன சூத வனக்காதை யெழுத மலரோ டந்தவர்மேற்
பன்னு முதவி புரிந்தவர்சீர் பாவு மவர்பூ சித்திடுவார்
சொன்ன முறையிற் பதிட்டைபுரி தூயர் முதலோ ரமுதேசன்
றன்ன தருளா னினைத்தவெலாஞ் சார்ந்து வாழ்வார் சாதமிதே. (ககச)

என்றுங் கெமையா ணந்திமுடித் திசைத்த முறையா லெழுவேட்கை
குன்றா தெனினுந் திருவிரையாக் கலியைக் கடந்து மேற்கூற
னன்றா காதென் றமைந்திருந்தா னன்கு முகன்சே யுணர்ந்து
னன்றா தரித்த முனிகுலத்துக் கறைந்தா னினைக் கமைந்தானால். ()

வேதம் வாழி முகில் வாழி விளைகூழ் வாழி யுயிர்க்கின்ப
சீதம் வாழி திருத்தொண்டச் செல்வர் வாழி பூதிமுதற்
சாதம் வாழி சித்தாந்த சைவம் வாழி யருளமுத
நாதன் வாழி யனைபெரிய நங்கை வாழி வாழியவே. (௧௩௬)

இந்திரன்றிருவிழாச்சருக்கமுற்றிற்று.

சூதவனபுராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௫௨௦.

---

சிவமயம்.

# சூதவனபுராணவசனம்.

## பாயிரம்.

சுத்தசாட்குண்ணிய பரிபூரண பராபரசிவமாகிய சிவபெருமான், உலகர் யாவரும் வேதார்த்தங்களை ஒன்றொன்றாக ஆராய்ந்து *நேதிகளைந்து அவற்றுள்ளே இது உபசாரம் இது உண்மையென்றாராய்ந்து தெளிந்து, அத்தெளிவினால் மலவில்லாத பதிப்பொருளன்றோ, உள்ளங்கைநெல்லிக்கனிபோல் வேதத்துள்ளே விளங்குவதாம். அப்பதிப்பொருள் இதுவே எவ்வாற்றானும் நிச்சயமென்று தேர்ந்துகொள்ளுதற்கரிதாதலால், அந்தவேதத்தினுட்பொருளை அவ்வகையாவரும் எளிதிலுணர்ந்துய்கவென்னுந்திருவுளப்பெருங்கருணையினாலே வெளியிட்டருளிய புராணங்கள் பதினெட்டாகும்; அவற்றுள்ளே அக்கினிபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, பிரமபுராணம் இரண்டு, விஷ்ணுபுராணம் நான்கு, சிவபுராணம் பத்தாகும். அச்சிவபுராணங்களுளொன்றாகிய பௌஷ்யோத்தரபுராணத்திலே க்ஷேத்திர கண்டத்திலே ஸ்ரீபிரகந்நாயகிசமேத ஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி அகோர சாந்நித்தியராய வீற்றிருந்தருளுகின்ற திருப்பசாதானமாகிய சூதவனஸ்தல மான்மியம் விளங்குகின்றது.

இதனை, சிவபிரான் உமாதேவியாருக்குபதேசிக்கும்போது, அவர்மடியின்மீது வீற்றிருந்துகேட்டருளிய ஸ்ரீசுப்பிரமணியபெருமான் நந்திதேவர்க்குபதேசித்தருள, அவர் சனற்குமாரருக்கு, அவர் வியாசமுனிவருக்கு, அவர் எனக்குபதேசித்தருளினரென்று சூதமுனிவர் சொல்லிய இச்சூதவனமான்மியமாகிய வடமொழியைத் தமிழ்செய்து தாருணாந்தாயபும்பொருட்டுத், தமிழ்மொழி பெயர்த்துத்தருகவென்று அச்சூதவனத்தின் கீழ்பால் ஒருகுரோசத்திலுள்ள ஆலங்காட்டிலே, பூர்வசியாகும் சக்திமே, கொடைநடையாதியுத்தமகுணங்களானிறைந்த † இராமநாதச்செட்டியார் செய்த அருந்தவப்பயனுடையிக் [illegible]

* நேதி - ந - இதி எனப்பிரிபட்டு, "அல்ல என்று" எனப் பொருள்படும் வடமொழி. எனவே வேதப்பொருள்களை ஆராயுங்கால் ப[illegible] ங்கள் அமையப்பெறுதனவற்றை இது பதிப்பொருளல்லவென்று [illegible] பதாம். பதியிலக்கணங்கள் அநாதிபோதாதி அஷ்டமங்கள [illegible]

† இவரை ராமசாமிசெட்டியாரென்றும் வழங்குப, [illegible] [illegible]னும் பொருளொன்றே.

உத்தமோத்தம சத்துவகுணவிலாச சிவநியமாநுஷ்டான சிவாநுக்கிரக சம்பந்த சிவபூஜாதுரந்தரராய்ப்பிரசித்திபெற்று விளங்குகின்ற ஸ்ரீமாந்-சிதம்பரச்செட்டியார் கேட்ப, அதனை மறுக்கமாட்டாமையால், அன்பும் அறிவுஞ் சிறிதுமில்லேனாயினும் மெய்யன்பர்கள் எண்ணியகாரியம் இனிது முடித்தருளுங் கிருபாவள்ளலாகிய சிவபிரான், அம்மெய்யன்பர் பொருட்டு இதனை இனிதுமுடித்தருளுவானென்று துணிந்து ஸ்ரீ சாம்பசிவகுரவசரணாரவிந்தங்களை வணங்கித் திருவருளைவேண்டி அதனுள் அடங்கிநின்று தமிழ்மொழி பெயர்த்து ஆயிரத்தைஞ்ஞூற்றிருபது திருவிருத்தங்களாகச் செய்தமைத்தேன்.

---

## அவையடக்கம்.

சொற்பொருளொழுங்கு சத்தி சிவரூபமேயென்பது சர்வாங்கீகாரம். ஆதலால், இப்புராணச் சொற்பொருள்களைச் சத்துவகுண விசிஷ்டர்களாகிய சாதுக்கள் சத்தி சிவரூபமாகவே கருதி அவற்றுட் சிவசரித்திரமகிமையைத் தெளிந்து சத்துவப்பயனைப் பெறுவார்கள். மற்றையோர் யாதுகாரணத்தாலாயினும் அதை மறந்து குற்றம்நோக்குவாராயின் அதற்குச்சமாதானஞ்சொல்லுதல் பரதந்திர வழிப்பட்ட எமக்குக் கடமையன்று. அன்றியும் சமஸ்தவாக்கியங்களும் சிவாஞ்ஞையானெறி நடவா என்று பெரியோர் சொல்லுதலால் இப்புராணச்செய்யுட்களை யான் செய்ததாக நினைத்துக் குணவான்கள் குற்றஞ்சொல்லார்கள். அப்படியன்றி என்வாக்கெனவேயெண்ணிப் பிறர் கூறினும் அக்கூற்றுடையார் இக்கவிகளிற்குற்றம்பார்க்கின் அது அவர்க்கேபழிப்பாகும். என்னை? நானேயென்றால் இறைவனாற் குற்றங்களெல்லாவற்றையும் நிறைத்துவைக்கப்பெற்ற அநேககசஞ்சியங்களோடு கூடியுள்ளேன். குற்றமே வடிவாகிய என்னிடத்து முற்றுங் குற்றமேயன்றி வேறு தோன்றாவாகலின்.

---

## புராண வரலாறு.

உலகெல்லாம்புகழ்கின்ற சத்துவகுண விசிஷ்ட புண்ணியபூமியாகிய நைமிசாரணியத்திலே முன்னொருகாலத்திலே, சௌனகர் முதலிய முனிவர்கள் சத்திரயாகஞ்செய்துவந்தார்கள். அப்போது சூதமுனிவர் சுவேச்சையாக, அங்குவந்தார். முனிவர் யாவரும் இருக்கைவிட்டெழுந்து, கரஞ்சிரமேற்குவிய எதிர்சென்று உபசரித்து அழைத்துவந்து ஆசனத்திருத்திப்பூசித்து நின்று முனிவர் பெருமானே? அடியேங்களுக்கு அநேகமுறை கருணைகூர்ந்து சிவபுராணாமிர்தம் புகட்டினீர்கள். சிறிதுந் தெவிட்டிலது; முன் சிவக்ஷேத்ர மகிமைகள் உபதேசித்துவருங்காற் சூதவனமென்றொரு உத்தம சிவஸ்தலம் உள்ளது, அது எத்தலத்தினுஞ்சிறந்தது, அத்தலத்தில் வீற்றிருந்

திருவுஞ் சிவபிரான் அன்பர்களுக்கு அருளிய திவ்யசரித்திர மகிமைகள் அளவில்லாதனவாகுமென்று சொல்லியருளினீர்கள். அம்மகிமாவிஸ்தாரங் கேட்பதில் மிகுந்த ஆசையுடையேம், அநுக்கிரகித்தருளுக என்று வேண்டிக்கொண்டார்கள்.

சூதமுனிவர், மிக்க விருப்போடு ஸ்ரீபிரகந்நாயகி சமேதஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி பாதபங்கயங்களைசிரமேற்கொண்டுதியானித்திருந்துபின் முனிவர்களே! உங்கள் கேள்வி உலகெலாம் உய்தற்கு ஒரு முக்கியகாரணமுமாகும். என்மனமும் அதனையே விரும்பியது. இச்சிவபுராணசிரவணமே யாவர்க்கும் சர்வாபீஷ்டங்களுங்கொடுப்பது. நீங்கள் கேட்ட இச்சூதவன மான்மியம் அபக்குவர்களுக்குச் சொல்லக்கூடாத அதிக ரகசியசரித்திரமாகும். இதனை ஸ்ரீ நந்திதேவர் சனற்குமார முனிவர்க்கு உபதேசித்தருளினரென்று அம்முறையே சொல்லத்தொடங்கினார்.

ஸ்ரீகைலாசத்திலே, செம்பொற்றிருக்கோயிலிலே, ஸ்ரீகண்ட பரமேஸ்வர சந்நிதானத்திலே, திருவருள்வெள்ளமென்றே யாவருந் துதிக்கின்ற அமுதமே நிறைந்துள்ள சிவதீர்த்தமொன்றுள்ளது. அதன் கரையிலே, ஆயிரக்கால் மண்டபமொன்றுண்டு. சுததவித்தியாமயமென்றே யாவராலுந் துதிக்கப்பெறும். அதனிடத்து அத்தமமுனிவர் கூட்டமும்வேதசிவாகமாதி சாஸ்திர முழக்கமும் எப்பொழுதும் நிறைந்து கொண்டேயிருக்கும். அம்மண்டபமத்தியிலே, வியாக்கிராசனத்திலே வீற்றிருந்தருளுகின்ற ஸ்ரீநந்திதேவரைச் சனற்குமாரமுனிவர் வணங்கிப் பூசித்துத் துதித்து அஞ்சலியஸ்தராய் நின்று, எம்பெருமானே! தாங்கள் முன் உபதேசித்தருளியசூதவனமான்மியத்தை இன்னும் விஸ்தாரமாகக்கேட்பதில் விருப்பும் மேலிடுகின்றது; திருவருள் புரிகவென்று வேண்டிக்கொள்ள, திருநந்திதேவர், அத்தலத்தையும் விநாயக சுப்பிரமணிய சாம்பசிவ பாதங்களையும் வணங்கித் துதித்து, நமது அருள்வழிப்புத்திர சிகாமணியாகிய சனற்குமாரனே! அவ்வியாஜகிருபாமூர்த்தியாகிய பரமசிவன் உலகெலாமுய்யும்பொருட்டு அநவரதசாந்நித்தியராய் வீற்றிருந்தருளுகின்ற சூதவனமாகிய உத்தம சிவஸ்தலமானது, அத்தியந்தநிர்மல ஸ்தானமாயத் தென்சமுத்திரத்திலுள்ள இராமசேதுவின் ஈசானதிசைவிளங்கவீற்றிருப்பது, இந்த உத்தம சிவஸ்தலமே இப்பூமிக்கு திருவருட் டுணையாய விளங்குவது. தன்னையடைந்தார்க்கு மகாபாதகாதி சமஸ்த பாவங்களும் நீக்கிச் சர்வாபீஷ்டங்களுங் கொடுத்து மோக்ஷத்தையுங்கைப் பொருளாக்குவது. இத்தலத்தின் பெருமை முழுதினைச் சிறந்தோராலும் எத்தனை கற்பகாலம் இருந்து சொல்லினும்முடியாது. அங்ஙனமாகவும் நீ அதனைக் கேட்பதிற் கொண்ட பேராசையை மறுக்க முடியாமையால் ஒரு சிறிது சொல்லத் துணிந்தோம். இத்தலமான்மியம் பதினொன்கு பகுதியாய உள்

ளன. அவையாவன, தலம், தீர்த்தம், மூர்த்தி விசேடமென்றும், சூதவன நாமகாரணச்சருக்கம், ஆதிசேடனுபதேசம்பெற்றசருக்கம், ஆதிசேடன் சிவலிங்கம் பெற்ற சருக்கம், ஆதிசேடன் சூதவனஞ்சென்ற சருக்கம், ஆதிசேடன்றிருப்பணிச்சருக்கம், ஆதிசேடன் சிவார்ச்சனைசசருக்கம், வருணன் சாபமோசனச் சருக்கம், மார்க்கண்டச் சருக்கம், ஸ்ரீராமன் மந்திரோபதேசச் சருக்கம், அமுதநிவேதனச்சருக்கம், திருவிழாசசருக்கமென்றுமாம். இவற்றை வரிசைக்கிரமமாக அறிந்தவாறு விரித்துரைக்கின்றேம்; கேட்பாயாக வென்று திருநந்தி தேவர்சொல்லத் தொடங்கினர்.

---

## தலவிசேடம்.

சனற்குமாரமுனிவனே! மகாமேருகிரியின் தென்றிசையிலே, சம்புத்தீவிலே, பாரதகண்டத்திலுள்ள தமிழ் நாடாகிய குலமகட்கு முகமென விளங்குகின்ற சோழ நாட்டிலே, அம்முகத்திற்கண்போல இச்சூதவனம் பிரசித்திபெற்று விளங்கும். அது காவேரிக்குத் தெற்கே மூன்று யோசனை தூரமும் வேதாரணியத்துக்கு மேற்கே இரண்டு யோசனை தூரமும் தென்சமுத்திரத்திற்கு வடக்கே ஐந்துகுரோசதூரமுமாகியவெல்லையிலுள்ளது. அத்தலத்தின் அகலம் மூன்றுகுரோசமாகும். இச்சூதவனம் முற்காலத்தில் ஸ்ரீராமன்இராவணனாகியபகைவனைவெல்லுதற்குபாயமந்திரம்பெறவேண்டித்தன்னிடம்வந்துஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமிதிருவருள்பெற்றுஉபாசனைசெய்தமையாலும்,செல்வம் கல்விஞானம் முதலியதிருக்கள் எப்போதும் சாலிகமொண்டிருத்தலாலும், திராவிடவேதப் பிரதிபாத்தியமாகிய திருவசாத்தானமென்னுந் திவ்ய நாமம் பெற்றது. இத்தலத்தை யாரடைந்து அஷ்ட சித்திகள் அஷ்டபோகங்கள்சித்தசுத்தியாதி பரமுத்திமுதலிய வெவற்றைவேண்டினும்வேண்டியபடிபெறுவார்கள். சமஸ்த சிவஸ்தலங்களுள்ளும் இத்தலமேயாகுமெனத்துணிந்துஎல்லாத்தலங்களிலும்வசித்த எல்லா முனிவரும் இங்கு வந்து திருவருள் பெற்றுஎப்போதும்வசித்தலால், இது பிருதுவிதத்துவமென்றுசொல்லவுந்தகும். விருப்பத்தோடு தன்னை அடைந்தவர்களுடைய பாவங்களாகிய மண்மலைகளை முழுதுங்கரைத்துப் பேரின்பமாகியசலத்துவத்தைக்கொடுத்தலால்அப்புதத்துவமென்றுசொல்லவும்படும். எவராயினும்தன்னையடைந்தவர்களுடைய பிறவிக்காட்டைத் தகித்தலாற்றேயுதத்துவமென்று சொல்லவும்படும். தன்னையடைந்தாருடையபாவமலைகளைப்பேர்த்தெறிதலால்வாயுதத்துவமென்றுசொல்லவும்படும். தன்னையடைந்த அன்பர்களுக்கு ஞானாகாசநித்தியானந்த மளித்தலால் ஞானாகாசதத்துவமென்றுசொல்லவும்படும். இத்தலத்தைக் கண்டவர்கள் முன் எவ்வகைப் பிராப்தமாகத்தக்கபாதகங்கள் எவ்வளவு செய்திருந்தாலும் அவ்வளவும் நீங்கப்பெறுவார்கள். இத்தலத்தில் வசி

